பக்கம்

நயன வைத்தியம்:

அகத்தியர் நயனவிதி ... ... 13, 14
சாபேந்திரர் நயன வைத்தியம் ... 87
நயன சாஸ்திரம் ... ... 177

இரண வைத்தியம்:

அட்டை விதி ... ... 38
சத்திர விதி ... ... 39
சாபேந்திரர் இரண வைத்தியம் ... 112

விஷ வைத்தியம்:

சர்ப்ப சாஸ்திரம் ... ... 212
சர்ப்பாரூடம் ... 208, 209, 213
சாபேந்திரர் விஷ வைத்தியம் ... 102
சித்தாரூடம் ... 32, 209, 211, 213
பாம்புகளின் சாதியும் குணமும் ... 173
பாம்பு மருந்தும் மந்திரமும் ... 168
விஷமருந்து அட்டவணை ... ... 212
விஷ வைத்திய அட்டவணை... ... 152, 210

குதிரை வைத்தியம்:

அசுவ வைத்தியம் ... ... 117

மாட்டு வைத்தியம்:

மாட்டு வைத்திய அட்டவணை ... 118, 185

காயகற்ப நூல்:

கொங்கணர் கற்பவிதி நூறு ... 62
சட்டைமுனி கற்பவிதி நூறு ... 42
போகர் கற்பவிதி முந்நூறு... ... 82

பக்கம்

இரசவாத நூல் :

அகத்தியர் முப்புச் சூத்திரம் இருநூறு ... 27
இரசவாத அட்டவணை ... ... 148
கொங்கணர் சூத்திரம் நாற்பது ... 64
கொங்கணர் நடுக்காண்டம் ஆயிரம் ... 58
கொங்கணர் பலதிரட்டு ஐந்நூறு ... 59
சட்டைமுனி வாதகாவியம் ஆயிரம் ... 43, 46, 47
சட்டைமுனி நிகண்டு ஆயிரத்திருநூறு 45
சுந்தரானந்தர் சூத்திரம் நூற்றுப்பத்து 47, 48
திருமூலர் எண்ணாயிரத்துள் குருசுகுரு 78
திருமூலர் எண்ணாயிரத்துள் வகாரத்திரயம் 79
திருமூலர் திருமந்திரம் ஆயிரம் ... 76
திருமூலர் வகாரவுபதேசம் இருநூறு ... 77
போகர் நிகண்டு ... ... 165
போகர் நிகண்டு அட்டவணை ... 51
மச்சமுனி கடைக்காண்டம் எண்ணூறு 57
மச்சமுனி கலைஞானம் எண்ணூறு ... 53
மச்சமுனி நிகண்டு நூற்றூறு ... 55
மச்சமுனி முப்புதீட்சை எண்பது ... 52

சித்தயோக சாஸ்திரங்கள் :

அகத்தியர் தீட்சாவிதி இருநூறு ... 30
அகத்தியர் பூஜாவிதி இருநூறு ... 28

மந்திர யந்திர ஜாலநூல்கள் :

அகத்தியர் தண்டக சூத்திரம் இருபத்தைந்து 24
அகத்தியர் தண்டகம் நூறு ... 25
அகத்தியர் பட்சணி நூற்று முப்பத்திரண்டு 26
கொங்கணர் தண்டகபட்சணி நூறு ... 65

பக்கம்

திருமூலர் தண்டகம் நூறு ... ... 74
மச்சமுனி பெருநூல் ஜாலகாண்டம் எண்ணூறு 49
மந்திரங்களும் ஜாலங்களும்... ... 182
மந்திர யந்திர அட்டவணை ... ... 180

வாண முறைகள்:

வாண முறைகள் ... ... 199

சோதிட நூல்:

கவுளி காதல் ... ... 167
காதல் ... ... 195
தும்மல் காதல் ... ... 167

உபநிடதம்:

கருடோபநிஷத்து ... ... 200

தோத்திரம்:

ஈச்வரி பூஜை ... ... 205
விநாயகர் அகவல் ... ... 173
விஷ்ணு தோத்திரம் ... ... 166

---

## அச்சுப் புத்தகங்கள்.

அகமே புறம் ... ... 220
அருச்சன சந்நியாசி ... ... 244
ஆத்மயோக மனோவசியம் ... ... 246
இன்னிலை விருத்தியுரையுடன் ... 215
கன்றும் கனியுதவும் ... ... 225
காதம்பரி ... ... 241
குலசேகராழ்வார் பிரபந்தம் ... 239

| | | | |
|---|---|---|---|
| சிற்றின்ப சிரோமணி | ... | ... | 233 |
| சோழன் கரிகாலன் ஆராய்ச்சி | | ... | 228 |
| திருக்குறள் மணக்குடவர் உரை | | ... | 214 |
| திருப்பாணாழ்வார் பிரபந்தம் | | ... | 240 |
| திருமழிசையாழ்வார் பிரபந்தம் | | ... | 236 |
| திருமழுவாடிப்புராணவசனம் | | ... | 232 |
| தொண்டரடிப்பொடியாழ்வார் பிரபந்தம் | | | 238 |
| நஷ்டஜாதக தீபிகை | ... | ... | 230 |
| நூதன இந்தியா | ... | ... | 243 |
| பாடத்திரட்டு | ... | ... | 223 |
| பெரியாழ்வார் பிரபந்தம் | ... | ... | 235 |
| மனம்போல வாழ்வு | ... | ... | 222 |
| மானச தந்தி | ... | ... | 249 |
| மெய்யறம் அரும்பத உரையுடன் | | ... | 217 |
| மெய்யறிவு உரையுடன் | ... | ... | 218 |
| மெஸ்மெரிஸம் | ... | ... | 247 |
| வலிமைக்கு மார்க்கம் | ... | ... | 221 |
| வள்ளியம்மை சரித்திரம் | ... | ... | 224 |
| ஹிந்துமத ஸ்தாபனம் | ... | ... | 250 |




# A DESCRIPTIVE CATALOGUE

OF THE

# TAMIL MANUSCRIPTS

IN THE

# TANJORE PALACE LIBRARY.

---

## வைத்திய சாஸ்திரங்கள்.

---

### வைத்திய நூல்.

தமிழில், வைத்திய நூல்கள் பதினெண் சித்தர்களால் இயற்றப்பட்டனவென்று சொல்லுகின்றனர். சித்தர்கள் பெயர் ஒருவகையாகச் சொல்லப்படவில்லை. இந்த சித்தர்களை வடமொழி தென்மொழிகளிலுள்ள நூல்களில் சொல்லப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. சித்தர் நூலென்று சொல்வன எல்லாம் காயற்பட்டினத்து துலுக்கர்களால் எழுதப்பட்டவை என்று சரித்திர ஆராய்ச்சி வல்லோர் கூறுகின்றனர். காயற்பட்டினம் என்பது, தாம்பிரபாணி முகத்துவாரத்தில் இருந்த கொற்கை என்னும் கரைதுறைப்பட்டினம் மகிமை குன்றியபின் அதனருகே கடலோரத்தில் தோன்றிய ஊராகும்.

இந்த லைபிரேரியில், அகத்தியர், தேரையர், சட்டைமுனி, மச்சமுனி, பிரமமுனி, யூகிமுனி, போகர், கொங்க

ணர், திருமூலர், சுந்தரானந்தர், தன்வந்திரி, யாகோபு என்பவர்கள் இயற்றிய நூல்கள் இருக்கின்றன. இவைகளையல்லாமல், சரபேந்திரர் இயற்றிய வைத்திய நூலும், கொற்கைக்கோமான் எழுதிய அசுவவைத்தியமும், வல்லபேந்திரர் இயற்றிய வைத்தியமும் இருக்கின்றன.

அகத்தியர்: இவர் தமிழிற்குப் பெரிய இலக்கணம் இயற்றியவர். தமிழ்ப்புலவர் பலரைக் கூட்டிச் சங்கம் ஏற்படுத்தியவர். தொல்காப்பியர், பனம்பாரனார் முதலியோர்க்கு இலக்கண இலக்கியங்களைக் கற்பித்த ஆசிரியர். இவரியற்றியதாகச் சொல்லப்படும் தமிழ் வைத்திய நூல்கள் மிகவும் தாழ்ந்த நடையும் இலக்கணவரம்புக் குட்படாத தன்மையும் உடையனவாக இருக்கின்றன. இதனால், தமிழ்மொழியைச் சீர்ப்படுத்தி இலக்கணம் அமைத்தவர் இத்தகைய நூல் இயற்றினாரெனல் அமையாது; அகத்தியரென்னும் பெயருடைய வேறு யாராவது எழுதியிருத்தல் வேண்டும்; அல்லது எவரேனும் எழுதி அகத்தியர் பெயரை வைத்திருக்க வேண்டுமெனத் தோன்றுகிறது.

தன்வந்திரி: இவர் தெய்வலோக வைத்தியர். தமிழ்மொழியில் வைத்திய நூல் செய்திருப்பாரென நினைப்பதற்கு ஆதாரம் காணப்படவில்லை. ஆதலால் தன்வந்திரி எனப் பெயருடைய தமிழ் வைத்தியரே செய்திருத்தல் கூடுமெனத் தோன்றுகிறது.

இத்தஞ்சையின்கண் (கி. பி. 1800-1832) ஆட்சிபுரிந்த மகாராஷ்டிர அரசருள் ஒருவராகிய சரபோஜி மகாராஜா தன்வந்திரிமால் என வைத்திய சபை ஒன்று ஏற்படுத்தி வைத்திய நூல்களை ஆராய்ச்சி செய்து அருமையான அநேக மருந்துகளைச் செய்வித்தனரென்றும் அம்மருந்துகள் இன்னும் உபயோகப்பட்டு வருகின்றனவென்றும், தஞ்சைவாசிகளில் வயதுசென்ற பலரும் கூறுகின்றனர். இதுவு

மன்றி வைத்தியத்தில் தேர்ந்த பலரைக்கொண்டு வைத்திய நூல்கள் இயற்றுவித்தனர். அந்நூல்களில், "சரபவேந்தரையே" "சரபேந்திரமால் கூறுமாறே" "சரபேந்திர பூபதி சொல் பண்பிதாமே" எனப் பலவிடத்தும் கூறப்பட்டிருப்பது இதனை வற்புறுத்தும். இந்நூல்களே சரபேந்திரர் வைத்தியம் எனப்படும்.

யாகோபு: இவர் வைத்திய நூல் இயற்றியவருள் ஒருவராவார். இவர் மகம்மதிய மதத்தினரென்பது இவரது பெயரானும் விளங்குதலால், சரித ஆராய்ச்சியாளர் கூற்று இங்கு கவனிக்கத்தக்கது. இன்னும், அசுவ வைத்தியம் எழுதியவர் கொற்கைக் கோமான் என்னும் பெயரினர். கொற்கையோ வென்றால் காயற்பட்டினத்தருகிலிருந்த ஊர். இவ்வூரினர் வைத்திய நூல் எழுதினரென்பார்க்கு இதுவும் அநுகூலமாதல் காண்க.

---

## 1. No. 1 அகத்தியர் ஆயிரத்து ஐந்நூறு.

ஏடுகள் 281 ; Lines 5 in a Page.

இதில், வாத பித்த சிலேட்டுமம் என்கிற மூன்று நாடிஸ்தானங்களும் அவற்றின் குணமும், ரோக லட்சணமும் அவற்றிற்கு மருந்துகளும், சரக்கு சுத்தியும் பலவகையான நெய், எண்ணெய், மாத்திரை, செந்தூர முதலியவைகளைச் செய்யு முறையும் சொல்லப்பட்டுள்ளன.

Beginning

பாருடன் கணேசன் பாதம் பரிந்துமுக் குணங்களாய
வாகடச் சுவடியெல்லாம் வகைவகை தொடுக்குங் காலே
யாகிட விதியின் சூழ லறிந்திடு நோய்சட் டெல்லாம்
போகிட மருந்து சொல்வோம் புலத்தியர் புரிந்துபாரே 1

புரிந்தோ ருந்திக் கீழே புகன்றெழுஞ் சுழியைப்பற்றி
யிருந்தோர் நாடி தானு மெழுபத்தீ ராயிரமாஞ்
தெரிந்தோ ரிலத்திற் பத்துத் திசைநாடி யிவற்றில்
மூன்று
பரிந்தோர் வாத பித்தம் படரைய மறிந்து கொள்ளே 2

End :

சுகமாக நாளொன்று களஞ்சு மூன்று
சுத்தமாய்க் கொண்டக்காற் சொல்லக்கேளு
யுகமூழி காலத்திற் காப்பனில்லை
ஒன்றுமா காதுமறு பத்தியங்கள் கடந்தால்
செகமேழும் புகழவே சங்கவேர்ப் பத்திரி
சீர்பெறவே வாரியுப்பை வெந்து வைத்துக் கூட்டு
விகமேழும் காண்பதுபோ லோண்டத் தெண்ணெய்
எப்பொழுது மொன்றைவிட் டொருநாள் மூள்கே 782

---

## 2. No. 2 அகத்தியர் ஆயிரத்து ஐந்நூறு.

ஏடுகள் 244; Lines 5 in a Page.

இது முன் பிரதியோடு தொடர்ந்த பிரதி இதில் 783-ம் செய்யுள் முதல் 1422-ம் வரையிலும் இருக்கிறது.

---

## 3. No. 3 (a) அகத்தியர் சூத்திரம் அறுநூறு.

ஏடுகள் 203; பூர்த்தி Lines 5 in a page.

இதில் கெந்தி சூதம் தாளகம் பாஷாணம் முதலிய சரக்குகளின் சுத்தியும் காந்தம் லோகம் அபிரேகம் மண்டூரம் முதலிய செந்தூர முறையும் சுரம் சன்னி நீரிழவு க்ஷயம் குட்டம் முதலிய ரோகங்களுக்கு மருந்துகளும் பிறவும் சொல்லப்பட்டுள்ளன. இது சூத்திரம் என்று சொல்லப்பட்டிருப்பினும் வைத்திய நூல்களில் பெரும்பாலும் எந்த செய்

யுட்கள் காணப்படுகின்றனவோ அந்த செய்யுட்களாலேயே அமைக்கப்பட்டுள்ளது.

Beginning:

பாருடன் கணேசன் பாதம் பணிந்து முக்குணங்களாய வாகடத் தொகுதி யெல்லாம் வகுத்தது சூத்திர மாக்கி யாகமவிதி நூலாலே யடைந்திடும் வியாதிக் கெல்லாம் போகவே மருந்து சொல்வோம் புலத்தியா புகழ்ந்துகேளே.

*   *   *   *

கரைந்தந்தக் காடியெல்லாந் தெளிய வைத்துக்
கலங்காம லிறுத்தப்பா வுலர வைத்து
நிறைந்ததொரு செந்தூர பற்பம் பண்ணு
நிலைத்தெந்த நோயேனு நீங்கிப்போகும்
தறைந்தொளிர் தாம்பூரத்தின் சுத்தி கேளு
சல்லிபோற் றாம்பூரத்தை நறுக்கி வாங்கி
நிறைந்திடுவாய் புளி மோரிற் காணச் சாற்றில்
நீயேழு தரங்காய்ச்சித் தோய்த்திடாயே. 21

End:

பாரப்பா பொருளருள் காணவென்றால்
பரப்பைவிட்டுச் சூத்திரத்தைப் பச்சம் வைத்து
பாரப்பா வுள்ளபடி சொல்லிவிட்டேன்
பரப்பில்லை அறுநூறு பதறு நின்று
பாரப்பா தசமூல காடி தன்னைப்
பராபரையைப் பூசித்துப் பானமுண்டு
பாரப்பா அறுபத்து நாலு சித்தும்
பலிக்குமிந்தப் பண்டித சூத்திரந்தான் முற்றே 582

Colophon:

சிவமயம் தேவிசகாயம் திருப்பாதந்துணை.
திருச்சிற்றம்பலம். ராமஜயம்.

## 4. (b) தேரையர் வைத்தியம்.

Lines **5** in a Page.

இதில் விரோசன முறைகளும் விஷத்திற்கு மருந்தும் சொல்லப்பட்டுள்ளன. இதில் 15 செய்யுட்களே இருக்கின்றன. அபூர்த்தி.

**Beginning:**

கருமஞ் சிதகாது கைகூடும் செல்வந்
திருமங்கை யன்புடனே சேர்வ--ளருமந்த
பானைவயிற் றானை மருப்பாணிவிருப் பரிணமதத்
தானைமுகத் தானை நினைத்தால்.

தூது பத்திரி தூந்திது வக்கறும்பூ
தாது மிக்க தணலை யெழுப்பிடுங் காய்
வாத பித்த விருமலை மாற்றிடும் வேர்
நூறு மட்டும் வியாதி தவிர்க்குமே

மிளகரை கடுக்கா யொன்று மிகுத்தவா மணைக்கிரண்டு
வளமிகு வாளமேழு வருநீலிச் சாற்றால் கூட்டி
குளமகிழ் பழத்திற் றேனிற் கூடவோ ருண்டை கொண்டா
லளவறு சீதமேகு மானதோர் குளிர்நீர் மாற்றே.

**End:**

தும்பைத்துளிர் துளபத்துளிர் லவணத்தொடு மிளகு
நம்பிக்கொடு நவிலக்கொடு நாசிக்கொடு விட்டால்
வெம்பிக் கொடு விக்கிக் கொடு விதிபோல் வருவிடமுங்
கம்பிக்கொடு கதறிக்கொடு கடலிற் புகும்விடமே. 15

---

## 5. No. 4 அகத்தியர் அறுநூறு.

ஏடுகள் 198 ; பூர்த்தி Lines 5 in a Page.

இதில் வெடியுப்புச் சுன்னம், அப்போகம், காந்தம், கிட்-

டம், லோகம் முதலிய செந்தூரங்கள், லேகியங்கள், மதன காமேஸ்வர சூரணம், மதனகாமேசரிக் குளிகை தங்கம், வெள்ளி, முதலிய பற்பங்கள் செய்யும் முறை சொல்லப் பட்டிருக்கிறது. அச்சிடப்பட்டுள்ளது.

Beginning:

கருணைதரும் ஐங்கரனே காப்பு வாணி
    கலந்த இந்த சூத்திரந்தான் கருவாய்ப்பாடத்
திருவுமையாள் மனோன்மணித்தாய் செப்பக் கேட்டுத்
    தெளிந்தகுரு நூலாகத் திரட்டிப் பாடிக்
குருமகிமை சித்தியுண்டாம் ஞானம் வாய்க்கும்
    குபேரனென நிதிமருந்துங் கூடும் கூடும்
பெருமை மெய்க்கக் கீர்த்தியுண்டாஞ் சித்தர்க்கெல்லாம்
    பெருநூலில் குறுக்கி யிந்த அறுநூறு தானே. 1

தானென்ற வாசி முதல் யோக ஞானம்
    தவறாது வாதமொடு வைத்தியமுஞ் சித்தி
வானென்ற சிவயோக போதங் காணும்
    வைத்தியத்துக் குயிரிதுகாண் மருந்து வேகம்
நானென்று ஆணுவமும் மாய்கை தள்ளி
    நடந்தாக்கா லிந்நூலின் மகிமை மெத்த
தேனென்ற பாற்கடலுங் கருப்பம் பாகும்
    திரட்டியொரு கட்டியாய்த் தெளிந்த காப்பே.

End:

உண்டா மெழுநூறு வைத்தியத்தில்
    ஒடுக்கஞ் சூத்திர மெண்பதுண்டு
பண்டாரங் குருவொ நூத்தன்பதில்
    பாரும் வழலைப் போக்கன்பதுண்டு
வேண்டாம் நூல்களிதுவே போதும்
    விடாதே நூல்கள் ஒருத்தருக்கும்

கண்டாயறு நூறும் வெளிவிடாதே
காட்சி யெழுதி முடிந்ததுவே. 625

Colophon:

சிவகிருபை யுண்டாகவேணும் குருபாதமே துணை. இந்த சாத்திரம் வைத்தியம். 600 செகநாத வைத்தியர் குமாரன் அய்யாசாமி வைத்தியருடைய சுவடி பார்த்து எழுதினது. மேல் பிரதி ஆடிமீ 19உ சோமவாரம் அய்யா சாமி வாத்தியர் கையில் கொடுத்து விட்டது. இந்த சாத்திரம் எழுதினது வெங்கிடேசபிள்ளை குமாரன் சுப்பராய பிள்ளை எழுதி முகிந்தது முற்றும்.

---

## 6. No. 5 அகத்தியர் பதார்த்த குண சிந்தாமணி.

ஏடுகள் 172; அபூர்த்தி Lines 5 in a Page.

இது இன்னின்ன பதார்த்தம் இன்னின்ன குண முடையதெனக் கூறுவது. அச்சிலுள்ள பதார்த்த குண சிந்தாமணியினும் இது வேறு.

**Beginning:**

வெள்ளைக் கலையுடுத்தி வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள்—வெள்ளை
அரியா சனத்தி லரசரோ டென்னைச்
சரியா சனம்வைத்த தாய்.

ஆதியு நடுவுமில்லா அம்பிகை பாகன் மேனாள்
வேதனுக் குரைப்ப வேதன் மேகநா தனுக்குச் சொன்னான்
போதிவிந் திரனும் அசுவதேவர்க்குப் புகன்ற தன்றே
கோதிலா அசுவ தேவர் தன்வந்திரி கூறினரே.

கடுநெல்லி தான்றி கனத்த சித்ரமூலம்
நடுவாஞ் சிவதைநேர் நாடில்—வடிவான

கள்ளே கமழுங் கனங்குழ லாயகா
னுள்ளே விஷமென் றறி.

End :

முருக்கா யாசத்தி முண்டகமுந் தாதுக்
.........மணக்கிலேயோ டெச்சில்—பெருக்கவே
யுண்டானு நோய்பிடிக்கு முண்டுகினும் பொல்லாது
சண்டாள ரேபொசிப்பார் தான்.

---

## 7. No. 6 அகத்தியர் பதார்த்த குண சிந்தாமணி.

ஏடுகள் 317 ; Lines 2—4 in a Page.

இதுவும் முற்பிரதியைப் போன்றது. அச்சிடப்படவில்லை.

Beginning:

வன்புதரு வாதகுன்மமதனை மாற்றி
மருத்திடு மார்கணமுஞ் சுரமுந் தீர்க்கும்
துன்பமுறு சயரோகம் பீலிகை தானும்
துர்நாம ரோகம் போய் சுகமுண்டாகும்
அன்புதரு தீபநமாம் கிராணி மாறும்
அசீரண மொடு சேத்து மத்தை அரிக்கு மேகப்
பண்பு செறி நாசத்தம் பழுத்தின் மார்க்கம்
பாருண்டு குணந்தனையே பகருங் காலே.

நாளுழித் தேனுக்கு நற்பா லுழக்கிட்டுத்
தானேபால் சுண்டியிடத் தக்கதாய்—மானேகேள்
காச்சியே கொண்டாற் கனத்தவிஷ மாறி
வாச்சமுத மாமே மது

End :

ஏழாயிர வருட மிருக்கலாங் காயசித்தி
கீழா நெல்லிச் சமூலங் கேள்பின்னே—வீழாது
தாதுவெகு வெட்டை தணியுமே தாரணியில்
கோதுபிற மேகம்போம் கூறு

---

### 8. No. 7 அகத்தியர் பதார்த்த குண சிந்தாமணி.

ஏடுகள் 171 ; அபூர்த்தி Lines 4 in a Page.

இதுவும் முற்பிரதிகளைப் போன்றது அச்சிடப்படவில்லை.

---

### 9. No. 8 அகத்தியர் கர்மசூத்திரம் முந்நூறு.

ஏடுகள் 105; Lines 5 in a Page.

இதில் இன்ன கர்மத்தால் இன்ன நோய் வந்ததென்றும் அதற்கு சாந்தி இன்னதென்றும் அதனைத் தீர்ப்பதற்கு மருந்து இன்னதென்றும் கூறப்பட்டுள்ளது. சூத்திரமெனக் கூறப்பட்டிருப்பினும் விருத்தத்தாலமைந்தது.

Beginning :

பூரணமாய் மூலமுத லாறு தாரம்
புரியஷ்டக் தசவாயுவு நாடிமூன்றும்
காரணமாயிடை பின்னாய்ச் சுழுனையாகிக்
கலந்து நின்ற வாதபித்தஞ் சிலேற்பனமாகி
யாரணமாய்ச் சடத்துள்ளே தத்துவங்கள்
மனம் புத்தி யாங்காரஞ் சித்தத்தாலே

வாரணமாய் நடத்திவித்த கர்மத்தாலே
  வந்துதடா நோய்களெல்லா மனுடர்க்காமே.

ஆமப்பா மனுடர் செய்த கர்மத்தாலே
  அரகரா மேகமென்ற ராசாவாலே
காமப்பால் விதனத்தாற் பொசிப்பி னாலுங்
  கைக்கடங்கா நோய்கள்வருங் கன்மத்தாலே
போமப்பா மேகம்வந்த காரணந்தான்
  புகலுவேனுயிர் வகைகள் செய்ததாலே
நாமப்பா கண்டபடி சொன்னோங் கேளு
  நலமான வாதசலம் பித்த சலமாமே.

End

வரிசையாய்ச் சொல்லுகிறேன் கலைகளேது
  மாந்தமொ..............................
பரிசமாங் காப்பனொடு பறங்கிய............
  பட்சியொடு பறவையுட தோஷமேது
.......................................வருவதேது
  தீர்க்கமடா சிறுவருக்குத் தேவாமிர்தங்
கரிசனமா மின...........................
  டான மருந்து வகை கணக்குமுத்தே. 302

முற்றும் சிவமயம்.

குறிப்பு :

இதில் கடைசி யேட்டில் பாதி முறிந்து விட்டது. 'வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம்' என்னும் செய்யுள் அதில் எழுதப்பட்டுள்ளது. முதலிலும் கடைசியிலும் மும் மூன்று வெற்றேடுகள் கோக்கப்பட்டுள்ளன.

## 10. No. 9 அகத்தியர் கர்மகாண்டம் முந்நூறு.

ஏடுகள் 93; பூர்த்தி Lines 5 in a Page.

இதில் மேகம், குன்மம், க்ஷயம், பாண்டு, மகோதரம் நீரிழிவு முதலிய நோய்களுண்டாகும் விதமும் அவைகளுக் கேற்ற சாந்தியும் மருந்துகளும் சொல்லப்பட்டுள்ளன. 8-ம் நம்பர் கன்மசூத்திரத்திலும் இதுவேறுபட்டது. இதனை இயற்றியவர் அகத்தியர் என்று குறிக்கப்பட்டிருக்கிறது.

Beginning :

பூரணமாய் முழு மூலப் பொறியிற் சூடாய்ப்
 புகையெழும்பி மேகமதாஞ் சிரசிற் சூடாம்
காரணமாய் நீரேற்கும் பீனிசப்பேர் கொள்ளுங்
 கனலெழுந்த வாயுவதாங் கபால மெல்லாம்
சீரணமாய்ப் போகாது வாத பித்தஞ்
 சிலேற்பனந்தான் மூன்றாலே நோய்களெல்லாம்
தாரணையாய்த் தசவாய்வில் மூன்று வாய்வு
 சமான னொடு பிராணனபானன் றானே.

End

சித்திபுண்டா மவுனத்தில் சொல் பெரியோர்க்கு
 தேறுன மன துரிமை யறிவினாலே
பத்தியாய் நினைத்தபின்பு பாவம் போச்சு
 பஞ்சபொறிபுலனுண்மை பரிந்து போச்சு
எத்திசையுங் கொண்டாடு மிந்த நூலை
 யெளிதாக எல்லோர்க்கு மீயவேண்டாம்
முத்தியாமிந்த நூலெவர்க்கானாலு
 மோக்ஷமடா மூன்று நூற்றொன்று முற்றே. 298

கர்மகாண்ட முற்றும்.

## 11. No. 10 அகத்தியர் நயனவிதி.

ஏடுகள் 69; Lines 5—6 in a Page.

இது, கண் ரோகங்களின் வரலாறும், அவற்றின் பேதங்களும் அவைகளுக்கு மருந்துகளும் கூறுவது. அகத்தியர் நயனவிதி 500 என்று சில வைத்தியர் சொல்லுகின்றனர். இதன் தலைப்பில் நயனவிதி 300 என்று எழுதப்பட்டிருப்பினும் இதில் 345 பாடல்கள் இருப்பதனால் இது அகத்தியர் நயனவிதி 500 என்று எழுதுவதற்குப் பதிலாக 300 என்று எழுதியிருக்கவேண்டுமெனத் தோன்றுகிறது சிற்சில இடங்களில் பூச்சி அரித்திருக்கிறது. அச்சிடப்படவில்லை.

Beginning:

மாதுமை பாகர் சொன்ன மாமறை முதலை யாய்ந்து
தீதுகள் வாராதென்று திருவுளத் தருளினாலே
ஆதிமா முனிவர் சொன்ன ஆயுரு வேதத்துள்ளே
நாதனார் தெரிந்துரைத்த நயனமாம் விதியிதென்றே.
உயர்ந்திடும் நயனந் தன்னில் உறுபிணி வியாதியெல்லா
மயங்கிடு மிருளாயுற்று வருந்திரி தோஷந் தன்னால்
வியங்கிட மேவிநிற்கும் விரவிய மருந்து தானும்
தயங்கிய கிரியை செய்யத் தானிது கூறலுற்றேன்.

கருமணி தன்னில் நோய்கள் கலந்திடும் நாற்பத்தஞ்சு
மருவிய வெள்ளை தன்னில் மருண்டிடு மிருபதென்க
குருவிய பாவைதன்னில் குறித்ததோ ரொருபத்தாறு
கருவுமாங் கடையில் நிற்கும் பதினைந்து தோஷந்தானே.

End:

லேகு சந்தனாதி.

வாசமுறு சந்தனம் பிச்சமலரோரொன்று வருகாசனி
டையிரண்டாம்

வரிசையுள்ள காவிக்கல் கோரோசனை திப்பிலி வளர்
சிரங்காசிடை
நேசமுடனே தண்ணீர் வார்த்தரைத் தோர்சாமம்
நீளவேகயிறு சேர்த்து
நிழல் தன்னிலுலர்த்தியே முலைப்பாலிடுகண்ணி
லெரிவு சதைவளர்த்தி
காசமுடனே திமிரங்கண்குறுகு பில்லமும் கடிய
நிலைமயிளிகண்ணுமே
கண்ணெரிவுந்திடுமென்ன கோபமுற்றும் கண்ணுள்ள
நோய்களெல்லாம்
தேசமுறுமா தவன் கண்டவிருள் போலவே தீருமே.
345

---

## 12. No. 11 அகத்தியர் நயனவிதி.

ஏடுகள் 107; ஆபூர்த்தி Lines 5 in a Page.

இது, 10-ம் நம்பரைப் போன்றது. இதில், நயனரோகம் 96-இன் பெயர்களும் தனியே எழுதப்பட்டுள்ளன. இது முன்பிரதியைவிட சுத்தப்பிரதியாகக் காணப்படுகின்றது. இதில் 150 செய்யுட்களே இருக்கின்றன.

---

## 13. No. 12 குணவாகடம்.

ஏடுகள் 84; அபூர்த்தி Lines. 4—5 in a Page.

இது, நோய்களின் குணத்தைக் கூறுவதால், குணவாகடம் எனப் பெயர் பெற்றது. இன்ன தன்மை காணப்பட்டால் இன்ன நோய் என்று நிதானிப்பதற்கு மிக்க அனுகூலமாயிருப்பது. ஆதிகாலத்தில் உமைக்கு சிவபெருமான் உரைத்தது. இதில் முழுவதும் இல்லாமையால் இத்தனை செய்யுளையுடையது இந்த நூல் என்று சொல்லமுடியவில்லை,

இதனை இயற்றியவர் அகத்திய முனிவரோ தேரையரோ தெரியவில்லை. இக்குண வாகடத்தில் 40 செய்யுட்கள் எழுதி மீளவும் கோக்கப்பட்டிருக்கின்றன.

Beginning :

செந்திருவைச் சேரலாஞ் செந்தமிழைப் பாடலா
மிந்திரனைப் போல்வாழ்ந்தாண் டிருக்கலா—மந்திரஞ்சேர்
வெற்பகத்தை யூடறுத்து வேலவர்க்கு முன்பிறந்த
கற்பகத்தைக் கைதொழுதக் கால்.

கணபதி யென்றிடக் கலங்கும் வல்வினை
கணபதி யென்றிடக் கரும மாதலாற்
கணபதி யென்றிடக் காலனுங் கைதொழுங்
கணபதி யென்றிடக் கருமமு மில்லையே.

இவ்விரண்டு செய்யுட்களும் குணவாகடத்தைச் சேர்ந்தனவல்ல.

பாதிமா துமையொரு பாகனு மருளிய
நீதிலா வாடகனுலைச் செந்தமிழ்
நீதியா யெனக்கிது நிறைய வோதுவா
யாதியா பரமனே யரகரா சிவசிவா.

End

பண்டையிலு மதுமொழி தப்பாதே சொல்லும்
பல்கடிக்கும் பலகாலும் பாலே வேண்டும்
கண்பெருக்கும் சிவக்கு மிவை குணமே கண்டால்
கம்பித்தமென் றிதைக் கருதலாமே. 300

---

14. NO. 13 அகத்தியர் குருநாடி முதலியவை.

ஏடுகள் 242; Lines 3—6 in a Page.

இதில் நாடி நிதானம், நாடி நிலைமை, வாதபித்த சிலே

ட்டுமங்களின் உற்பத்தி, சுரம் சன்னிகள், சோகை காமாலை நீர்ச்சோவை, நீராமை பீலிகை முதலிய நோய்களின் வரலாறு சுரங்களுக்கு கஷாய பாகங்கள் ஆகிய இவைகள் அடங்கி இருக்கின்றன. இதில் அநேக செய்யுட்கள் பலரால் செய்யப்பட்டவைகளாகக் காணப்படுகின்றன. இதில் 19 முதல் 25 வரையிலுள்ள ஏடுகள் இல்லை.

Beginning:

இயல்செறி மாந்தர்க்கெல்லா மிலங்கிய வலக்கையாகும்
புயல்செறி குழலார்க்கெல்லாம் பொருந்திய இடக்கையாகும்
அயமில்லான் வலக்கைதன்னை இடக்கையாற் பற்றிப்பார்க்க
வயநல்லா ரிடக்கைதன்னை வலக்கையாற் பற்றிப்பாரே.

திறவுசெய் விரலைப்பற்றிச் செய்யதோர் காத்தின் மூன்றும்
பிறியவே சகடை நாடிப்பின்னெழு வாத நாடி
யறியவே யுதாங் கோபித்தடைகியே பித்தந் தோன்றில்
உறுபிணித்தணி வென்றுய்ய ஒதுங்கியே நிற்குங்கண்டாய்.

End:

காலை உழைந்து திமிருமுண்டாய்க் கண்ணுந்தூங்கிச்
சோபித்துக்
கோலஞ் செறியும் நகமெல்லாம் குறித்துச் சற்றேறகனங்
கொண்டு
சிலமிருந்து நீர்க்காணில் சிறுநீர் வற்றுமுடுகு மென
மானைத்தடங்கண் மானனையமானே வாதரோகமிதே.

சொக்கர் துணை.

---

## 15. No. 14 அகத்தியர் வைத்தியம் இரண்டாயிரம்.

ஏடுகள் 490; Lines 5 in a Page

இது, பலவைத்திய நூலினின்றும் எடுத்துத்தொகுக்

கப்பட்டதே யொழிய ஒருநூலன்று. இதில் வைத்தியர் லட்சணம் நாடி நிலையைக் கொண்டு நோய்களின் சாத்திய அசாத்தியத்தன்மை அறிதல் சுரங்களின் பேதங்களும் அவற்றிற்கு கிஷாயங்களும், சன்னிவகையும், பற்பல வாதரோகங்களும் அவற்றிற்கு மருந்தும், மூலம், குன்மம், ஈளை, இருமல், காசம், நீரிழிவு, சூலை, பாண்டு, காமாலை, சித்தப்பிரமை முதலிய நோய்களுக்கு மருந்தும் இன்னும் பல விஷயங்களும் கூறப்பட்டுள்ளன. அட்டைப்பிரயோகமும் சொல்லப்பட்டிருக்கிறது. இதனைச் செய்தவர் அகத்தியரல்லர். இதிலுள்ள செய்யுட்கள் தொடர்ந்தவைகளாக இல்லை. ஒவ்வொரு விஷயத்தைப் பற்றியும் தனித்தனியாக அனுபோகத்தையொட்டி வைத்திய நூலில் தாம் படித்துணர்ந்தவற்றைச் செய்யுளாகச் செய்து கோத்தவைபோல் காணப்படுகிறது. ஆனால் செய்தவர் பெயரைத் தெரிந்துகொள்ள முடியவில்லை.

Beginning

பாதி மாதுமை பாகனாருளிய
தீதிலா வாகடஞ் செந்தமிழ் செய்திட
நீதியாய் விளக்கிது நிறைய வோதுவ
ஆதியாம் பரமனே ஆருளதாகுமே.

மனிதரானவர் கட்கெல்லா மதியணி சடையார் சோதி
பனியது போலவந்த பாவமாம் வியாதிக் கெல்லாம்
இனியது குறிப்புங் காட்டி யில்லவாமென்ற ரோகம்
புனிதனே அறியவோதாய் போற்றிநின் தாளேபோற்றி.

* * * *

போதமழிந்து பொய்பேசும் போசனத்தில் மிகவாஞ்சை
பேதப்படவேகாம் சோப்பு மியலா மயிற்குத்திடலாடல்
பேதமதாக விழிவெளுத்தல் பிரதாபத்துடன் தான
கைத்தல்

தோதஞ்சந்தில் மிகக்கண்டால் சொல்லும் பூதசா
மென்றே.

காணிக சன்னிக்கு கலியாணபயிரவரசம்.

End:

கல்லியாணரசத்துடன் நெல்லியின் காய்கெந்தகஞ் சூதமுங்
காரீயபற்பமும் பச்சை நாகப்பாம்பு கடும்பிச்சினுடன்
திப்பிலி
செல்லவே கொடுவேலிவேர்க் கிஷாயத்திலோர் தினமரைத்
துண்டையாக்கி
செப்பமாய் வச்சிர மூசையிலிட்டே வாலுகா எந்திரத்
திலேதான்
வல்லதா யொருநா ளெரித்தாறி மீன்பிச்சு வாத்தரைக்
கடலையா
மருவாதியனுபான விசேஷத் திலேயிட மருவுகாணிக
சன்னிபோம்
சொல்லெலாம் வென்ற மொழிபத்தியம் பாற்சோறு தூய்ய
சர்க்கரையினுடனே
தோற்றியதாகம் தணியக் கரும்புதின் சுகத்தைக்
கொடுத்திடுமே.

---

## 16. No. 15 (a) அகத்தியர் செந்தூரம் முந்நூறு.

ஏடுகள் 115; பூர்த்தி Lines 5 in a Page.

இதில் அபிரேகம், வங்கம், அயம் லிங்கம், காந்தம், நாகம், அஷ்டபதங்க முதலிய செந்தூரப்போக்கும், சிந்திற் சர்க்கரை செய்பாகமும் பிறவும் கூறப்பட்டுள்ளன. அச்சிடப்பட்டுள்ளது. தலைப்பில் கண்டபடி திரட்டு வாகடமும் குருஜெய நீரும் எழுதிய ஏடுகள் இதில் இல்லை.

Beginning:

பூதலத்தில் தென்பொதிகை தன்னில் வாழும்
பூரணமே யென்குருவே சிவமே அய்யா
மாதவத்தால் அஷ்டசித்தி யெட்டும் பெற்ற
வரிசையினால் வைத்திய நூல் வகையாய்ச் சொல்வேன்
போதகத்தின் முகத்தானை கடை கெட்டானைப்
புழுக்குழியில் விழுந்தானைப் புதல்வன்றன்னைச்
சாதமாய் மனமடங்கி அறிவிற் கூடித்
தற்பரனாய் நின்ற கணபதியே காப்பாம்.

End:

மூலத்தினெழுத்தாலே மவுனங் கொண்டு
மூட்டினால் வடுகனங்கே நிர்த்தஞ் செய்வார்
ஆலத்தின் குண்டலிக்குள் அடுக்கைப்பாரு
ஆசையவன் வைப்பதற்கு மாலைசாத்து
சீலத்தின் நந்தியுட பூசை பண்ணு
சேகண்டி நாத வொலி மணியி னோசை
காலத்தின் கருவறிந்து பூசைதீர்ந்தால்
கைக்குள்ளாம் வைத்திய முந்நூறு முற்றே.
அகத்திய நாயனார் அருளிச் செய்த வைத்திய
செந்தூர முற்றும்.

Colophon:

சகாப்தம் 1722௵ ரவுத்ரி௵ பங்குனி௴ 24௳ ஆதித்த வாரமும் சத்தமி திதியும் மூல நட்சத்திரமுங் கூடின சுபதினத்தில் ராசமானிய ஸ்ரீ சரபோஜி மகாராசா சாயபு அவர்கள் ஆக்ஞாபித்த பிரகாரம் துபாசி கிஷ்ணம் நாயக்கர் குமாரர் ரெங்கப்ப நாயக்கர் அகஸ்திய சுவாமிகள் செந்தூர முந்நூறு எழுதி நிறைந்தது முற்றும். சிவமயம் பிரமிம்ம சொரூபானந்த மூர்த்தி துணை.

## 17. (b) அகத்தியர் சூத்திரம் முப்பத்தாறு.

Lines 5 in a Page.

இதில், தாம்பூர பற்பம், நாகபற்பம், அயபற்பம் தங்க பற்பம் செய்முறையும் அவைகளால் தீரும் வியாதிகளும் சொல்லப்பட்டிருக்கின்றன.

Beginning :

ஆதியாம் பித்தமதா லப்பனே வாதமுண்டாஞ்
சீதள சிலேட்டுமஞ் சேருமே—வாதியென்ற
பேர்படைத்த பின்பே பிலத்த வயித்தியஞ்செய்
காரி நிறத் தைநகரனே காப்பு.

பாரப்பா செம்பினுட வெள்ளை கேளு
 பரிவான தாம்பிரத்தைக் குகையில் வைத்து
சேரப்பா மதியினுப்பு பலமே போடு
 சேர்ந்துருகும் போதிலே மருந்து கேளு
காரப்பா அண்டமது பலந்தா னொன்று
 கட்டாக நவச்சாரம் பலந்தான் ரெண்டு
சீரப்பா கல்வத்தில் தூளதாக்கிச்
 சேர்ந்த தொரு பொடிமேலே காரமரை போடே.

End

ஆமப்பா ஈந்திடவே வைத்யம் பாரு
 அஷ்டதிசை மெய்க்கவுண்ணே வாழ்த்தும் லோகம்
நாமப்பா வைத்தியத்தின் மருந்தை யெல்லாம்
 நயமாகக் குறுக்கி வைத்தோம் முப்பத்தைஞ்சில்
வாமப்பா இந்த வகை மருந்தை வைத்தால்
 வைத்தியன் பேருரைக்கையிலே நோய்களோடும்
தாமப்பா எட்டிரண்டு மிருபத்தஞ்சுந்
 தடையற வேயுருவேறச் சித்தியாமே. 36

குருபாதந் துணை.

---

## 18. No. 16 அகத்தியர் கரிசல் முந்நூறு.

ஏடுகள் 88; அபூர்த்தி Lines 5 in a Page.

இதில் மணிமந்திர ஔடத விலக்கணமும், நன்மாணாக் கர் தீயமாணாக்கரிலக்கணமும் வைத்திய சிந்தாமணி முதல் வைத்தியமாலை யிறாக 32 வடமொழிச் சாத்திரப் பெயர் களும், மகாபூரணசந்திரோதயம் வாலசந்திரோதயம், சக்த சந்திரோயம், பூரணசந்திரோதயம், கெந்தி சந்திரோதயம், தங்க சந்திரோதயம் முதலிய அருமையான செந்தூரங்க ளும் சந்தனுதி, மகா சந்தனுதி, அசுவகந்தாதி முதலிய தை லங்களும் கூறப்பட்டுள்ளன. எளிதாகத் தெரிந்து கொள்ளக் கூடிய நிலைமையில் இல்லாமையால் இது கரிசல் எனப் பெயர் பெற்றது போலும். இயற்றியவர் அகத்தியர் என்றெழுதப் பட்டிருக்கிறது. பிழைகள் அதிகமாகக்காணப்படுகின்றன.

Beginning :

பூரணி மாமலை மகளருள் புதல்வன்
காரண மாமத கரியடி பணிவாம்.

(வல்லது வணக்கம்.)

அமுத மதியணி சடையினர் விடையவ
ரமத மழகளிறிணையடி பணிவாம்.

அருளிறை வணக்கம்.

சூரன் குலமறவே லாற்றடி மயில்
வீரனறு முகனிணையடி பணிவாம்.

காரியத்தினை மாரச் சுத்தி போலே நிர்ப்படியே
காணீருத்துடை ஓர்பணமட்டதி சூரணதுப்பதிலே
பாரீர் மர்த்தன மீர்காவிட்டிடவே சீ வெட்டைகள் வாய்
வோடே

கட்டுகள் மாவாயுத்தடை நீரோடிற் பிடியே

பேர் மூலத்துள்சீழும் வெட்டைகள் மீதோடித்திருகல்
வேரோடிற்றிடு காரியத்தினை யேதாலுட் கொளவே.

End:

தாகமெடுக்கின்ற நீரழிவு சயமீளை யிருமற் காசம்
வத்து மூடற் காச்சல் நாலாமுறை யுற்றசுரம்
ஒரு நாட்டான உடலினைப்பு மக்கினி மந்தமுமோடிடு மிடு பத்தியம்
முருங்கக்காய் பசுவின்பால் கொடு தயிர் மோராய்
மேதித்தயிர் மோர் நெய் வெள்ளாட்டுப்புக்கண்டம்
கச்சல் வாழைக்காயாகு நல்லுப்புகளாது ருசிதானிச மாய்த்
தயில மெங்கோயு மகற்றிடு மசுவகந்தாதி யதிசுகமாமே.

அமுக்கராக் கொம்பரக்கு சித்தாமுட்டி வேர்
குமித்தவகை பதினைப்பலங் கூட்டியே
பதக்கு நீர் விட்டு நாலுழியாய்க் காய வடிய

Colophon:

சகாத்தம் 1722 ளு ரவுத்திரி ளு கார்த்திகைமீ 16 உ சனிவாரமும் சதுர்தெசியும் பரணி நட்சத்திரமும் கூடின சுபதினத்தில் ராசமானிய ஸ்ரீ சரபோஜிமஹாராசா சாயபு அவர்கள் ஆக்ஞாபிச்சபடிக்கு அகஸ்திய சுவாமி அருளிச்செய்த கரிசல் பஞ்சாதி முந்நூறு அபாசி கிருஷ்ணம் நாயகர் குமாரன் ரெங்கப்பநாயகர் எழுதி முகிந்தது முத்தும்.

---

## 19. No. 17 (*a*) அகத்தியர் பற்பமுறை இருநூற்றஞ்சு.

ஏடுகள் 175; Lines 5 in a Page.

இதில், அயம், காந்தம், தாம்பிரம் ரசம், கெந்தி, வங்

கம், நாகம், தாளகம், வீரம், லிங்கம், பவளம், முத்து, வயி ரம், நிமிளை, முதலிய பற்பமுறையும் அவற்றால் தீரும் வியா திகளும் பலவகைத் தயிலம், கிருதம் கஷாயம் முதலிய பாகங்களும் சொல்லப்பட்டுள்ளன.

Beginning:

பூரணமா மும்மூலப் பொறியிற் சூடாய்ப்
புகையெழும்பி மேகத்தால் சிரசிற் சூடாம்
காரணமாம் நீர்கலந்து கண்ணில் ரோகம்
கனலெழுந்த வாயுவினால் சூலை ரோகம்
மாரணமாம் வாதத்தா லெழுந்த ரோகம்
மதியதொரு பித்தத்தில் கிராணி யாச்சு
தாரணமாம் வாயுவினால் குல்ம மாச்சு
சார்ந்த சிலேற்பனங் கூடிற் சயமதாமே. 1

End:

மூலிகைக்குள் வெகுமூலி சஞ்சீவிமூலி
முளைத்ததே மலைதோறுங் காடுதோறும்
சாலிமுதல் வெகுமூலி நாட்டுக் குள்ளே
சாதகத்தை யறியார்கள் சண்டி மாண்பர்
ஆவிக்கும் வைத்தியன்தான் குணத்தைக் காணான்
ஆண்மையினால் வயிறுபிழைக்க அலைவார்மெத்த
சோலிக்குள் மருந்துவைக்க வேண்டாம் சொன்னேன்
தொகையான இருநூற்றின் தொகையைப்பாரே. 204

Colophon:

சகாப்தம் 1722ஞு ரவுத்திரிஞு மாசிமீ 25உ சுக் கிரவாரமும் அமரபக்ஷமும் சஷ்டியும் அனுஷ நட்சத்திர முங் கூடின சுபதினத்தில் ராசமானிய ஸ்ரீ சரபோசி மகா ராசா சாயபு அவர்கள் ஆக்ஞாபிச்சபடி துபாசி கிருஷ்ணம் நாயக்கர் குமாரன் ரெங்கய்யன் அகஸ்திய சுவாமியள் வைத்

திய நூல் பற்பமுறை இருநூற்றஞ்சு எழுதி நிறைந்தது முற்றும்.

---

## 20. (b) அகத்தியர் பற்பமுறை.

Lines 5 in a Page

இது, முன் பிரதியைப் போன்றது. அதைப்போலவே 204 செய்யுட்கள் இருக்கின்றன. அதனினும் இது சிறந்த பிரதி. நல்ல நிலைமையிலிருக்கிறது.

---

## 21. (c) அகத்தியர் தண்டக சூத்திரம் இருபத்தைந்து.

Lines 5 in a Page

இதில் யோக ஞானங்களும் அஞ்சனமும் கூறப்பட்டுள்ளன.

Beginning:

முச்சுடராய் முப்பொருளாய் முன்னான்கு முன்னின்று
இச்சையுட னெட்டிரண்டு மேகமதாய்—அச்சதுவு
மாகி வெளியொளி யாகியந்தத் துட்பொருளாய்
ஏக வுணதிடையே யேறு.

ஏறுமது மூலாதாரத்தி னின்று
என்மகனே புலத்தியனே யிசைந்து கேளு
மாறுமது இடையின்று யிரண்டு மாறி
மகாரமது முப்பொருளாய் நின்ற சூட்சம்
வேறுதுறை யேதுமில்லைமவுனத் தாட்டு
வேதாந்த சுழிமுனையி லாட்டத்தாலே
தேறுமப்பா கற்பமெல்லா மவுனத் தாலே
சிகச்சால சித்தெல்லா மவுனந்தானே. (1)

End

அனுப்பின னாலீந்தோன் மனது நொந்தால்
அழிந்திடுவாய் நூலொன்றும் பலியாதையா
நினைப் பெல்லாம் புருவமையங் கண்ணுமங்கே
நில்லடா சதாநித்தம் ஓ மங் கென்றே
செனித்தவிட மழிந்தவிட மாணமங்கே
தெரிந்து கொள்ளு சிவசத்தி சூக்ஷமங்கே
அனித்தியமாய்ப் போகாதே சதாநித்திய முன்னு
ஆதியான சுழிமுனையி லறிவு முற்றே. (26)

Colophon :

பார்த்திபவருஷம் ஆடிமீ 12உ சோமவாரம் தாக 3க்கு மேலக்காவேரியிலிருக்கும் வைத்தியர் சிதம்பரம் கையெழுத்து. சிவமயம்.

மோ நமசிவாயா குரு.

---

## 22. (*d*) அகத்தியர் தண்டகம் நூறு.

Lines 5 in a Page.

இதில், அஞ்சனம், வசியம், உருமாற்றம், மருந்தீடு அஷ்டகர்மம், முதலியவை சொல்லப் பட்டிருக்கின்றன. இயற்றியவர் அகத்தியர் என்றெழுதப் பட்டுள்ளது.

Beginning :

அந்தணர் பாதம்போற்றி யறிவுடன் வாழ்வோர்க்கெல்லாம்
சந்ததம் பூமிமீதிற் சாத்திய தண்டகந்தான்
எந்தனூர் பிள்ளையெல்லா மிதுவறிந் துள்ளே கொண்டு
மிந்தமிழ் பிறர்விள்ளாதார்ப் பெரியவராகுந் தானே.

நயம்பட மையாய்ச் செய்து நலமுள்ள புழுகு கூட்டி
வயநமசி வாயா வென்று வருந்தி நூற்றெட்டு மேத்திச்

செய்யும் பெறுங் காரியங்கள் தோகையர் மைக்கண்ணங்கள்
படம்பெறுந் தொழிலுக் கெல்லாம் வருந்திங்கள் திலதம்
போடே.

End:

ஆனேனும் சிவனை யடிதொழு தேத்தி
மானேன பார்ப்பதி மக்களு மானேனும்
வீறு யிராதே விழுஞ்சவர் கண்டாய்
நானே தண்டக்கம் நாடுமுறை முத்தே. (101)

அகத்திசர் தண்டக்கம்.

முற்றும்.

---

## 23. (e) அகத்தியர் பட்சணி நூற்று முப்பத்திரண்டு.

Lines **5** in a Page.

இதில், யோகஞான முறைகள் பரிபாஷையாகக் கூறப்பட்டிருக்கின்றன.

**Beginning:**

பூமாது வாசமாகும் பொருந்திய தண்டக்கத்தில்
நாவது ஓதுகின்ற நாதனை நடுவணையிருந்து கேளு
போவதும் வருவதாகும் பூரணங் காப்பதாகும்
ஆவது கோடி வித்தையானந்தங் காப்புத்தானே.

* * * *

கல்லு ருகுஞ் செம்பு
வல்லிருளில் நட்பு
புல்ல ருகு தம்பு
சொல்லுவது வம்பு.

பீக்கி லாட்டைக் கண்டு
காய்க்கு ளாட்டை யுண்டு

பேய்க்கு ளாட்டில் நின்று
கூக்க லாட்டைப் பாரே.

மங்கை முது கண்ணில்
தங்கை கொடு பிசையத்
திங்கள் கதிர் சேரும்
எங்கள் குல மாமே

End :

முத்திலு நூறுங் கூட்டி யுப்பத்தி ரெண்டும் பாரு
ஒத்திட மதுவாய்க் காணும் உற்பன முறுதி தோணும்
கத்தது என்றால் தன்னைக் கைவிடார் கருவைக்காண்பார்
செத்தபே ரில்லையென்றால் சேர்ப்பது முத்தியாமே. 132

அகஸ்தியர் பட்சணி நூற்றுப்பத்திரண்டு
முற்றும்.

குறிப்பு:

இதில் மேற்கண்டவைகளையல்லாமல் அநேக வைத்திய அட்டவணை எழுதிய மூன்று ஏடுகளும் சேர்க்கப்பட்டுள்ளன.

---

## 24. No 18. (a) அகத்தியர் மூப்புச்சூத்திரம் இருநூறு.

ஏடுகள் 72; அபூர்த்தி Lines 5—8 in a Page.

இது, இரசவாதத்திற்குரிய முப்புமுறையைக் கூறுவது. இதில் 86 பாடல்களே இருக்கின்றன.

Beginning ;

ஆதியான மனக்கோலஞ் செய்யு நாளில்
ஆதிமுதல் தேவரிஷி கூட்ட மாச்சு
வேதியனும் மாயோனுங் காணு யன்று

விமலனார் விசுவனுக்கு வார்த்தை யீந்தார்
நீதிபெறச் சாருதியால் தெட்ச ணயம்
நிலையான சார் பொதிய கிரியில் சென்றேன்
ஆதியொரு காரணத்தால் பரைதான் னின்ற
ஆகடந்தா னம்பரமா மருளைப் பாரே.

End :

போமப்பா இந்தவழி யரியவேணும்
இல்லாட்டாற் புலைய னெனத்திரிய வேணும்
வேமப்பால் சாக்கெல்லம் வேகமாற்றான்
வேறேயொரு வழியாகச் சொல்லக் கேளு
காமப்பால் மிஞ்சினதாற் கழுதைச் சன்மம்
கனதேசி நீராலே சாக்கெல்லாம் கட்டு
ஏமப்பா இதிலென்ன சுருக்குண்டென்றால்
எளிதல்ல தேசி யுடச்சாறு தானே. 86

---

## 25. (b) அகத்தியர் பற்பமுறை.

Lines 6—8 in a Page.

இது, 17-ம் நம்பரின் உட்பிரிவாகிய (a) போன்றது. இதில் 146 செய்யுட்களே இருக்கின்றன.

குறிப்பு:

கடைசி ஏட்டில் மழை பெய்விக்கவும் அதில் நனையா திருக்கவும் மந்திரம் எழுதப்பட்டிருக்கிறது. சிதைந்திருக் கிறது.

---

## 26. No. 19 (a) அகத்தியர் பூசாவிதி இருநூறு

ஏடுகள் 167; பூர்த்தி Lines 5 in a Page

இதில், சிதம்பரச்சக்கரம் வரையும் முறையும் அதனை

பூஜிக்கும் விதமும் வாசிதாரணையும் அஷ்டகர்மமந்திரங்களும் பிறவும் கூறப்பட்டுள்ளன. அச்சிடப்பட்டிருக்கிறது.

Beginning :

ஆதார மாறு மகண்ட குருபாதம்
வேதா கமத்தின் விதிமார்கம்—நாதமுறும்
விந்து மூலம் விளங்குபூ சாவிதிக்குத்
தந்தி முகத்தோன் கருணைதான்.

காரணமாஞ் சிவயோகி சித்தர் பூசை
களங்கமறச் சொல்லுகிறேன் நன்றாய்க் கேளு
பூரணமா மவுனமல்லோ ஞான வாழ்க்கை
புகழான வட்டாங்க நடன மாடுஞ்
சீரணமாய்ப் போகாமல் பூசை மார்க்கஞ்
செப்புகிறேன் மனந்தெளிந்த சித்தர்க் கப்பா
வாரணமா முகத்தோனை முதலே பூசை
மத்தொரு பூசை யெல்லாமதற்குச் செய்யே.

End :

ஒன்றான மனதுரிமை சீடனுக்கு
உரைசொல்லிப் பூசைவிதியுரைக்கச் சொல்லு
விண்ணாட்டங் கண்ணாடி மேவச் சொல்லி
மேலான மவுனத்தைப் பற்றச் சொல்லு
சுண்ணாம்பு மஞ்சளும் போல் குறிகள் காட்டிச்
சுழிமுனையிலே நாட்டமுறத் தொட்டுக் காட்டிக்
கண்ணாடிக் குள்குருவின் பதத்தைப் போற்றி
கருணைதரும் பூசைவிதி கருவாய் முற்றே. 200

குறிப்பு:

கடைசியில் 'பூதலத்தில் தெட்சணையம் அகத்திசா மூர்த்தி பூரண ருத்திர முற்றும்' என்று எழுதப்பட்டிருக்கிறது.

## 27. (b) அகத்தியர் தீக்ஷா விதி இருநூறு.

Lines 5 in a Page.

இதில், இன்னின்ன ராசியில் பிறந்தவர்க்கு இன்னின்னது சித்திக்குமென்பதும் பிராணாயாமம் தசதீக்ஷைகளின் விபரமும் காயசித்திக்கேற்ற கற்பங்களும் நாற்பத்து முக்கோணம் ஐம்பத்தோரட்சரம் சாபநிவிர்த்தி சிவபூசை முதலியவைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன.

Beginning:

வானைத்தா வியபொதிகை மகத்தான ரிஷிபுடைய வர்க்கு நேர்மை
பானைத்தா வியபூசை பரிவான சிவயோகப் பண்போர்க்கே
மீனைத்தா வியராசி விளங்கிநின்ற கன்னிமுதல் வில்லு மேஷம்
சேனைத்தா வியதுலாத்தின் சென்மராசிக் கருவைச் செப்புறேனே.

End:

பணிமாறு காலத்தே மணியி னோசை
பாங்கான சேகண்டி நாதவோசை
பணிமாறு காலத்தே மவுன தோத்திரம்
பத்தியுறும் வாலைகயி லேகியத்தை யீந்து
பணிமாறு காலத்தே சகல சித்தும்
பரிவாகத் தாவென்று கையில் வாங்கிப்
பணிமாறு காலத்தே பணிந்து தெண்டம்
பண்ணுவாய் பூசைவிதி தீக்ஷைமுற்றே. 204

அகத்திய நாயனார் தீக்ஷைவிதி
முற்றும்.

## 28. No. 20 அகத்தியர் வைத்திய ரத்தினச் சுருக்கம் முந்நூறு.

ஏடுகள் 103; பூர்த்தி Lines 5—6 in a Page.

இதில், வாதராட்சதன், சுபமங்கினி, பூபதிமாத்திரை, ரசசிந்தாமணி, கோரோசனை மாத்திரை, அர்த்த நாரீச்சுர மாத்திரை, சிலோதாரி மாத்திரை, பஞ்சதீபாக்கினி, கண்டாத்திரி லேகியம், சிந்தாதி லேகியம், சாபங்க வில்வாதி லேகியம், கூழ்பாண்ட லேகியம், அக்கினிச் சூரணம் முதலிய சூரணங்கள் சந்தனாதித் தயிலம் முதல் பலவகைத் தைலங்கள், கிருதங்கள், எண்ணெய், கலிக்கம், செந்தூரங்கள், பற்பம், கஷாயங்கள், பூரணச் சந்திரோதயம் முதலியவைகள் கூறப்பட்டுள்ளன.

Beginning:

பூரணமாய் நிறைந்தகும்ப பரைதாள் போற்றி
புகலுகிறேன் வைத்திய ரெத்னச் சுருக்கந்தன்னை
வாரணமா முகத்தோனைப் பணிந்து வாழ்த்தி
வைத்தியந்தா னிந்தமுந் நூற் றறுபதுகள் சுருக்கம்
காரணமாஞ் செந்தூரம் பற்பம் லேகியம்
கருவான தயிலமொடு கிருத மெண்ணெய்
சூரண மாக்கிராணமொடு கலிக்க மாத்திரை
சுளுகு தரு நாடிமுதல் சொன்னேன் பாரே.

End:

மூழ்கவே வியாதி யெல்லாங் கடலே புக்கும்
முக்கியமாய் அகத்தியர்க்கு சிவந்தான் பன்னு
நெகிழாதே தியானமது மந்ரோம் பண்ணு
நோன தேவியைத்தான் தியானம் பண்ணு
தகிழவே சிவந்தனையே பூசைபண்ணு
தவமானால் வியாதியெல்லாந் தவறுண்டே போம்

மகிழவே வைத்தியத்தைச் செய்தாளுகில்
வையகத்தி லொப்பாரு மீசன் மறந்தே. 313

Colophon:

சாலியவாகன சகாத்தம் 1746 தாருண வருடம் மார்கழி மீ 7உ சனிவாரமும் கூடிய புண்ணிய தினத்தில் மகாராச ஸ்ரீ சற்போசி மகாராச சத்திரபதி சாயபு அவர்களுக்கு வைத்தியம் கோபாலபிள்ளை குமாரனாகிய கொட்டிய மத்தியஸ்தம் அய்யாக்கண்ணுப்பிள்ளை தன்னுடைய பேர் நிமித்த மாத்திரம் ரெத்தினச் சுருக்க மென்னும் வைத்திய சாஸ்திரத்தை அரமனை லெக்கிகாளை கொண்டு எழுதி நிறை வேறினதை செலுத்தி சாஷ்டாங்க விண்ணப்பம்

ஸ்ரீ யாதவ கோபால அரிபிர சன்னம்

---

## 29. NO. 22 சித்தாரூடம்.

ஏடுகள் 102; அபூர்த்தி Lines 5 in a Page.

இது, பாம்புகளின் பிறப்பு, அவற்றின் பிரிவுகள் அவைகளின் நிறம் குறி வயது கடிவாய் விவரம் முதலியவைகளையும் பாம்பு விஷத்தைப் போக்குவதற்கு கலிக்கம், அக்கிராணம், நசியம், துவலை, பூச்சு, மாத்திரை, அஞ்சனம் முதலியவற்றையும் விரிவாக எடுத்துரைப்பது. இச்சித்தாரூடச் செய்யுள் சீவகசிந்தாமணி பதுமையா ரிலம்பகம் செய்யுளுரையில் உரையாசிரியர் நச்சினார்க்கினியரால் மேற்கோளாக எடுத்தாளப்பெற்றுள்ளது. இந்த ஏட்டின் தலைப்பில் அகத்தியமகாமுனி சித்தாரூடம் என்று எழுதப் பட்டிருக்கிறது. ஆனால் சித்தர்கள் பலருங்கூடி இதனை இயற்றினர் என்பர். இந்தப்பிரதியில் 184 செய்யுட்கள் இருக்கின்றன. இது அச்சிடப்பட்டுள்ளது.

Beginning

கருத்தியல் கல்வியெல்லாங் கத்தரி(ற்றறி)ந்துலகந் தோறும்
திருத்திய புலவர் தேடுஞ் சித்தாரூடம் பாட
மருத்தினி கடம்பாயாதி மாமுகன் காக்க சுற்றும்
நிருத்தனு நெடுமாறனு நித்தலும் மகிழ்ந்து காக்க.
திருமகள் கணவன் தேவர் திக்குள பால தேவர்
மருவுமா தங்கி காளி வைரவன் கார்த்திகேயன்
குருபரன் சித்தரிந்திரர் கோரக்கன் கயிலை யாளி
செருவினை வாகி சூலி சித்தாரூடங் காப்பாம்.

* * * * * *

அந்த மிலனந்தனோடங் கடல் மிகு குளிகன் பார்ப்பான்
வெந்திறல ரசனுகும் வாசுகி சங்கபாலன்
வந்திடு தக்கனோடு மகாபற்பன் வணிகனுகும்
முந்துகார்க் கோடனோடு பதுமனு முழுவனுமே

End:

குட்டிப் பெரிய தக்காளி கூட்டி யிரண்டுங் காடியுடன்
கட்டாய்த் துவைத்துத் துவலையிடக் கருதா யுழக்குத் தானருந்த
பட்டேவிரியன் விஷங் களெல்லாம் பதறிக் குதித்துப் பாரிற்போகு
செட்டே சொன்னோம் விரியனுக்குத் திர்க்க மருந்து மிவைதானே 183
அப்பை நிறுத்தியடித்தது போலாழ்ந்த விரியன் தான் கடித்தால்
வேப் பெண்ணெய் தன்னை யாழாக்கு விரும்பிக் குடுக்க வல்லீராய்
தப்பே யில்லை விஷங்களுந் தான் தரியாதோடித்தான்மீளும்
காப்பே சொன்னோம் விஷதாரி கடுகச் செய்ய..............

## 30. No. 24 அகத்தியர் சர்ப்பாரூடம்.

ஏடுகள் 96; அபூர்த்தி Lines 4—5 in a Page.

இது, 225ம் நம்பரைப் போல பாம்புகளின் பிறப்பு அவற்றின் வகை அவைகளின் கடிக்கு மருந்து முதலிய வற்றைக் கூறுவது. இதில் முதலிலுள்ள அகவல் தவிர மற்ற செய்யுட்கள் சித்திராரூடச் செய்யுட் களாகவே காணப்படு கின்றன. இடையிடை ஏடுகள் முரிந்தும் சிதைந்தும் மிருக் கின்றன.

Beginning:

வேதியர் கடையாஞ் சாதி விடந்தனில் துஞ்சுவோரை
ஓதிய மந்திரத்தால் மருந்தினாலுணரு வோர்கள்
சாதியால் பிறக்கில் வேதத் தலைவராய்ப் பிறப்பார் விண்ணில்
ஆதியில் பிரமமாகி அயர்ந்து வீற்றிருப்பார் தாமே.



திருவளர் தாமரை திசைமுகன் படைத்த
விருநில மடந்தையும் குருபா நிரவி
மன்னுயிர்க் கெல்லாம் வருத்த நீங்கித்
துன்னிய செஞ்சடை தூமதி வைத்தோன்
பன்னிய நூலின் பயன்களை நாடி.
நன்னகமாதி நாகம் மெட்டொடு
பாங்குடன் மண்டலி பதினாறுட்பட
வோங்கிய வழலை யொருநான் கோடு
நன்மையி லரவம் நாலிரண் டெனவும்
புன்மையில் விரியன் புகன்ற மூன்றோடு

பதினெட் டெவியும் பன்னிரு தேனும்
விதிபெருஞ் .செய்யான் கறுக்காய் பூாஞ்
சிலந்தி யிருபதுங் திப்பச் சோக்கியும்
சலந்தரு தவளை சாற்றிய அட்டையும்

*                    *                    *                    *

செந்தமி ழகத்தியர் தெரிந்துரை யிருந்த
வந்தமில் காட்சி ஆகமம் பகர்ந்தவர்
ஆதியாங் கடவு ளடிபிணை வாழ்த்தி
ஓதிய துன்ன தொளிதிகழ் தென்னவன்
வையகத் தோர்க்கு வருத்தம்நீங்கச்
செய்தவந் நூலின் திருப் பெயரே தெனின்
சர்ப்ப சாஸ்திர மென்னுமை பகர்ந்தனர்
ஒத்த காவிய வியலுணர் தோரே.

அகவல் முற்றும்.

கருத்தியல் கல்வி யெல்லாங் கற்றறிந் துலகந் தோறும்
திருத்திய புலவர் தேடுஞ் சித்திரா ரூடம் பாட
மருத்தணி கடம்பை யாதி மாமுகன் காக்க சுற்றும்
நிருத்தனும் நெடுமால் தானு நிந்தனுங் காப்புத்தானே

End:

தும்பைத்துளிர் துளசித்துளிர் லவணத்துடன் மிளகு
நம்பிக் கொடு [நமலக் கொடு நாசிக்கொடு விட்டால்
வெம்பிக் கொடு விதறிக் கொடு விடமானவை யெல்லாம்]
கம்பிக் கொடு கதறிக் கொடு கடவிற் புகு விடமே.

மஞ்சொன்ன வார்த்தை கேளாது மிழ...றுனை அழுக்கு
வருஞ் சுழரும் தலையைக் கிழு கிறென்னும்முன்னே
இதெல்லாம்
உண்டாகி கழுத்துக் கொல் விரியன்றனைக்கண்டு...பெரி
யோரே. 247.

## 31. NO. 25 (a) அகத்தியர் குணவாகடம்.

ஏடுகள். 205; Lines 4—6 in a Page.

இதில், வியாதிகளின் லட்சணமும் அவற்றிற்கு மருந்தும் சொல்லப் பட்டிருக்கின்றன.

Beginning:

வாக்குண்டாம் நல்ல மனமுண்டா மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது—பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கை யான்பாதந்
தப்பாமற் சார்வார் தமக்கு.

பாதிமா துமையொரு பாகனு மருளிய
நீதிலா வாகட நூலைச் செந்தமிழ்
நீதியா யெனக்கிது நிறைய வோதுவாய்
ஆதியே பரமனே அரகரா சிவா.

End:

குளிர்ந்து நடுங்கித் தலைப்பெய்திக் கொண்டகாய மிகமண்டி
நளிர்ந்து வந்து குத்திட்டு நாவிட்டெறியுங் கொட்டாவி
தளர்ந்தவுடம்பு மசலிக்குமங்கு தயங்கும் விலாவிலே
குடையும்
வளர்ந்துவந்த தறியாதோ வாதசுரத்தின் வாறிதுவே 300.

---

## 32. (b) பலதிரட்டு.

Lines 5—7 in a Page.

இதில், கிஷாயங்கள், சூரணங்கள், லேகியங்கள், நெய் வகைகள், மாத்திரைகள், தைலப்போக்குகள், முதலியவை பல நூல்களினின்றும் திரட்டப்பட்டுள்ளன.

Beginning:

புகலுஞ் சிந்தில் பற்படகம் பூசுஞ் சந்தமிலா மிச்சந்

திசுழும் வேர்க் கொம் பிருவேலி சித்தா முட்டி யுடன் காசு
தகவே யோரொன் ஞ்ரேர்சுழுஞ்சு தண்ணீரிரண்டு காழி
விட்டுச்
சுகமாய்க் காச்சிக் கொடுத்தாக்கால் சோரும் பித்த சுரந்
தானே.

திரமிகு லோகந்தன்னைச் செய்தா பொடியதாக்கி
வரமிகு நாவற் சாற்றால் வளம்பட வரைத்து வாங்கி
அரமிகு வாளி தன்னிலலர்ந்த நூறு புடசெந்தூரம்
உரமிகு பாண்டு குலையுட் கொளச் சுவாசம் போமே.

End :

திரிபலை தாமரை தேற்றும் விதை கற்றாழஞ் சாறு வார்த்தரைத்து உண்டை பண்ணி வெள்ளித் தகட்டில் முப்பது நாழிகை ஊறவைத்துப் போடவும் நீலகாசம் கண்ணி லெழுந்த நோயெல்லாந் தீரும் எலும்புருக்கிக்கு காசுக்கட்டியும் கடுக்காயும் சமன் பொடி செய்து தண்ணீர் கொடுக்கவும். குருவுக்கு கொணியைப் பிறவைக்கு விஷ்ணுகாந்தி முருக்கிலை கோழியவரை ஆாவரைமிலை சங்கிலை துளசி செம் முள்ளி புளியிலை அருகினி மறைப்புமனவும் கொடுக்கவும் கோ ரோசனையும் கொடுக்கவும்.

---

33. (c) பதார்த்தகுணம்.

Lines 5—6 in a Page.

இது, பதார்த்தங்களின் குணங்களைக் கூறுவது அபூர்த்தி.

Beginning

ஓதக் கடலமுத மும்பர்க் குணவளித்துப்
பேத மறநுகரும் பேர்முதலாய்—நீதியாய்த்

தொட்டுத் தெறித்துத் துளிசூழ வழ்கடுவாய்
மட்டத்த நோய்தணிக்கும் வந்து.

விசைய ரெனுங்கடுக்காய் மேவுங் குணந்தான்
அசையாத வாத மகற்றும்—இசையாத
பேய்ச்சுரைக்காய் போன்றிருக்கும் பெய்வளையீர் கண்டக்கா
லாச்சுரைக்க வேண்டா மது.

End:

தலைசுழலும் பித்தமுடன் தாட்கு மரோசிகம்போம்
குலையெரிவு வாதங் குடிபோம்—சிலைநுதலாய்ப்
பொறுக்கு மதுரமொழிப் பூவையரே நல்ல
சிறுக்கீரை செய்யுஞ் செயல்.

---

## 34. (*d*) அட்டை விதி.

Lines 5—6 in a Page.

இதில், அட்டை பேதங்களும் அவற்றுள் ஆண் பெண் அறியும் விதமும் இன்ன பாகத்தில் இன்ன நேரத்தில் இன்ன அட்டையைக் கட்டவேண்டு மென்பதும் பிறவும் கூறப்பட்டுள்ளன. பதினொரு செய்யுட் களிருக்கின்றன. இவை சில பாடபேதத்துடன் தன்வந்திரி வாகடம் ஆயிரத்தில் காணப்படுகின்றன. ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

Beginning:

அட்டையின் விதிதனை யாரு மறிந்திடத்
திட்டமதாகச் செப்பிட வுன்னினேன்
மட்டமர் குழலினுள் பாகனளித்திடும்
விக்கின விநாயகன் பொற்பதம் போற்றியே.

*       *       *       *

அட்டையி லாணும் பெண்ணு மறிந்திட வேணுமாகில்
கொட்டியும் பதுமந்தா னுங் கூடத்தண்ணீரில் விட்டு
அட்டையை விட்டவாறே யாண்பது மத்திற் செல்லும்
கொட்டியிற் பேடு செல்லுங் குறித்தவை யறிந்து கொள்ளே

*    *    *    *    *    *

அமுதபாக மிடப்பாக மறிந்தே அட்டை விடுவதற்கு
அமுதபாகந் தனிலேயாணட்டை தன்னைப் பொருந்த
விடக்
குமுதமான விடப்பாகங் குயில் வாயான பேடுதனைச்
சமனேயான விடத்துக்குத் தானேயறிந்து விடு
பெண்ணே. (6)

End :

காச நீரிழிவு வாதகுன்மமிவை கண்ட நோய் கடிய வாதமுங்
கன்ன சூலையதி சாரகுட்ட கயரோகமுங் கருது மூலமும்
நாசிபீடமிகு மாவிருதன் தலையில் நோய்களான பலபேதமும்
நலமிலாவுதர பித்தமு மிகவு நாடிவந்துதர நோயெலாம்
வீசிவந்த சுரமான சேந்துதா மேவிடுங் கடி சுவாதமும்
மிக்ககிரிமை யிதையத்தில் நோவுமதில் மிகுதியானபல
பேருமே
நேசமாமிரவி யுதையமாவது முன்னீர் மலங்களும்
விடாமுனே
நியமமா மமுத முண்டிடிற் பெரிய நினைவிலாமுத
மாகுமே. 11

வேலுமயிலுந் துணை.

---

35. (e) சத்திர விதி.

Lines 5—6 in a Page.

இதில், சத்திரம் செய்தற்கு வேண்டிய இருபத்தாறு

வகை ஆயுதங்களும் அவற்றின் லட்சணமும் சத்திரஞ் செய்விதமும் கூறப்பட்டுள்ளன.

Beginning:

சூத்திரமாகிய கொழுவினைத் துருசறு
நித்திலா தன்னிலு நினதிரு சரணமும்
பத்தொரு கரமுமென் மனத்தினில் மறந்திலேன்
சத்திர விதிசொலத் தானடந் தருள்செய்வாய்.

கத்தி சத்திரமோடு குறும்பிதனை வாங்கியுங் கருமூக்கு வாய்தன்னுடன்
கடுமுள்ளு வாங்கியு மூக்குச் சலாகையுமொழிப் பொட்டுடன்

................................................ ........

தருமட்டக் கோனூசி மிகுசெப்புக் குழையோடு சலாகை வட்டகையு மிகவே
குத்துமொரு பஞ்சமுகஞ் செப்புச் சலாகையுங் கூறு காயக் கோனுமே
குலவு மொரு தெண்டுச் சலாகை நயனக்கத்தி கூடு மிவ்வகை யானதே
பத்துடன் பதினாறு வகையான தாயுதம் பார்மீது பண்டிதற்குப்
பரமசிவ னருளினா லுண்டான திவ்வகை பகுத்தறிந்திவை செய்வரோ.

கத்தி மூவிர லங்குல மூன்றரை
மெத்த கூருமோ ரதுவுமோ ரங்குலம்
சித்தமா மிவை செப்பிடும் போதுதான்
வைத்த வட்ட மயிர்க்கத்தி காணுமே.

End:

பிரமா வென்னும் வீறு சத்திர
மதுவே யங்குல மஞ்ச தாகும்

நிறையே காற்பலம்முனையே யொருமாத்
தருமே வாயக்குறுக் கதுமை யாகவே.

* * * *

காலுடம்பிற் கழலை தன்னைக்
காரிய முறவரு சந்திரத்தாலே
கீறிடு சதையறு வினையறு மென்னக்
கூறிடும் பிரமாக் குணசந்திரத்தை
மேல்வரு துட்டக் கிரந்தியவன் றிரவே
பண்டிதர் கேளு மிச்சை யகையார்
மங்கலவா அவர் தொழிலாமே. 28

Colophon:

சிரிமுகவருடம் பங்குனிமீ 4௳ எழுதினது. குமரன் கையில் எழுத்து.

---

## 36. (ग) திரட்டு வாகடம்.

Lines 4—6 in a Page.

இது, பலவாகடங்களினின்றும் திரட்டிய விஷயங்களைக் கொண்டது. பிற்பாடியது. சித்தர் நூலன்று. இதில் மூலம், கிராணி, குன்மம், மேகம், காமாலை, சூலை, வாயு, வாந்தி, சன்னி, காப்பன், விஷபாகம் முதலிய நோய்களுக்கு மருந்துகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

Beginning:

விக்கின விநாயகன் மெய்ப்பதம் போற்றியே
தக்க தோர் வாகடந் தான்செய வுன்னினேன்
மிக்க பாவலர் எனதுபுன் சொல்லினை
ஒக்கு மென்று உணர்ந்துகொள் வார்களே.

வாதந்தா னெண்பதாக வருகின்ற பக்கவாதஞ்
சீதமே நடுக்கு வாதஞ் சிறந்திடு முடக்கு வாதஞ்

குதமே அசந்தவாதம் தோன்றிய முகத்தில் வாதம்
பேதமாம் வாதந்தீரப் பெருந்திடு மருந்து கேளே

End

போமிது பொன்னாங் காணிபுகழ்சிறுக் கீரை முத்தம்
ஓமிது சிந்தில் நிம்பம் உயருநா ரத்தை கோட்ட
மாமிது மதுர மேல மடருஞ் செண்பகப்பூ வங்கம்
நாமிது சொன்னோ மெண்ணை நயந்தெரி முழுகு போமே. (50)

திரட்டு வாகடமுற்றும்.

குறிப்பு:

இதில் திரட்டுவாகடத்தையல்லாமல் இன்னின்ன சரக்குக்குமேற்றால் விஷமென்றும், இன்னவைகளுக்கு உள்விதை விஷமென்றும் இன்னின்ன மாதத்தில் இன்னின்னதை அனுபானமாகக் கொள்ள வேணுமென்றும், இன்னின்னோர்க்கு லங்கனம் போடலாகாதென்றும் கூறும் செய்யுட்களும், கண்ணோய்க் கிடுமருந்தும், விஷத்திற்கு மருந்தும் எழுதிய ஏடுகளும் கோக்கப்பட்டிருக்கின்றன.

---

## 37. No. 26 (a) சட்டைமுனி கற்பவிதி.

ஏடுகள் 345; பூர்த்தி Lines 8—9 in a Page.

இது பதினெண் சித்தர்களில் ஒருவராகிய சட்டைமுனிவரால் செய்யப்பட்ட கற்பநூல். இவர் கம்பிளிச் சட்டையைத் தரித்திருந்தமையின் இவரைக் கம்பிளிச் சட்டை நாதரெனக் கூறுவர். கைலாசச் சட்டை நாதர் எனவும் இவர் பெயர் வழங்கும். தேகத்தை நோய் முதலியவை அணுகாமல் உறுதிப்படுத்தி அழியாமற் செய்யும் மருந்து கற்பமெனப்படும். அவ்விதமான கற்பங்களைக் கூறுதலின் இந்நூல் கற்பவிதி எனப் பெயர் பெற்றது. இதில் வல்லாரை காந்தை கரி

சாலே குமரி செருப்படி வேம்பு முதலிய கற்பமூலிகளை உண்ணும் விதம் சொல்லப்பட்டிருக்கிறது. இது முழுவதுமிருப்பினும் சிதைந்திருக்கிறது.

Beginning :

ஏறுமென்ற பலநூலிற் கோடா கோடி
யென.....கொங்கணர் காண் பாடிப் போட்டார்
தேறுமென்று கண்டு கோரக்கர் சொன்னார்
சிவமான மூலகுரு வுணரோ மென்றார்
கூறுமென்று சிவநூலிற் கண்டுகொள்ளு மென்றார்
கூறாத மச்சமுனி யறிந்து பாரென்றார்
மாறுகின்ற மடபதியாஞ் சித்த ரெல்லாம்
மறைத்தாரே காயசித்தி மாண்டார்காணே.

End :

பாரப்பா காயசித்தி செய்யு மார்க்கம்
பஞ்சிட்டுப் பாரம் வைத்தாற் போலச் சொன்னேன்
ஏரப்பா சித்தர் சொன்ன கற்பத்துக்கும்
என்னுடைய நூலுக்கும் இசைத்துப் பாரு
தூரப்பா தொட்டல்லோ முடிவரைக்கும் சொன்னேன்
சொல்லாதே வொளித்திட்டார் சித்தரெல்லாம்
காரப்பா குருபதத்தைக் காத்தாக்கால் சித்தி
காயசித்தி பாடினதோர் காட்சிதானே. 92

---

## 38. (b) சட்டைமுனி ஆயிரம்.

Lines 8—9 in a Page.

இது வாதகாவியம் ஆயிரம் என்று சொல்லப்படும். இதில் வங்கக்கட்டு, கெந்தகமெழுகு, அயகாகம், மனோசிலை மெழுகு, பூனீற்றுக்குரு, ரசகுரு, ரசதஎமம், வெடியுப்பு நீர், சாரநீர், கல்லுப்புக்சுண்ணம், ஏழுசுண்ணக்குகை, குளிகை

சாரணை, கெந்திச்செம்பு, அயச்செம்பு, தாரிசுருரு, தாளகத் தயிலம், அபிரேகசத்து, தம்பனக்குளிகை, நாகக்கட்டு, தங்கச்சுன்னம், நாகச்சுன்னம், பூஞகச்சத்துக்கிண்ணம், பாஷாணக்கட்டு முதலிய இரசவாத மருந்துகளும் வைத்திய முறைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. பிழையதிகமாயுள்ளன. ஏடுகள் முரிந்தும் சிதைந்து மிருக்கின்றன.

Beginning:

அகண்டபரி பூரணமாம் உமையாள் பாதம்
அப்புரத்தே நின்றதொரு அய்யர் பாதம்
புகண்டு நின்ற கணேசனொடு நாதாக்கள் பாதம்
புகழான வாக்குடைய வாணிபாதம்
நிகண்டெனவே யெனையாண்ட குருவின் பாதம்
நிரைநிரையாய் சொரூபத்தில் நின்றோர் பாதம்
முகண்டென்னை யீன்றெடுத்த சின்மயத்தின் பாதம்
மூவுலகு மெச்சிதற்குக் காப்புத்தானே.

நிற்குணமாய் நிர்மலமாய் நிரஞ்சனமுமாகி
நேரான பூரணமாய் மனமெட்டாத
சற்குணமாய் சமாசமாய்த் தானுந் தாண்டி
சச்சிதா னந்தவெளிக் கப்பால் நின்ற
தற்குணமா யெனையாண்ட சின்மயத்தைப் போற்றிச்
சமாசமாய் வேதாந்த வாதஞ் சொல்வேன்
நற்குணமாஞ் சனகாதி ரிஷிகள் பாதம்
நலம்பெறவே நாவில்வைத்து பாடுறேனே. 2

End :

ஒன்றான சின்மயத்தின் பதத்தைப் போற்றி
உற்றதொரு கயிலாச தேக மாக
நன்றாக யீன்றதொரு உன்மனையைப் போற்றி
நலமான நாதாக்கள் பதத்தைப் போற்றிக்

கன்றான கயிலாச தேகமாய் வந்த
காரணமாஞ் சட்டருட பதமும் போற்றித்
தன்றான வாதநூலாயிரமும் சொல்லிச்
சாதகமாய்ப் பாடிவிட்டேன் வாதமுற்றே. 1005

கைலாச பாரபரமான கம்பிளிச்சட்டைக் கயிலாச நாதர்வாதநூல் முற்றும். நாதாக்களுடைய பாதாரவிந்தமே துணை.

---

39. (c) சட்டை முனி நிகண்டு
ஆயிரத்திருநூறு.
Lines 7—9 in a Page.

இதில், சரக்குகள் மூலிகைகளின் பரியாயப் பெயர்களும் வாதவைத்திய முறைகளும் பிறவும் சொல்லப்பட்டிருக்கின்றன

Beginning :

ஆதியந்த மில்லாத பூரணத்தை நோக்கி
அடுத்துநின்ற உண்மைத்தாய் பதத்தைப் போற்றி
பாதியந்த மாகிநின்ற உமையாள் சொல்லப்
பாங்கான சின்மயத்தின் கருணையாலே
ஓதியந்த வாதமென்ற நூலுக் கெல்லாம்
உசாவைத்த நாகமணிக் கிரீடம் போல
சாதியந்த குணத்தோடு நிகண்டு சொல்லச்
சச்சிதா னந்தவெளி காப்புத்தானே.

சத்திசாரம்.

சத்திவளச்சி சாதகச் சக்கிரி
முத்திய வாதிச்சி மூச்சுத கண்டச்சி

அத்திய காந்தாரி ஆகாப் பறைச்சி
பத்திய ளும்பரும் சத்திய சாரமே. 21

குப்பை மேனியின் பெயர்

திரிபுர மெரித்தோன் சிகமுறு மேனி
கரியுற வுரித்தோன் காலாக் கினியோன்
மரிமுறை மசக்கி மார்ச்சால மோகினி
கொரியிலைப் பேருதான் குப்பை மேனியே. 77

End

நாட்டினேன் செயவீரம் வாரகவித்தை
நலமான வுப்பினுடவுறுதி சொன்னேன்
பூட்டினேன் வாதத்தில் பூதகஞ் சொன்னேன்
புகழாக இருபத்து அஞ்சு அங்கம்
ஆட்டினேன் பலநூலிலலேய வில்லை
ஆச்சரியம் நிகண்டினுட தொகையைக் கேளு
நீட்டினேனாயிரத் திருநூற்றின் மேல்
நோக முப்பது முகிந்து முற்றே.
ஆக மந்திரம். 1200

---

## 40. NO. 27 சட்டைமுனி வாதகாவியம் ஆயிரம்.

ஏடுகள் 373; பூர்த்தி Lines 5 in a Page.

இது 26-ம் நம்பர் உட்பிரிவாகிய (*b*) போன்றது. இதில் இந்நூல் முழுது மிருக்கிறது.

**Colophon :**

சகாப்தம் 1722க்கு ரவுத்திரிஷு பங்குனிமீ 20உ கிருஷ்ணபக்ஷம் திதிகை செவ்வாய்க் கிழமை சித்திரை நட்சத்திரம் கூடின சுபதினத்தில் ராசமானிய ஸ்ரீ சரபோஜி

மகாராசா சாயேபு அவர்கள் ஆக்ஞாபிச்ச பிரகாரம் கலாசி கணக்கு வெங்கடேசம்பிள்ளை குமாரன் சுப்பராயன் கம்பிளிச் சட்டைக் கயிலாச நாயனுர் வாத நூல் எழுதி நிறைந்தது முற்றும் குருவேதுணை.

---

## 41. NO. 28. சட்டைமுனி வாதகாவியம் ஆயிரம்.

ஏடுகள் 216; பூர்த்தி Lines 5—8 in a Page.

இதுவும். 26-ம் நம்பரின் உட்பிரிவாகிய (*b*) போன்றது. இது மேற்கண்ட இரண்டு பிரதிகளைவிடப் பழமையானது. முழுவது மிருப்பினும் சிதைந்திருக்கிறது.

---

## 42. NO. 29. (*a*) சுந்தரானந்தர் சூத்திரம் நூற்றுப்பத்து

ஏடுகள் 93; Lines 5 in a Page.

இது, வல்லாரை சையான் காந்தை முதலிய மூலிகை கற்பங்களையும் இரசவாதத்திற் காகிய சுன்னம் தயிலம் செந்தூரம் முதலியவைகளையும் கூறுவது.

Beginning:

ஆதியந்த மிகநிறைந்த சட்டைநாதர்க்
கன்பான சோதி யென்ற பிள்ளையாகிச்
சோதியந்தத் துள்ளிருக்குஞ் சுடரைப்போற்றி
சுந்தரமென் றேபேரு மிட்டா ரெங்கள்
நாதாந்தத் திருமூலர் பிண்ணாக்கீசர்
காதாகத்தீசர் பாதம் போற்றியேதான்
மேதினியிலன்புடனே வாதம் பார்த்தேன்
வேதாந்த சிற்பரைதான் காப்பதாமே.

ஆமப்பா நவலோகம் பழுக்கும் பத்தாய்
அப்பனே யில்லாட்டால் மலைமேலேறிப்
போமப்பா கற்பத்தைக் கொண்டு நீதான்
புகழ்பெறவே சாகாமலிருந்து கொண்டு
நாமப்பா சிவனடியைப் போற்றிக் கொண்டு
நாதாந்த சட்டைமுனி மகனே யென்று
ஏமப்பா வந்தோர்கள் எனக்குத் தம்பி
என்றேநா னுரைத்திடுவன் சித்தாமே. 16

**End:**

தானென்ற மூலமதை யறியவேணும்
சத்திசிவ மிரண்டையுமே காணவேணும்
தானென்ற குப்பிநீக்கல் லறியவேணும்
தருவான அண்டத்தைச் செய்யவேணும்
தானென்ற கற்பமதை யுண்ணவேணும்
சாத்திரத்தைப் பார்த்தாக்கால் செய்யவேணும்
தானென்ற தொந்த நூலாயிரத்து நூறு
சாத்திரத்தில் விதி நூற்றுப்பத்து முற்றே. 110

---

### 43. (b) சுந்தரானந்தர் சூத்திரம் நூற்றுப் பத்து.

Lines 5 in a Page.

இது, மேற் பிரதியைப் போன்றது. அதைவிட சுத்தமான பிரதி. பாடபேதமும் காணப்படுகின்றது. அடியிற் கண்ட செய்யுள் மட்டும் அதிலில்லை.

பத்திமுத்தி யானதொரு மனமே வேணும்
பதறாமல் வாதவித்தை செய்யவேணும்
சித்தியுட லம்பரமா யிருக்கவேணும்
செகமெல்லா மொன்றுமில்லை யென்னவேணும்

கத்தனுட பதப்பணிந்து இருக்க வேணும்
கற்பமுண்டு யோகத்தி லிருக்க வேணும்
சத்தியடி முடிதனையே யறியவேணும்
சட்டைமுனி நூலறிந்தோன் வாதியாமே. 111

சுந்தரானந்த சுவாமிகள் சூத்திரம் நூற்றுப்பத்து
முகிந்தது முற்றும்.

---

## 44. NO. 30. மச்சமுனி பெருநூல் எண்ணூறு. ஞான காண்டம்.

ஏடுகள் 246; Lines 5 in a Page.

இதில், வசியம், மோகனம், பலவகையான மை, வாடை, இடுமருந்து, வித்தைகள் அஷ்டகர்மங்கள் இரசவாத மருந்துகள், மந்திரங்கள் ஜாலங்கள், குடம், பச்சைக்கற்பூரம் முதலிய சரக்குவைப்புக்கள், வைத்தியம் பஞ்சபக்ஷி முதலியவைகள் சொல்லப் பட்டிருக்கின்றன. இதனை இயற்றியவர் மச்சமுனி என்பவர். இவர் 'சீர் பெற்ற தகப்பனெங்கள் பிடிநாக்கீசர்' எனவும் 'கண்டவுடன் பிடி நாக்க ரமுதமூட்டிக் கண்மணிபோல் வளர்த்தென்னைக் கருணைகூர்ந்து, அண்டரொடு முனிவர் சபைதன்னில் கூட்டி ஆட்படுத்தி உருவாக்கி வைத்தாரையா' எனவும் 'பிண்ணாக்கர் வளர்த்த பிள்ளை மச்சனுனே' எனவும் கூறுமாற்றால் இவரை பிடிநாக்கரது மாணாக்கரென்றறிக்கலாம். இந்நூல் விஷய அட்டவணை எழுதிய 6 ஏடுகளும் 23 வெற்றேடுகளும் முதலில் சேர்க்கப்பட்டுள்ளன. பிழை அதிகமாயுள்ளன.

Beginning:

ஆதியந்தவேத விஸ்தாரத்தை யென்ற
ஆதிகுரு வென்ற பொருள் பிடிநாக்கீசர்

சோதிப்பா வெளியான சுரூபானந்தந்
  சூட்ச சடாதார பீடந் துரியாதீதம்
ஓது பிரணவ சிருங்கார பீட
  முன் மனைக்கே வெகு தூலாதாரத்தை
பாதி சரா சரரூப விந்து நாதம்
  பாபிர்ம மூலகணேசன் காப்பாமே.

பாரப்பா இந்தமைக்குச் சாபமில்லை
  பகையில்லை பேயில்லை பசாசுமில்லை
ஆரப்பா திஷ்டி யில்லை யேவவில்லை
  அக்கியானங்களில்லை பில்லியில்லை
நேரப்பா சகலர்களும் வசியமாவார்
  நின்னுடைய வதனமதிலிட்டுச் சென்றால்
காரப்பா வசிய மூலிகையைக் கேளு
  கருக்குருவா யட்டகர்மஞ் செய்யத்தானே.

End;

வித்தகத்தோன் பதந்தானை வெளிவிடாதே
  வேதாந்த மனோன் மணித்தாய் பாதத்தானே
சித்தருக்கா மித எண்ணூறு பெருநூலப்பா
  சிவஞானந் தங்குகின்ற பெரியோர்க்காகும்
மத்தொருத்த ரிந்நூலைப் பதனம் பண்ணி
  வைத்தாலும் வாதமுத்தி வாய்க்கும் வாய்க்கும்
பத்தருக்கும் பாடிவைத்த சதமெட்டான
  பதிவாகும் பெருநூல் மெஞ்ஞானமுற்றே. 801

Colophon:

சாலிவாகன சகாத்தம் 1746 தாரண ௵ தைமீ 20௳ யில் ஸ்ரீ மகா-ள-ள-ஸ்ரீ சாபேந்திர மகாராசா சாயேபு அவர்கள் ஊழியன் சிதம்பரபிள்ளை குமாரன் பஞ்சனதம் எழுதிய மச்சமுனி யெண்ணூறு பாடல்.

45. **No. 31** *A.* போகர் நிகண்டு அட்டவணை.

ஏடுகள் 151; அபூர்த்தி Lines. 2—8 in a Page.

இதில் போகர் நிகண்டில் சொல்லியிருக்கிற மருந்துகளுக்குள்ள பல பெயர்கள் அட்டவணையாக எழுதப்பட்டுள்ளன. இந்நூலின் தலைப்பிலுள்ள ஏட்டில் போகர் நிகண்டு, சட்டமுனி நிகண்டு, மச்சமுனி நிகண்டு, சட்டாச நிகண்டுகளின் திரட்டு என்று எழுதியிருப்பினும் ஒவ்வொரு ஏட்டிலும் 'போகர் நிகண்டு' என்றே எழுதப்பட்டிருத்தலின், இதற்கு 'போகர் நிகண்டு அட்டவணை' என்று பெயர் எழுதலாயிற்று.

**Beginning :**

போகர் நிகண்டு சவுக்காரப்பேர்.

சதாசிவம், வெண்சாரை, வண்ணான், உவக்காரம், சிற்பரை, வழலை, குருமுறை, உமையாள், ஈசன், அவக்காரம், வாத ஆதி, ஆதியாங்குடியானோன், கூர்மையாளன், சுவக்காரம், சோமன், ரவி, வன்னி, சுயம்பாகி, சுத்தியானோன், சூலானோன், சுடலையாடி, சிருஷ்டியாளன், வாதத்தின் தலைவன், வாதமுடிப்போன், அந்தகன், காந்தள்மலர், பவழம், பாதத்தோன், முத்தி, ஏமசிவன், மூர்க்கன்.

போகர் நிகண்டு பூவழலை பேர்.

மூர்க்கன், தாணிகாதன், பூநீறு, பூமிநாதன், தீர்க்கன், ஒட்டச்சி, ஊசரம், வெள்ளை, பூசாரம், குசத்தி, அருக்கன், வேகத்தி, பூமிருது, சவுடு, வண்ணாத்தி, ஆதிமுதல், குருச்சி, உரகன், காயகல்பம்.

போகர் நிகண்டில் கல்லுப்பின் பேர்.

கடல்குருவி, பாறையுப்பு, அன்னக்கூர்மை, அல்லுப்பு, அட்சயம், பிரோத்தம், அறுகலைவயாதாரம், வேலைநீர்,

வெல்லுப்பு, முனி மூத்சம், சவர்ச் சலம், மிருத்திய கெந் தம், நல்லுப்பு, தற்கால லவணம்.

End

போகர் நிகண்டில் வங்கமணலின் பேர்.

வடிப்பினையின் வங்கம், மாருதி நாதம், கொடுப்பினை அடுப்பினை, குடிலம், சவளை, கோஷவங்கம், திரம்புவலி, நாங்க வங்கம், மாயூழம், பூதி, லோகம், அருப்பியம், கயப் பினை.

போகர் நிகண்டில் வங்கமணலின் குணம்.

போகர் நிகண்டில் வெள்ளி மணலின் குணம்.

---

## 46. No. 32 (a) மச்சமுனி நாயனார் முப்பு தீக்ஷை எண்பது.

ஏடுகள் 17; பூர்த்தி Lines 5 in a Page.

இதில் இரசவாதத்திற்கு வேண்டிய சுன்னம் செய நீர் நாகக்கட்டு முதலியவைகளும் ஞான விஷயமும் கூறப் பட்டுள்ளன. அச்சிடப்படவில்லை. சிறிது சிதிலமாயிருக் கிறது.

Beginning:

நடுமையகார வகாரத் திரையமே சொல்
கடலிகடத் தானைமுகன் காப்பாம்—திடமான
சாரத்துறையுந் தனிச்சூடன் தண்ணீரும்
காரத்துறை கண்காண மந்திரம்.
பொன்னணி மூலம் போக்கில் ரசவாதம்
நன்னயமாக நாட்டினர் பாட்டன்
கன்னியிலுண்டை சவுக்காரமன்றி
பின்னொருகாரம் பிதற்றுகின்றேனே.

காணாது வொன்றும் பசுவுக் கிதப்பா
ஆணவமானால் பதிப்பாசஞ் சேரும்
கோளினார் சாத்திரம் கூறுமே பொய்யோ
தோணுமே யோகச் சுழுமுனை பார்த்திடே.

**End :**

ஒப்பான தாயிரத் தெட்டிதழ் கண்டவன்
எப்போதுஞ் சாகா திருப்பவன் சிவன்சிவன்
அப்பா பராபரத் தானந்த வெழுத்தைச்
செப்பச் சிவமாஞ் சேரவு முத்தமே. 82

மச்சமுனி நாயனார் சூத்திரம்.

**Colophon :**

மச்சமுனி சூத்திரம் ஆடக்கார அண்ணா எழுதினது.

---

## 47. (b) யச்சேந்திர நாயனாரருளிச் செய்த கலைக் ஞானம் எண்ணூறு.

Lines 5 in a Page.

இது, பல காண்டங்களாகப் பகுக்கப்பட்டிருக்கிறது. நூல் முழுது மில்லாமையால் இத்தனை காண்டமுடையதெனத் தெரியவில்லை. ஆயினும் 'கைகண்டபடி சொன்னேன் நூறு காண்டம்' என்று இவர் 8-ம் செய்யுளில் சொல்வதைக் கொண்டு 100 காண்டங்கள் எனக்கொள்ளலாம். இதில், வைப்பிலக்கண காண்டம், ரசப்பிரளைய விலக்கணகாண்டம், செந்தூர விலக்கணகாண்டம், ரசவிலக்கணகாண்டம், மகாசந்திரோதய விலக்கணகாண்டமென்னும் ஐந்து காண்டங்கள் மட்டும் இருக்கின்றன. அவற்றுள் வைப்பிலக்கண காண்டத்தில் கெந்தி, சூடம், பச்சக்கற்பூரம் அஞ்சன பாஷாணம், வெள்ளைப்பாஷாணம், குங்குமபாஷாணம், காக பாஷாணம், ஏமசிங்கிமுதலிய சரக்குகளின் வைப்பும், ரசப்

பிரளய விலக்கணத்தில் ரசசெந்தூரத்தை இன்னின்ன அனுபானத்திற் கொடுக்க இன்னின்ன வியாதிகள் தீரும் என்பதும் செந்தூர விலக்கணத்தில் அனேக வகையான செந்தூரங்களும் அனுபானங்களும் தீரும் நோய்களும், ரசவிலக்கணத்தில் உருத்திர ரசம், ரசப்பிரளய திரிபுர தாண்டவம், சண்டமாருதரச செந்தூரம், சாபஞ்சாரச செந்தூரம் முதலிய ரச சம்பந்தமான மருந்துகளும், மகாசந்திரோதய விலக்கணத்தில் பூரணசந்திரோதயம், பால சந்திரோதயம், பூரணார்க்க சந்திரோதயம், பூர்ணார்க்க பாலசந்திரோதயம் அபிரேக சந்திரோதயம், கெந்தி சந்திரோதயம், பூஞக செந்தூரம், அபிரேகக் கிண்ணம் முதலியவைகளும் சொல்லப்பட்டுள்ளன. இவைகளையல்லாமல் பலவகையான பற்பங்கள், சூரணங்கள், மாத்திரைகள், எண்ணைகளும், சொல்லப்பட்டிருக்கின்றன. இந்தப் பிரதியிலுள்ள செய்யுட்டொகை 474. பிழையும் அதிகமாக இருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

Beginning:

பருதிமதி கனலொளிபதாயகில மெல்லாம்
பாதமதாத் திக்கெட்டும் படர்தோள்களாக
வருதிகிரி பல்லுயிர் களெல்லா மைம் புலனுகவுடல்கள்
வகைபலவு முடலாக வானங்கள் முடியாகத்
திருவளியெல்லாம் பிராணனாக ஒரு வெளியே
திருவுருவமாக வானந்த நடமாடுங்
கருதரிய மணிமன்றுள் நிறைந் தெந்த வறிவும்
கண்மணியினிணையடிகள் கண்ணுள் வைத்துக்
களிப்பாம்.

பாரிந்த சித்தியெல்லாம் என்னையாண்ட
பராபரமா மாலரங்க நாயன் காட்ட
காரிந்த சகலசித்தும் பண்ணியானுங்

கை கண்டபடி சொன்னேன் காண்டநூறு
வேரிந்த காண்ட மொன்றில் சாக்குவைப்பு
மேலான வாதமுதல் கற்பந்தானும்
கூரிந்த குளிகை வைத்தியங்க ளெல்லாம்
கூறுகிறேன் கோரக்கர் குறிப்பாயக்கேளே.

ஆரிந்த சண்டமாருத செந்தூரம்
அதனிலொரு பணவிடைமுக் கடுகுபொடி தேனில்
தாரிரண்டு நேரமிருநாள் கொள்ள
சர்வசுர வாய் விருமல் குன்ம மெட்டும்
போமிந்த செந்தூரம் பணவிடை முக்களஞ்சி
பொடி பரங்கிப் பட்டை கணப்பொடி கழஞ்சிதேனில்
ஆமிரண்டு நேரமுமண்டலங் கொள்வோர்க்கு
அறுந்தீராக் கடுப்பும் தீராத புண்ணு மறுமே.

End:

கேளிரசம் வெள்ளைப்பாஷாணம் துத்தம்
கௌரி கெந்தி தூருசவகைக் கொருகாசாறும்
நீள்சிலையிற் பொடித்துப் பரப்பிக் கட்டி
நீநெய்யோர் படி யெண்ணையிற் கொளுத்தி
கூழாக விளக்கெண்ணெய் வார்த்தரைத்துக்
கொடுங் கலையிற் பூசியிட்டு இலைமேற்கட்ட
கடின சிலந்தி யெந்த விரணப்புண்ணும்
வீக்க மெல்லாங் கரைந்தாறும் விதனம் போமே.

---

## 48. NO. 31. *B.* (*a*) மச்சமுனி நிகண்டு நூற்றெறு.

பூர்த்தி Lines 5 in a Page.

இதில் முப்பு முறையும் ஞானமார்க்கமும் கூறப்பட்டுள்ளன.

Beginning :

முப்பாழுக் கப்பால் முடிந்தமுத லெந்நாளுந்
தப்பாமற் பூரணத்தே சாற்றுவாய்—எப்போதும்
வேகாச் சடலமுத்தி வேண்டுங்கோள் முக்கோணச்
சாகாக் கணேசன்றாள் தான்.

பூரணத் தெய்வம் புகழ்பெற்ற தெய்வம்
காரணத் தெய்வங் கருத்தஞ்சு பூதம்
மாரணத் தெய்வம் வழங்குமா மூலந்தான்
ஆரணத் தொண்ணூற் றாறுஞ் சடலற்கே.

விளங்கு மகாரம் விஷ்ணுவ தாகும்
வளங்கு முகார மகாலட் சுமியாம்
களங்கமற் றொன்றி காரண நந்தியாம்
பளங்கனிந் தூறும் பசுபதி பாசமே.

ஊரிற் குளங்கரைக் குள்ளான சிப்பிதான்
தாரியுடலிரண் டிந் தானை ஆமைகாண்
பாரினிற் குப்பிடு கல்லான பாதகன்
ஊருவர்ப் பூவை யுறக்கொல்லுஞ் சுண்ணமே.

நாலுக்கு நானே நன்றாய் வகைசொல்வேன்
காலுக்குஞ் சத்தி வழலையினுப் பொன்று
பாலுமூ றுடன் பாறையினுப் பொன்று
சீலமா முத்துச் சிப்பியிற் சுண்ணமே.

End:

பதினொன்று மெட்டும் பதினாறு மேல்மூன்றும்
கதிதரு பத்துங் கண்டறி வாரில்லை
கதிதரு பத்துங் கண்டறி வார்க்கு
நிதிசெயமானந்தம் நிட்சயந் தானே. 106

மச்சமுனி நிகண்டு முற்றும்.

## 49. (*b*) மச்சமுனி நாயனார் கடைக்காண்டம் எண்ணூறு.

Lines 5 in a Page.

இதில், தசதீக்ஷைவிபரம், பதி பசு பாசலட்சணம், அஞ்செழுத்துண்மை, சரக்கு வைப்புகள், சரக்குகளின் சத்துரு மித்துரு, சுன்னமுறைகள், அவற்றால் தீரும் நோய்கள், கற்பங்கள், பற்பங்கள், லவணபஞ்சபூதம், லோக பஞ்சபூதம், பாஷாண பஞ்சபூதம், உபரச பஞ்சபூதம், வாசி பஞ்ச பூதம், யோகவேஷ்டி, ரேசக பூரக கும்பகம், பெரியோரிலக்கணம், முதலியவை சொல்லப்பட்டுள்ளன. இதற்கு மச்சமுனி நாயனார் திருமந்திரம் எண்ணூறு எனவும் பெயருண்டு. அச்சிடப்படவில்லை.

Beginning :

ஆதி பராபரத் தையர் மலரடி
நீதியில் வேத நிர்மய மானது
சோதியினாதந் துலங்குஞ் சுடரொளி
சாதியினந்தி தன்பதி காப்பே.

பெருமை சிறந்திடும் போரஞ் செழுத்தி
னொருமையின் பாகத் துண்மையைக் கேளு
சிறுமையும் வறுமையுஞ் சென்றிடு மந்த
வருமை வளம்பதியாம்பசு பாசமே. 44

கண்ட பொருளைக் காரணமாக
வின்றுநான் சொன்ன வெண்ணூறு மந்திரம்
விண்ட பொருளின் விபர மறிந்தபே
ரண்டமும் பிண்டமு மறிபவர் தானே. 65

End :

வாசி பிறந்ததும் வாசியில் சென்றதும்
தேசிகனாதன் திருவுரு வானதும்

பூசிணையாகிய பொருளை யறிபவர்
ஆசான்றன் பாதத்தையறிபவன் தேசியே. 803

மச்சமுனி நாயனுர் கடைக்காண்டம் வைப்பு எண்ணூறு
முற்றும்.

---

## 50. NO. 33 கொங்கண நாயனுர் நடுக்காண்டம் ஆயிரம்.

ஏடுகள் 125; Lines 5 in a Page.

இதில், இரச வாதத்திற்குரிய பலவகையான சுன்னங்கள், நாகக்கட்டு, சூதக்கட்டு, சூத வெண்ணெய், துருசு வெண்ணெய், குளிகை, செயநீர் சாக்குகளின் சத்துரு மித்துரு, பரிசவேதை மணி, சத்தவேகமணி, அக்ஷயத்தின் மணி, திராவகங்கள் முதலியவைகளும் கற்பங்களும் கூறப்பட்டுள்ளன. இதில் 123 முதல் 161-வது செய்யுள் வரையில் எழுதிய ஏடுகளில்லை. இது அச்சிடப்பட்டிருக்கிறது.

Beginning :

நடுக்காண்டம் பாடுகிறேன் பூரணமே காப்பு
நலமான சுண்ணம்புக் காடு காடு
அடுக்கொண்ட நாகமொன்று வங்க மொன்று
அப்பனே யீயமொன்று உருகும் போது
தடுக்கென்ற சூதமொன்று அதிலே விட்டுத்
தாளகமாம் சுன்னமொன்று அதிலே தூவி
முடுக்கென்ற முப்பிரலே பூரச் சுன்னம்
மூட்டி யொரு இடையிட்டு வறுத்திடாயே. 1

வறுத்து இதைக் காண்டியிலே கிண்டத்தூளாம்
வாங்கியிதில் நாவிலொன்று வீரங்கூட்டி
நிறுத்தியிதைக் கருவாலே வில்லைதட்டி
நெருப்பாக வூதப்பா சுண்ணம்பாகும்

கறுத்துவது கண்டாக்கால் வீரங் கூட்டி
கைமுறையாய் கருவாலே வில்லை கட்டி
மறுத்துப்புச் சுண்ணும்புக் குகையிலிட்டு
மாட்டி நன்றூயூதிடவே சுன்னமாமே. 2

கண்டதோருப்பை விட்டாற் கட்டில்லை வாதமில்லை
கண்டதோருப்பை விட்டாற் கவனமுஞ் சித்தியில்லை
கண்டதோருப்பை விட்டாற்கசடுரச் சத்துமில்லை
கண்டதோருப்பையீசன் கயற்கண்ணிக் கருளினூரே. 212

காணிந்த வெண்ணெய் தன்னைக் கடுகியே குகையி
லூட்டிப்
பூணிந்த காரம் பூட்டுப் புகழ்பட வுருக்கு ஆடும்
தோணிந்தத் தொழிலைப் போலச் சூழ்ச்சிந்தத் தொழிலு
மில்லை
வாணிந்தநாத நீரின் வல்லமை கண்டு கொள்ளே. 920

End:

சித்தியாம் காயம் பண்ணி தேசத்தே திரிஞ்ச சித்தர்
மத்தியாய் வேதை போட்டு மணிகொண்டு ஆடுவார்கள்
அத்தியாம் பூரணத்தின் அகண்டமேனைக் காணுகில்
வெத்தியாம் சித்தியாயே வேணும் பிறப்பானந்தானே.
1002

---

## 51. No. 34 கொங்கணர் பலதிரட்டு ஐந்நூறு.

ஏடுகள் 121; பூர்த்தி Lines 6—7 in a Page.

இதில், நிமிளைச் சுன்னம், தங்கச்சுன்னம், படிகச் சுன்னம், துருசுச்சுன்னம், வழலைச்சுன்னம், கல்லுப்புக் கட்டு, காரசாரகுரு, அண்டமெழுகு, வெடியுப்பு செயநீர், காரசாரக் கட்டுகள், ஏமாசமுறை, சூடன் வைப்பு, சவ்வீர வைப்பு,

கெந்தகக்கட்டு, முதலிய இரசவாதத்திற்குரிய மருந்துகளும் யோகஞான மார்க்கங்களும் கூறப்பட்டுள்ளன. அச்சிடப்படவில்லை.

Beginning

ஆதியந்த மில்லாத வெளியுந் தாண்டி
அகண்டு நின்ற மூலகுரு பாதம் போற்றி
சோதியந்தத் துள்ளிருக்கும் பெரியோர் பாதம்
துரியவெளிக் குட்புகுந்த ரிஷிகள் பாதம்
நீதியென்ற எனையீன்ற போகர் பாதம்
நித்தநித்த மிறைஞ்சி நின்று நினைவாய்ப் போற்றி
வாதியென்று பேரெடுத்து அஞ்ஞூறுஞ் சொன்னேன்
மனேன் மணித்தாய் பதங்காப்பு மகிழ்ந்து பாரே.

வாதமென்ற தொழிலுக்குச் சூதமூலம்
வகைவகையாய் குருவுக்கு உப்பேமூலம்
நீதமென்ற பொருள்காண அடிதான் மூலம்
நேரான நடுமூலம் கண்டமாகும்
வேதமென்ற புருவமையம் மேலே மூலம்
வேறொன்று மரமொன்று துளிர்தா னென்று
போதமென்ற பொருள்காணு மூன்றிலே
புகழான அடிமூலப் போக்கு நன்றே. 33

அறிவாக வெடியுப்புக் கல்வத்திட்டு
அந்திடைக்கு நாலிலொன்று கல்லுப்பிட்டு
மறிவாகப்பழச்சாற்றை வார்த்து ஆட்டு
மைந்தனே யதுமெழுகு மான பின்பு
பிறிவாக யிருபதுக்கு ஒன்று கேளு
போரான வழலையுடச் சுண்ணம் போடு
நெறிவாக வழித்து வைத்துப் புடத்தைப் போடு
நரோகச் சுண்ணும்பாய் உப்புத்தானே. 99

**End**

ஆமப்பா அஞ்ஞூற்றைப் பார்த்தோர்க் கெல்லாம்
அருளோடே பொருளாகும் அதீதங் காணும்
ஓமப்பா வென்றுநின்று குண்டலிதா னோங்கும்
ஓங்கியதோர் கவனமது உலகமெல்லாம் சுற்றும்
வேமப்பா நல்வினையுந் தீவினையுங் கெட்டு
வேதாந்தத் தேவிரைந்து வற்று மேற்றும்
நாமப்பா கண்டபடி மூலர் பாதம் போற்றி
நலமாகச் சொல்லிவிட்டேன் அஞ்ஞூறு முற்றே. 518

குறிப்பு :

இரண்டு வெற்றேடுகள் கடைசியில் கோக்கப்பட்டுள்ளன.

---

## 52. No 35. (a) கொங்கணர் சரக்கு வைப்பு நூறு.

ஏடுகள் 35; பூர்த்தி Lines 5 in a Page.

இதில் சீனம், பூரம், காரம், சாரம், துரிசு, கௌரி, தொட்டி, வீரம், லிங்கம், பச்சக்கற்பூரம், சாம்பிராணி' பெருங்காயம், அபின் முதலிய சரக்குகளின் வைப்புமுறை சொல்லப் பட்டிருத்தலின் இந்நூல் சரக்குவைப்பு எனப் பெயர் பெற்றது. அச்சிடவில்லை.

**Beginning:**

ஆதியந்த மில்லாத வெளியுந் தாண்டி
அகண்டு நின்ற போகருட பதத்தைப் போற்றி
சோதியென்ற சின்மயத்தின் ஆயிபாதம்
துலங்கியதோர் ரிஷிகளுட பாதம் போற்றி
நாதமென்ற சுந்தரமே சொல்லக் கேளு

நன்மார்க்க முறையது வேயறிந்து சொல்வேன்
நீதமென்ற ஆயியுட பாதந்தன்னை
நினைவு கெட்டுச் சொல்லாதே நிலத்துள்ளோர்க்கே.

தானென்ற ஆதிமுதல் சாக்கைக் கேளு
தரணிதனில் பிறக்கின்ற உப்பினோடு
ஊனென்ற கல்லுப்பு இரண்டு பங்கு
உத்தமனே பழச்சாறும் தயிரும் வார்த்து
கோனென்ற பாண்டத் திலிட்டுமூடிக்
குறிப்பாக புறந்தனிலே சாணியப்பி
ஆனென்ற ஆவினுட பதியில்தாக்கு
அப்பனே மண்டலத்தில் சினமாச்சே. 7

End :

சந்தான மவ்வோடு சிகாரந் தானுஞ்
சமரசமாய் வகாரமொடு மூன்றின் மாறி
தந்தாரை யிருநாமம் மொக்கக்கூட்டிச்
சாதகமாய் மவுனமதைத் தியானம் பண்ணு
வந்தானம் பூசையைத்தான் நன்றாய்ப்பண்ணு
மைந்தா பண்ணையிலே நிர்த்தஞ் செய்வார்
தொந்தான சிவசத்தி தீக்ஷை சொன்னேன்
சூட்சமாம் நாதாக்கள் சொல்லார் பாரே. 100

---

## 53. (b) கொங்கணர் கற்பவிதி நூறு.

Lines 7 in a Page.

இதில், வாத பித்த சிலேட்டுமங்களை மீறிநடவாமல் நிறுத்தி தேகத்தில் நோயுண்டாகாமல் செய்தற்குரியகற்பலேகியமாகிய துவாதசாங்க லேகியமும், அதில் வைத்து உண்ணுதற்கேற்ற அயகாந்த சத்துச் செந்தூரமும் ஸ்நானஞ்செய்வதற்குப் பஞ்சகற்பமும் நெய்யும் கூறப்பட்டுள்

ளன. இந்தப் பிரதியில் 41 செய்யுட்கள் உள்ளன. அச்சிடப்படவில்லை.

Beginning:

வரிசையாய்ச் சொல்லுகிறேனாதி தொட்டு
மகத்தான கற்பங்கள் கொள்ள வென்றால்
பிரிசமாய் வாதபித்த சிலேற்பனந்தான்
பேய்க்கூத்து பண்ணாமல் சூடேறாமல்
பரிசொத்த வுஷ்ணங்கள் பாய்ந்தோமல்
பண்பான லேகியமுண்டு சொல்லுறேன் கேள்
உரிமைபெற செவ்விளநீர் படிதானொட்டு
உத்தமனே கற்றுழைச் சோறுதானே. 1

சொல்லக்கேள் என்மகனே காயசித்தி
சுகமாகப் பெறுதற்குப்புத்தி கேளு
அல்லக்கேள் துவாதசமாம் லேகியமென்று
அதற்குப் பேரிட்டதென்ன வென்றால்கேளு
வெல்லக்கேள் புரியட்டம் சொன்ன படிகேட்கும்
மீறுகின்ற மாத்திரையில் கட்டியேறும்
செல்லவே தசவாய்வு ஆங்காரம் போகும்
சித்தாந்தக் கிரியையெல்லாம் சேரப்போமே. 13

End:

விரும்பியதோர் சட்டைமுனி அய்யர் தாமும்
வேதாந்தம் நிறைவேற விரும்பிச்சொன்னார்
தளம்பியதோர் சேட்டகுரு வெனக்கு மைந்தா
தப்பாமல் தம்பனமாம் குளிகை சொன்னார்
உளங்குளிரச் சிவயோகத் தம்பனமே செய்ய
உறுதியாய் ரசக்குளிகை ஊணவேண்டி
வளம் பெறவே யெக்தெந்த விதமானாலும்
வயணமாய் ரசங்கட்டி யுருக்குவாயே. 41

## 54. (c) கொங்கணர் சூத்திரம் நாற்பது

Lines 5 in a Page.

இதில் இரசவாதத்திற் கின்றியமையாத வழலை என்று சொல்லப்படும் முப்பு முறையும் யோகமும் சொல்லப்பட்டுள்ளன. இதற்கு கொங்கணவர் முப்பு தீக்ஷை எனவும் பெயருண்டு. இதில் 10 செய்யுட்களே இருக்கின்றன. இந்நூலால் இவராற் செய்யப்பட்டுள்ள சிலநூல்கள் வெளியாகின்றன. இது அச்சிடப்படவில்லை.

Beginning ;

சாத்திரந்தானாறு காண்டம் விரித்துச் சொன்னேன்
தனைக்குறுக்கி மூன்று காண்டமைந்நூறு முற்றும்
சூத்திரந்தான் மூன்றுரைத்தேன் கற்பநூறு
தோஷமில்லை மோசமில்லை சொல்வேன்கேளு
சூத்திரந்தான் நாற்பதுக்குள் வழலை மார்க்கம்
திரந்தப்பா பாடினார் சிறுநூலெல்லாம்
கோத்திரதான் மூலகுரு சீஷவர்க்கம்
கூறினேன் பேரொடு கஞ்சன் காப்பே.

ஆச்சப்பா நந்தீசர் ஞான மார்க்கம்
அறிவோடே கூடிநின்று மேல்கொண்டேறிப்
போச்சப்பாவென்ன சொல்வேன் பூரணந்தான்
புருவமையந் தமர்திறந்து சிலம் பொலியைப் போற்றி
வாச்சப்பா போச்சுதென்று இருந்தேனந்த
மதியிர்ந்த பட்டணத்துக் கப்பால் சென்றேன்
பேச்சப்பா லகிரிகொண்டு திரும்பி வந்தேன்
போரான பூரணத்தில் சொக்கினேனே. 3

End :

கொள்ளாத காமியென்றுங் குசவனென்றும்
குடிகெடுத்த வுவர்ச்சார மாக்கி யென்றும்

விள்ளாத கொள்ளியென்றும் வேதனென்றும்
வெட்டவெளி யாயிருந்த விமலனென்றும்
கள்ளாகி அழல் சொரிந்த உப்பி தென்றும்
கட்டாக வழலை செய்தே யெண்ணெய் வார்க்க
ஒள்ளியதொர் கறுப்பனென்றும் ஆயவனென்றும்
உவருப்பின் குலமிதுதான் கல்லுப்பாமே. 20

---

## 55. (*d*) கொங்கணர் தண்டக பட்சணி நூறு.

Lines 5 in a Page.

இதில் எருக்கு கிழ்க்காய் நெல்லி எட்டி முதலிய மூலிகைகளைக் காப்புக்கட்டி எடுத்த வேர்க் குளிசத்தால் செய்யும் வசியம் மாரண முதலிய அஷ்டகர்மங்களும் மந்திரங்கள் ஜாலங்கள் சித்திகள், திலதங்கள், மறைப்புமை முதலியவைகளும் ஞானமார்க்கங்களும் கூறப்பட்டிருக்கின்றன. இந்நூல் அச்சிடப்படவில்லை.

Beginning :

வெளிகடந்த வெளியொளியே சுழியே காப்பு
வேதாந்த விவரத்தின் அறிவே காப்பு
தளிர்கனலுங் காலுமொன்றாய் மூன்று நவ்வில்
தம்பனத்தில் மோகனத்தாய் பதமே காப்பு
அளிகருவி லெட்டாகி நாலுஞ் சேர்ந்த
அதிசயமே பூரணத்தின் அறிவே காப்பு
களிவுறுதிபட்சணியின் கருவைக்கூறக்
கணபதியே முத்தியருள் காப்புத்தாமே. 1

வாங்கியதை யிந்திரன்றன் திசையை நோக்கி
வசிய முதல் மாரணத்தை மாறு மாறு
தாங்கியதை லட்சமுருத் தம்பனமே செய்யத்

தவறும லெட்டெட்டு மாடு மாடும்
ஓங்கியதின் குளிசமது தங்கத்தாலே
உட்பொதிந்து மயிர்முடியிற் கட்டு கட்டு
பூங்கமலமாது திருமாதுவும்மைப்
பொருந்து வாளஷ்டகர்ம மாடுந்தானே. 5

போற்றியே மூலருட குட்சத்தாலே
போகர்க்கு மூலருக்கும் பூசைபண்ணி
போற்றியே யென்றனுட னூலைப்பார்த்துப்
புதுமையுள்ள திலதத்தைப் போட்டாற்கேளு
மாற்றியே ஆறுவகை குட்சத்தாலே
மறைக்குமவர் தலைதா னருங்காணார்
சூத்திரமாய்த் திரிவாய் நீ குட்சங் காணுஞ்
சொல்லாதே திலதத்தையதீதந் தானே. 96

End:

விதியறியான் மதியறியா னூலைப் பாரான்
வித்தறியான் முனையறியான் சுழியைப் பாரான்
நதியறியான் சுனையறியான் நீரில் மூழ்கும்
நானென்ற சொல்மறவா னூலைக் காணான்
விதியறிந்தோன் கருத்தலையி லுபாயமாய் நின்ற
விட்டகுறைக் கட்டளையை யறிந்து கொள்வான்
பதியறிந்து மனம்பதிந்து விதையைக் கண்டு
பலன் பெற்றார் பட்சணியின் பாவுமுற்றே. 108

Colophon:

சிவமயம் தேவிசகாயம் குருபாதந் துணை.
குருகடாட்ச முண்டாக வேணும்.

---

## 56. No. 36. A. பிரமமுனி சூத்திரம் முந்நூற்றறுபது.

ஏடுகள் 169 ; பூர்த்தி Lines 5 in a Page.

இதில், முப்புகுரு, மேகராஜாங்க லேகியம், மேகராஜாங்க எண்ணெய், கற்பநோய்க்கு எண்ணெய், வல்லாதி, சண்டமாருதக்குழம்பு, வில்வாதிக்குழம்பு, மகா மேககிருதம், விஷமுட்டித்தைலம், கொம்மட்டிக்காய் பதங்கம் அரிதாரபற்பம், பவளபற்பம், தந்தரோகமுப்பத்திரண்டுக்கு மருந்து, நிலவாகை, சிவனார் வேம்புச் சூரணங்கள், பதினெண் குட்டங்கட்கும் காள கண்டகுடோரி, கைகால் முடக்குக்கு மருந்து, ஆடாதோடைலேகியம், புன்கம்பூச் சூரணம், காந்தைச் சூரணம், அமுர்தாதிக் குளிகை, வழலைச்சுண்ணம், தேசிவித்தை, ஐங்காயக்கருமுதலியவை சொல்லப்பட்டிருக்கின்றன. அச்சிடப்பட்டிருக்கிறது.

Beginning:

சீரு ளான சோதி சின்மய மான சோதி
ஆரணி கொன்றை சூடி யாறணிந் தானைப் போற்றி
வாரணி ரிஷிகள் பாதம் வணங்கியே வைத்திய நூலைக்
காரண மாகப் பாடக் கணபதி காப்புத்தானே.

தானென்ற முப்பூவின் முறையைக் கேளு
சாத்தினார் கும்பமுனி பூரணத்தில்
வேனென்ற பூநீறும் வெள்ளைக்கல்லும்
விளவிடவுஞ் சுத்திமுறை விளம்பினார்பார்
கானென்ற பங்குனி மாதம் பார்த்தால்
காற்றில்லாக் கதிர்போல வளர்ந்திருக்கும்
பானென்ற மண்படா மெடுத்து வந்து
படி நாலு அளந்தொரு பாண்டத்திட்டே. 21

இட்டுமே கல்லுப்புப் படிதான்ரெண்டு
இதமாகக் கற்சுன்னம் படிதான் ரெண்டு
இட்டுமே அமுரிபடி யெட்டு வார்த்து
இயல்பான நல்லெண்ணெய் படியரைதான் வாரு
அட்டுமே கலக்கியதைத் தெளிவிருத்து
அடுப்பேற்றி யெரித்து நீயுப்புக்காச்சி
மட்டுமே மருபடியிம் அமுரிவிட்டு
மைந்தனே தெளிவிருத்துக் காச்சுமுன்போல்
பட்டுமே யிப்படியே பத்துமுறை காச்சு
பாங்கான சவுக்காரக் குருவிதாமே 13

End:

வாரான கருவை யெல்லாம் வெளியாய்ச் சொன்னேன்
வாதமொடு வைத்தியமும் வகையாச் சொன்னேன்
கூரான செந்தூரங் களங்கஞ் செயநீர்
குருமுடிக்கும் வகையெல்லாங் குறியாய்ச் சொன்னேன்
வாரான அஞ்சனமும் திலதம் சொன்னேன்
வசியமொடு அழைப்பு வித்தை மாரணமுஞ்சொன்னேன்
ஆரானவாசியொடு வாசி யோகம்
அடங்கி நின்ற கருக்கிடை சூத்திரந்தான் முற்றே. 383

முற்றும்

சிவமயம். குருபாதந்துணை. ஸ்ரீராமஜயம், தேவி சகாயம். திருச்சிற்றம்பலம். ஆனந்தவல்லியம்மன் துணை.

---

## 57. No. 36 *B*. (*a*) வைத்திய நூல்.

ஏடுகள் 15; அபூர்த்தி Lines 5 in a Page.

இதில், பூரணசந்திரோதயம், மகாபூரணச்சந்திரோதயம், சூசிகாபரணம், பஞ்சவமுர்தரசம், மகாசூசிகாபரணம், செந்தூரபூஷணம், பார்க்கவிரசம், சாம்பவிரசம், விடசன்னி

பாதரசம், சன்னிபாதவயிரவன், செயவிக்ரமரசம், பஞ்ச பாண்டசெந்தூரம், கச்சவிமாத்திரை, சயித்தியபிரபாதிரசம், காசகுலாந்தகரசம், திருமூர்த்திரசம், முதலிய மருந்துகளும் அவைகளால் தீரும் நோய்களும் சொல்லப்பட்டுள்ளன. ஆரம்பமும் கடைசியும் இல்லாததால் இன்னநூலென்பதும் செய்தவர் இன்னவர் என்பதும் தெரிந்துகொள்ளமுடியவில்லை. ஆதலால் வைத்தியநூலென்று பெயரெழுதப்பட்டது. அச்சிடப்படவில்லை.

Beginning:

கூறு மனுபானங் குப்பியுள வம்மருந்து
கேறு கனகஞ்ச......ப்பழுக்—தேறுஞ்
சமுத்திரா சோகிவிரை தான்வகைக்கு நாலொன்
றமைத்த......கஸ்தூரியாம். 123

மகாபூரணச் சந்திரோதயம்.

அரிசி விடுஞ்சூத மையாறு நிஷ்க்கம்
பிரிகியிடுங் கெந்தியிரு பதிநிஷ்க்கம்—திருவார
தங்கம் பவழும் தனிமாணிக் கப்பற்பம்
பங்குவகைக் கஞ்சநிஷ்க்கம் பார். 124

பருக்கவெள்ளி மூன்று நிஷ்க்கம் பற்பமிவை யெல்லாம்
முருக்கிலையின் சாற்றில் முனைந்தரைத்து—வரிச்சாலி
கூத்த குதம்பை குறிநெருப்பி லோர்சாமம்
சாத்தி லரைக்க தனித்து.

End:

நின்றால் குருக்கச்சல் தீருமே தப்பாது
நன்றும் பலமாறல் நாடாது——வொன்றுகில்
தானசுர மென்று சாற்றினர் பேருலகில்
வானமந்திரி சொன்ன வகை.

## 58. (*b*) சட்ரச நிகண்டு

Lines 5 in a Page.

இதில் அறு சுவையில் இன்னின்ன பதார்த்தம் இன்னின்ன சுவையில் அடங்கு மென்பதும் அவற்றின் குணம் இன்னதென்பதும் கூறப்பட்டுள்ளது. இயற்றியவர் பெயர் தெரியவில்லை. வடமொழி ஷட்ரச நிகண்டின் மொழி பெயர்ப்பென ஊகிக்கின்றனர். பிழையதிகமாயிருகின்றன. அச்சிடவில்லை.

Beginning

பூவார் சிரகிரியிற் பொன்னி வாவலைழுத்த
மாவா ரணமுகனை வாழ்த்தியே—நாவார
வாறுசுவை தேர்நிகண்டி ஞரியத்தைச் செந்தமிழாற்
றேறுசுவை செய்தேன் றெரிந்து.

கூறி னிலுப்பைமலர் கூத்தன் குதம்பையெள்ளு
தாறின் கதலிமு...சர்க்கரையும்—சீறிநெலிக்
கன்னிகொடி வெள்ளரிக்காய் காஞ்சொரிவேர் மாகானி
பன்னியிடில் வாருணியம் பார்.

பார்பறங்கி முந்திரிகை பாலை பொன் சிவந்தி
சீர்பருத்தி கோதும்பை தேன்மெழுகு—ஏர்வெள்ளி
பூதலத்தில் மட்டிரண்டும் பூச்சர்க் கரைக்கிழங்குங்
காதலிக்கு மாமதுரங் காண். 4

End:

சிராசத்துச் சாரவல்லி தேட்கொடுக்கோ டுண்ட
திராய்பூ திசையுமொன்ற வேதொண்டாங்
கிரிவா லுகமே ளைரா மணக்கின்
பரிவாலகங்கசப்பாம் பார். 75

சிம்முகியும்வாசை செழியவா டாதொடையாம்
சம்முகியின் கைப்பிரதஞ் சார்குருமை—செம்மைக்

கவகாசந் தாககாங் காரின் மேன் மூச்சு
மவகாச மின்றியது மே 76

குறிப்பு:

கடைசியில் ஒரு சிறு ஏட்டில் 'போகர் ஏழாயிரத்தில் நான்காங் காண்டம் அபூர்த்தி பாட்டு 311-க்கு ஏடு 92 என்று எழுதப்பட்டுள்ளது.

---

## 59. No. 37 யூகிமுனிவர் வைத்திய சிந்தாமணி.

ஏடுகள் 158; அபூர்த்தி Lines 5 in a Page.

இதில், உடலுற்பத்தி, உடற்கூறுதத்துவம், நாடிவிபரம், சுரம், குன்மம், சூலைமுதலிய நோய்களின் நிதானமும் அவற்றின் பேதங்களும் வாத ரோகம் 84க்கு விவரமும் அவற்றின் குறைகுணங்களும் பித்தரோகம் 42க்கு விவரமும் அவற்றின் குறைகுணங்களும் சிலேட்டும நோய் 96க்கு விவரமும் அவற்றின் குறைகுணங்களும் மேகம் 21 நீரழிவு 20 குட்டம் 18 அவற்றின் குறைகுணங்களும் மற்றைய நோய்கள் அவைகளுக்கேற்ற மருந்துகளும் சொல்லப்பட்டுள்ளன. முதலேட்டின் தலைப்பில் கண்டபடி இது தன்வந்திரியார் வாகடம் வயித்திய சிந்தாமணி அன்று. ஏட்டு இலக்கம் 96 முதல் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. இதில் 500 செய்யுட்களிருக்கின்றன. அச்சிடப்பட்டிருப்பினும் கிடைப்பதரிது.

**Beginning:**

ஆனைமுகன் தன்பாதம் முருகன்பாதம்
அத்தியுரித் திடைதரித்த அய்யர்பாதம்
வானையுமையாள் பாதம் மாலின்பாதம்
வயிரவன்றன் பாத மாலட்சுமிபாதம்
கானையை நாதாக்கள் ரிஷிகள் பாதம்
கமலத்தில் வீற்றிருந்த வாணிபாதம்

கோனனைய குருமுனிதன் பாதம் போற்றி
கூறுவேன் ஆயுருவேதத்தைத்தானே.

* * * * * *

வானான வாகமத்தை மேதினிக்குள்
மருவியே யுரைத்திடவே வண்மையாக
வேனான வைத்திய சிந்தாமணியின்
விவரமெல்லாம் வெளியாக விளம்பிச் சொல்வாம். 2

சொல்லியதோர் விவரமாந் தூய்மைகேளு
சூட்சமாம் பஞ்சபூதத்தின் கூறுந்
தெல்லியதோர் தசநாடி சத்ததாது
திரிநாடி தசவாய்வு சுரபேதங்கள்
கல்லியதோர் சன்னியொடு குன்மம் சூலை
கசகான வாதமொடு பித்தம் சேத்துமம்
மெல்லியதோர் மேகம் நீரிளிவு குட்டம்
மிக்கான பாண்டு காமாலையுங்கேளே. 5

கேளுமகோதரங் கிராணி பவுத்திர மூலம்
கெடியான அசீரணங்கள் விருசுவிக்கல்
வேளுமே பலபல வியாதி நாமம்
விளங்குகின்ற சாத்தியமும் அசாத்தியந்தான்
பாளுமே பண்டிதரின் குணமும் ரோகி
பக்குவமும் ரசவர்க்க மூலிவர்க்கம்
காளுமே கடைசரக்கின் குணமுந்தானும்
கஷாயமொடு சூரணங்கள் கற்கந்தானே. 6

End:

சர்மந்தான் மிகவெடிக்கும் போரில்தானும்
சடமெல்லாம் வேதனை பச்சென்றிருக்கும்
தெர்மந்தான் திரிதோஷ குணமுண்டாகும்
தேகமெங்கும் பாரிக்கும் திமிருண்டாகும்

கர்மந்தான் காக்கணும் பூநிறமதாகும்
கண்டிப்பு வீக்கமாய்த் தானிருக்கும்
வர்மந்தான் மனசிலே ச..............................
............................................ 502

குறிப்பு:

பதினைந்து வெற்றேடுகள் முன்னே கோக்கப்பட்டுள்ளன.

---

## 60. NO. 38 (a) திருமூலவர் வைத்தியம் நூறு.

ஏடுகள் 27; பூர்த்தி Lines 5 in a Page.

இது, கர்ப்ப உற்பத்தி, ரோகவுற்பத்தி, வாத பித்த சிலேட்டும நாடிகள் நடக்குமுறை ஐம்பொறியில் பஞ்சபூதம் அறியும் விதம் முதலியவற்றைக் கூறுவது. அச்சிடப்பட்டிருக்கிறது.

Beginning

அந்தி நிறத்தனை ஆனைமுகத்தனை
யிந்து விளம்பிறை போல வெயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினை
புந்தியில் வைத்தடி போற்று கின்றேனே. 1

குறியாய் வலக்கை குறித்த பெருவிரல்
மறியாத்தன் கீழே வைத்திடு மூவிரல்
பிறிவாய் மேலேகிப் பிலத்தது வாதங்கா
ணறிவாய் நடுவேயடைந்தது பித்தமே. 11

பித்தத்தின் கீழே பிரண்டது மையமாம்
உத்துத்துப் பார்க்க வொருநரம் பேயோடும்
பத்தித்த மூவரும் பாயுமோர் வேகந்தான்
மத்தித்த நாளம்போல் வழங்கு நரம்பே. 12

வளப்பங்கேள் பூமிதான் வாசிக்கு நாசியில்
தளப்பமாம் வன்னி தானுறுங் கண்ணிலே
யளப்பமா மப்பு வடங்கிடும் நாவிலே
பளப்பதவாயு பரிசிக்கு மெங்குமே. 20

End :

தின்றிட நோய்கள் திசை கெட்டே யோடிடும்
பன்றிட வாயுக்கள் பக்கத்திற் சேராது
தன்றிய லோகர்க்குத் தான்செய் முறையினில்
மன்றிய சித்தாய் வரும்வியாதி போகுமே. 113

Colophon :

சிவமயம் குருசுவாமி திருவடிகளே சதா சரணம்.

---

## 61. (b) திருமூலர் தண்டக்கம் நூற்றிரண்டு

Lines 5 in a Page.

இதில், வசியம், மோகனம், தம்பனம் முதலிய அஷ்ட கர்மங்களும், நீலகண்ட மாலாமந்திரமும் யோகஞானமார்க்கங்களும் கூறப்பட்டுள்ளன. அச்சிலில்லை.

Beginning

பூகமழ் கயிலை மேவும் பூரணமான தொன்றை
ஆகம வேத ஞானச் சுருதியு மான தொன்றை
நாகவா பரணம்பூண்ட நந்தி தண்டக்க மோத
தேகமா மகத்தி நந்தி விநாயகன் காப்ப தாமே

சீருலவு பூரணஞ்சின் மயமான சோதி
சிதம்பரத்தில் சூட்சாதி சூடசந் தன்னை
வாருலவு பூண்முலையாள் தனக்குச் சொன்னார்
மகத்தான விஞ்சை நந்திக் குபதேசித்தான்

காருலவு முகத்தானே கடியினின்று
காணமாய்ச் சென்றுவெலாம் நிலைரந்து நின்று
தாருலவு புயத்த னக்க னந்தீயீசன்
சற்குருவா யெந்தனுக்குச் சாத்திரனே. 2

வாரான அஷ்ட கர்மம் வழுத்து றேன் கேள்
போராங் கருக்கள் பெலத்திடு மூலியுந்
தாரான தண்டகம் தாண்டிய விஞ்சையும்
போரான நந்தி புகள்புரிந் தானே. 21

End;

ஆமப்பா விந்நூல் தன்னில் சூட்சாதி சூடசங் கண்டு......
ஓமப்பா பொறிவாய்மூலம் கண்டு ஒருமாவில் மாத்திரை போனனிப்பாரு
தாமப்பா அவனொருவன் கோடிசித்துமாட..................
நாமப்பா நந்திகுரு வானமூலம் நான்கண்ட தண்டக்க நல மாமுற்றே 100

முற்றும்

குறிப்பு :

இதில், திருமூலர் திருமந்திரம், சித்தர் வெண்பா, அகத்தியர் சூத்திரம் 36, திருமூலர் வகாரவுப தேசம், திருமூலர் எண்ணாயிரத்தில் 38 செய்யுள், திருமூலர் எண்ணாயிரத்தில் வாதம் 200, ரோமரிஷி சூத்திரம் அண்டவித்தை 50, மச்சமுனி சூத்திரம் 70. கோரக்கர் சூத்திரம், மச்சமுனி சூத்திரம், சுந்தரானந்தர் சூத்திரம், அகத்தியர் பூஜாவிதி, அகஸ்தியர் தண்டக சூத்திரம் இவைகளின் விஷய அட்டவணை எழுதிய பதினேழு ஏடுகள் முன்னே கோக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் திருமந்திரம் தவிர ஏனைய நூல்கள் இல்லை.

## 62. NO. 39 திருமூலர் திருமந்திரம். ✻.

ஏடுகள் 172; Lines 5 in a Page.

இதில் அபிரேகசத்து சூதமணி பஞ்ச நிமினை விவரம், அயச்செம்பு, படிகச்செம்பு மூலிகைச் செம்பு, மூலிகை யீயம், சவுக்காரகுரு, திராவகம் செயநீர், கட்டுவகை சலசரி மெழுகு முதலியவை சொல்லப்பட்டுள்ளன. இதில் 1004 செய்யுட்கள் இருக்கின்றன. இது அச்சிடப்படவில்லை.

Beginning:

மாய்கை யறுக்கும் வயிறதைச் சுற்றிடும்
வேகமாய் ஞான வீடுதான் காட்டிடும்
யோகம் பலிக்கும் உறுதியாங் காயந்தான்
போகம் பலிக்கும் புகட்சியிது பாரே. 1

பாரேநல் லபிரேகம் பாங்கான கொள்ளோடே
நேரே சலம் விட்டு நிமிர வெரித்திடு
தாரே யெரித்ததை தானிய வப்பிரகம் செய்து
சீரே சிலையிட்டுச் செந்தங்கு மூதிடே. 2

கமன மொன்றல்ல கன்னிக்குத் தம்பனம்
கமன மொன்றல்ல கன்றன வசியமாம்
கமன மொன்றல்ல கழியாது காயங்கேள்
கமன மொன்றல்ல கல்லும் பொன்னாகுமே. 15

எரித்திடு நாளத்திசையவே கிண்ணிவை
பருத்திடு தூமமும் பருத்தே செலம்விழும்
விரித்திடு லோகத் திராவக மாயிது
வொரிடத்திட வொன்பது லோகங் கரையுமே. 538

End

கடுக்கா யுடனே கடுநெல்லி தான்றிக்காய்
மடுக்கா வெழுமூன்று வகைக் கோர் படிபோட்டு

வடுக்க வுதகத் தில்வாரு முப்பது
விடுக்க வனத்தால் விளங்கி யெரித்திடே 1004

குறிப்பு:

இதில் 'பலவகைப்பட்ட நோய்களுக்கு மருந்துகளின் பெயர் எழுதிய ஏடுகள் மட்டும் கோக்கப்பட்டிருக்கின்றன. மருந்துகளின் விவர அட்டவணை இல்லை.

---

## 63. No. 40 (*a*) திருமூலர் வகார உபதேசம் இருநூறு

ஏடுகள் 34; அபூர்த்தி Lines 5 in a Page.

இதில் சவுக்காரப் போக்கு, செயநீர், வீரமணி, வீர செந்தூரம் முதலிய ரசவாதத்திற்குரிய மருந்துகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இதில் 44 செய்யுட்கள் இருக்கின்றன. அச்சிலில்லை.

Beginning :

திருமூல மாவது செய்ய சவுக்காரம்
திருமூல மாவது செய்ய நற்றுருசுதான்
றிருமூல மாகுஞ் செயவண்ட பிண்டந்தான்
றிருமூல மூன்றினுட் செய்தவன் மூலனே.

மூலத்தைச் சுண்ணநீர் மூட்டிக்கரைத திறுத்
தாலத்திற் காய்ச்சி யரியிடச் சுண்ணமாங்
காலநீரு சுன்னங் கடிய சவுக்கார
மூலம் வழலை முடி...டு நாமமே. 2

End

தானே விசைக்கு விசைக்குகை சோதித்து
மானே யுருக்க மகத்தாம் ரவியாகும்

தேஞர் பணவிடை சேத்து நற்றங்கமும்
கோஞ ரருணம் போல் கொள்கி ரவியாமே.

---

## 64. (b) திருமூலர் எண்ணுயிரத்தில் முதல் துருசு.

Lines 5 in a Page.

இது இரசவாதத்திற்குத் துருசு சுன்னம் முதலியவை கூறுவது. இதில் 38 செய்யுட்கள் இருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

**Beginning:**

சந்திர னுப்புச் சதாசிவன் பெண்டிரும்
அந்த முராரி யகத்து மனைவியுங்
கெந்தகத் தோடே கீறி வெதுப்பிடில்
சுந்தரா ஞனே சிவ குரு வாமே. 1

குருவி னுடைய குணபாடு கேட்கி
லருவித மூன்று மறை த்தொன் பதுமேற்
பருகிடப் பூசிப் பயந்தணல் காட்டப்
பிரிவா மங்கீறும் வெண்ணீற தாமே. 2

**End:**

சேத்தே யறைத்துத் தெளிவான வெண்கரு
காத்தே யறைத்துக் கருமத்தஞ் சார்வார்த்து
போத்தே நற்காரமுஞ் சாரமுங் கண்டரும்
கோத்தே குளரிக் குமட்டி யுருக்கிடே. 38

---

## 65. (c) திருமூலர் எண்ணாயிரத்தில் இருநூறு வகாரத்திரையம்

Lines 5 in a Page.

இதில், துருசுச்செம்பு, விங்கக்கட்டு, விங்கக்களங்கம், கோசபீசம், அறுவகைநீர், துருசுகுரு, வழலைகுரு, வங்கக்களங்கம், அயசெந்தூரம் முதலிய இரசவாத மருந்துகளும் வல்லாரை கற்பமும் கூறப்பட்டுள்ளன. அச்சிடப்படவில்லை.

Beginning:

எண்ணாயிரத்தி யிருநூறு மந்திரம்
அண்ணலி சொல்ல அடியே னறிந்தேன்
செண்ணான் சிமப்பு சேர் பச்சை நீலம்
வண்ணனை றிவான் வகாரத் திரையமே. 1

முறையான சூத்திர மேல் வாசலப்பா
மறைவா யிருக்கு மதியமிர் தந்தான்
அறைவாசல் பார்த்தே தெரிந்துள்ளங் கொண்டா
லிறைவர் திருப்பா ரிறையவ னாமே. 2

மூன்றே பொருளாய் முடிந்தது அண்ட
மூன்றே பொருளாய் முடிந்தது பிண்டம்
மூன்றே பொருளாய் முடிந்தது சீவன்
மூன்றே பொருளாய் முடிந்தது வாதமே 116

End:

குருவான தந்தை யென்னந்தியப்பா
திருமூலன் றானே செய்தொழிற் சொன்னேன்
கருவூரான் கோங்கணன் போக னிவர்கள்
தருபொ னெனச்செந் தமிழுடி யென்னே. 201

முற்றும்

Colophon:

குருவே நமா ஸ்ரீராம செயம்

---

## 66. NO. 41 தன்வந்திரி வாகடம் ஆயிரத்து நூற்றுப் பத்து.

ஏடுகள் 246; Lines 5—6 in a Page.

இது, நாடி நிதானம் வாத பித்த சிலேட்டும சரீர குணம், உடற்கூறு விவரம், சுரம், சன்னி, மூலம், நீரிழிவு, இருமல், பாண்டு, பிளவை, கண்டமாலை, குன்மம், சுவாசகாசம், அண்டவாதம், மகோதரம், பெரும்பாடு முதலிய நோய்களின் குறுகுணங்களையும் அவற்றிற்கு மருந்துகளையும் பலவகைப்பட்ட பதார்த்த குணமும், கற்பங்கள், கஷாயங்கள், வடகங்கள் குளிகைகள், தைலங்கள் சூரணங்கள், லேகியங்களையும், அட்டை லட்சணம், அட்டைப்பிரயோகங்களையும் விரிவாகச் சொல்லும் அருமையான நூல். வைத்தியங்களுள் தன்வந்திரி வைத்தியம் சிறந்த தென்பர். இதில் வெண்பாவும் விருத்தமும் விரவி வந்துள்ளன. இது அச்சிடப் பட்டிருப்பதாகத் தெரியவில்லை. இடையிடையே சிதலமாயிருக்கிறது.

Beginning:

திருவாக்குஞ் செய்கருமங் கைகூடுஞ் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்—உருவாக்கும்
ஆதலால் வானேரு மானை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தம் காப்பு

பாதி மாதுமை யொரு பாகனு ரருளிய
தீதிலா வாகடநூலிற் செந்தமிழ்
நீதியா யெனக்கிது நிறைய வோதுவாய்
ஆதியே பரமனே அாகரா சிவா

முப்பத் திருமுழம் முன்னஞ் சிறுகுடல்
அப்புப் பையும் அரிய அறுமுழம்
வெப்புத் தாமரை மொட்டுச் சிறக்கும்
மெய்ப் பொத்த பித்துப்பை நீருழக் காமே. 13

பொற்றலை பொடுதலை பொருந்து காக்கணன்
வற்றிய நீலிவல் லாரை முப்பழம்
சிற்றிடை மடநல்லாய் தேனிற் கொண்டிடில்
பற்றிய நரைதிரை பறந்து போகுமே. 208

தானே வேர்க்கொம் பிருவேலி தங்கு மிலாமிச்சஞ் சந்தனமும்
சேனே முத்தம் காஞ்சோரி செய்ய பங்கம் பாளையுடன்
கானே கோட்ட மோர் கழஞ்சிகடுகக்கொண்டு காய்ச்சியதை
மானே யருந்த பித்த சுரம் மற்று முழுதலைக் கழிச்சல் விடும். 621

வில்வவேர் சித்தமுட்டி வீறுபா சிப்பயறு
நல்சுக்கு கொத்தமல்லி நற்பொரியும்—சொல்லரத்தை
யித்தனையுங் கூட்டி யிடித்ததனைக் காய்ச்சியுண்ணச்
சத்திவிக்கல் போமே தவிழ்ந்து. 1100

End:

இதுபின் சிலைமண் செய்மேலுணர வேவைத்து மிமரி கிரமத்தில் மேலபத்தா லெரித்தே
எரித்ததுப திணைஞ்சு நாழியதானபின் இதமாக ஆற விட்டு
எடுத்ததை யிஞ்சிச் சாறுவிட்டு குழிக்கல்லிலேழு நாழிகையரைத்தே
மரித்துக் கட்டைப் ரமாணமதால் பரித்து குளிகையது செப்பாரினி னிழலுணர்த்தாவுணர்த்தியே

பகரவே யிஞ்சியதுசாறு விரித்தவொருகுளிகையிட விஷ
சுரம் சன்னி வாதம் வீறுகுளிர் மாறல் சுரமும்
விதமான திரிதோஷம் பழய சுரமாம் விரித்தொருகுளிகை
யிட பிசகாமல் விட்டோடுமே 1110

Colophon:

சகாப்தம் 1722ஹு ரவுத்திரிஹு கார்த்திகைமீ 2உ சனிக்கிழமை சதுர்த்தேசியும் சுவாதி நட்சத்திரமும் கூடின சுபதினத்தில் ராசமானிய ராசஸ்ரீ சரபோஜி மகாராசா சாயேபு அவர்கள் ஆக்ஞாபிச்சபடிக்கு வேங்கடேசம் பிள்ளை குமாரன் சுப்பராயன் தன்மந்திரி வாகடம் எழுதி நிறைந்தது முஷ்தும்.

சற்குருபாதந்துணை

---

## 67. No. 42 போக நாயனார் அருளிய கற்பவிதி முந்நூறு.

ஏடுகள் 131; பூர்த்தி Lines 5 in a Page.

இதில், நரை திரை மாறிக் காயம் நோயின்றி அழிவில்லாதிருப்பதற்கேற்ற கற்பங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இது அச்சிடப்படவில்லை.

Beginning:

தானான கற்பவிதி சொல்லக் கேளு
சனகாதி நால்வருட பதத்தைப் போற்றிப்
பானான பாட்டர் திருமூல நாயர்
பாத மென்றன் சிரசில் வைத்துப் பரிந்து போற்றிக்
கானான காலாங்கி அய்யர் பாதம் போற்றிக்
கற்பத்தின் வகைகளெல்லாங் கருதித்தின்று
தேனான சித்தி பெற்ற படியே சொன்னேன்
சிதை வில்லாக் கற்பமுண்டு யோகம் பாரே. 1

யோகமாம் புளிஉப்பு எண்ணெய் சுண்ணம்
உரிசையாம் மாங்கிஷங்கள் மச்ச மாகா
மோகமாய் மோரோடு கடுகு உள்ளி
முதிரான காரமொடு பெருங்காயந்தான்
போகமாம் பெண்தன்னின் புணர்ச்சி யோடு
போரான நித்திரையுஞ் சோம்பல் தள்ளி
வாரமாம் வாசிதன்னை மறித்துக் கொண்டு
மறவாமல் இரவுபகல் மனசு உண்ணே. 2

ஏமமாங் கரு நெல்லி மலை தோறு முண்டு
எளிசாகக் கிடையாட்டால் கறுப்புப் பண்ணி
நாமமாம் நாற்பதுநாள் பாலில் கொள்ளு
நமன் வந்து நாடாமல் நடுங்கிப் போவான்
தாமமாஞ் சட்டை யெல்லாங் கக்கிப் போடுந்
தங்கம் போல் மேனியெல்லாந் தளுக்குக் காணும்
ஆடவே கருநெல்லிப் போக்குச் சொல்ல
ஆரன்காணூர் யான்தானுங் கண்டிலேனே. 128

End:

தானான கற்பமது முந்நூற்றுச் சோச்சந்
தாய் சொன்னபடியுண்டு சாதிச்சேனன்
கோனான காலாங்கி நாயர் சொன்ன
குறிப்பெல்லாஞ் சோதிச்சுக் கொண்ட மார்க்கந்
தேனான சிவயோகி முனிவர் தாமும்
சிறுபாட்டர் சென்னபடி சித்தியானேன்
பானான பராபரமாந் திருமூல நாயர்
பாட்டர் சொன்னபடி நின்று பாஷித்தேனே. 340

காயசித்தி மார்க்க முற்றும்

Colophon:

சகாப்தம் 1723ஸு துர்மதிஸு சித்திரையீ 8உ சுக்கிலபட்சமும் பஞ்சமிதிதியும் சனிவாரமும் திருவாதிரை

நட்சத்திரமும் கூடின சுபதினத்தில் ராசமானிய ராசஸ்ரீ சரபோசி மகாராசா சாயபு அவர்கள் ஆக்ஞாபிச்ச பிரகாரம் கலாசிக் கணக்கு வேங்கடேசம்பிள்ளை குமாரன் சுப்பராயன் போகநாயனாருளிச் செய்த யோகமார்க்க முந்நூறு எழுதிமுகிந்தது முற்றும் குருவே துணை.

குறிப்பு:

இதில் இன்னின்ன கற்பமூலிகைகளை இன்னின்ன விதமாக உண்ண வேண்டுமென்பதும் உண்ணும் போது கைக் கொள்ள வேண்டிய பத்திய மின்ன தென்பதும் கூறியிருப்பதோடு இரசவாதத்திற்கும் கற்பத்திற்கும் உரிய செந்தூரங்களும் பிறவும் கூறப்பட்டுள்ளன. இந்நூலிலுள்ளவற்றை விளக்கும் விஷய அட்டவணையும் முன்னே உள்ளது. இதுவன்றி அகத்தியர் சூத்திரத்திற்கு விஷய அட்டவணையும் இருக்கிறது.

---

## 68. No. 43 வைத்தியத்திரட்டு.

ஏடுகள். 304 Lines 5 in a Page

இதில் நாடிகளின் நிதானம் கெற்ப உற்பத்தி சுரம், சன்னி, குன்மம், காமாலை, மகோதரம், குட்டம், மூலம், முதலிய நோய்களின் வரலாறும் பிறவும் கூறும் செய்யுட் பாகங்களை அகத்தியர் குணவாகடம், திருமூலர் கெற்ப உற்பத்தி, அகத்தியர் குருநாடி, ரெத்தினச்சுருக்கம் ஆயிரத்தைஞ்னூறு, தன்வந்திரி சிந்தாமணி நாடி, திருமூலர் நாடி, வால்மீகர் நாடி முதலிய நூல்களினின்றும் திரட்டி எழுதப்பட்டிருக்கின்றன. இது ஒரு தனி நூலன்று. இதின் கடைசியில் அட்டைவிதியும் சத்திரவிதியும் கூறப்பட்டுள்ளன.

Beginning :

வாக்குண்டா நல்ல மனதுண்டா மாமலராள்
நோக்குண்டா மேனி நுடங்காது—பூக்கொண்ட
துப்பார் திருமேனிதும்பிக்கை யான்பாதம்
தப்பாமற் சார்வார் தமக்கு. 1

பாதிமா துமையொரு பாகனு ரருளிய
தீதிலா வாகட நூலின் செந்தமிழ்
நீதியா யெனக்கிது நிறைய வோதுவா
யாதியே பரமனே அரகரா முதல்வனே. 2

ஆகந் திரும்பு மரியவிழி தான்சுழலுந்
தேகம்வேர்த் தேநடுக்குஞ் செய்மூர்ச்சை—தாகமுறு
மெத்தமல நீர்கழியு மேவு மசீரண
பித்தமெனத் தேர்ந்தறியப் பேசு. 441

நிற்கின்ற மூக்குத் தானு நீர்ப்பாய்ந்து தலைகனத்து
ஒக்கின்ற வாய்நீர் தானு முண்ணாக்கைப் பற்றி நொந்து
புக்கின்ற செவியினாலே புறப்பட்டு வலிக்கும் வேதம்
பிற்கின்றவிழியாயிது பித்தத்தின்றலை நோக்காடே. 828

End:

பிரமாவென்னும் வீறு சத்திர
மதுவே யங்குல மஞ்ச தாகும்
நிறையே கால்பல முனையே யொருமா
தருமே வாய்க்கூர் கதுமையாக
* * * *
* * * *
* * * *
பசியறு மென்ன பாலான மொழி தானே. 1251

Colophon:

தாருணஹூ தைமீ 30உ வேலாயுத வாத்தியார் எழுதினது. சேகநாத வயித்தியர் குமாரன் அப்பாச்சாமி

மேல் பாடம் குணவாகடங் குருநாடி திருமூலர் அகத்திய ராயிரத்தைந் நூறு வால்மீகர் நாடி இதிலுள்ள கெற்பமுதல் நாடிகளும் வாதபித்த சிலேட்டும வியாதி நிதானங்களையும் கலம்பக மாக்கியிரண்டு கைகளையுமுன்னே போட்டுக்கொண் டெழுதப்பட்டது. தொகை கவி 1251 தாழிதளம். 303.

---

## 69. NO.44. பால வாகடம் முந்நூறு.

ஏடுகள் 115 ; அபூர்த்தி Lines 4 in a Page.

இதில் குழந்தைகளின் வைத்தியத்தைக் கூறியிருக் கிறது. இந் நூல் பொதுக்காண்டம், மகவில்லாக் காண்டம் கெற்பவுற்பத்திக் காண்டம், வியாதிஉற்பத்திக் காண்டம், வியாதி காண்டம் அலகைக் காண்டம் என்னும் ஆறு காண் டங்களை உடையது. ஆதியில் உமாதேவிக்குச் சிவபெரு மான் அருளியது வினாவும் விடையுமாக இருக்கின்றது. இதனை இயற்றியவர் பெயர் தெரியவில்லை. சிறந்த நூலாகக் காணப்படுகின்றது. அச்சிடப்படவில்லை.

Beginning :

வைய கத்தினில் வாலையின் வாகட
நொய்ய செந்தமிழாற் சொல நாடோறுஞ்
செய்து காத்தழிக்குந் திரு நாயகன்
துய்ய தாமரைச் சேவடி சூட்டுவாம்.

கூறு வையகந் தன்னில் குழந்தைக
ளேறுந் தன்கரு வின்றி யொளித்ததும்
ஏறு போலச் செனிப்பது மீறிலா
வேறு வேறு வியாதி விளைவதேன். 2

விளைந்த பேய்கள்புள் தோஷங்கள் மெய்யிலே
யிளைந்தை யர்க்கு வருவது மெப்படி

வளர்ந்த பித்தங் கபத்துடன் வாதமும்
உளந் தெளியப் பிரித்துரை யுற்றதே. 3

பிடிக்குள்ளே மிகவடங்கிடாமலிள நீரெனப் பெரிய கொங்கையாய்
தடித்த மென்குதலையின் குழந்தை தலைமேலு மாமுடல் கடன்னிலும்
வெடித்திடாமலது கட்டியாகி வளர் மேலு மேலும் வாவிங்கினால்
அடுத்த மேனியிற் செவ்வாப்புக் கட்டி யென வேயுரீங் தவுடதஞ்செய்யே

End:

சொல்லவே யெம்பெருமான் கோவில் சேர்ந்து
சூட்சமாய் வடக்கில் வைக்கத் தீருக் தீரும்
சல்லியமாய் வயிறுவலி யிருக்த தானல்
தப்பாம லரசடியின் மண்ணுங் கொண்டு
துல்லியமாஞ் செங்கழனீரலையு மோருஞ்
சுகமாக வருந்தினல் துலைந்து போகும்
மெல்லியலே யேழுதிங்கள் குணத்தை நன்றாய்
விளம்பு ரேனுலகறிய விளம்புறேனே.

---

## 70. No. 45 சரபேந்திரர் நயன ரோக வைத்தியம்

ஏடுகள் 204; Lines 3—6 in a Page.

இதில் கண்ணிலுண்டாகும் வியாதிகளுக்கு பலவகைத் தயிலம் மாத்திரை, குழம்பு, பத்து, மை, நெய், புகை, உண்டை முதலிய மருந்துகள் சொல்லப்பட்டிருக்கின்றன. 379 செய்யுட்களிருக்கின்றன. இதனை இயற்றியவர் வேலாயுத உபாத்தியாயர் என்றெழுதப்பட்டுள்ளது. இவர்

சரபோஜி மகாராஜா காலத்திலிருந்த அரமனை தன்வந்திரி மால் வைத்தியருள் ஒருவர். அரசாது வேண்டுகோட் கிணங் கித்தம் அனுபவத்தில் கண்டவற்றைத் திரட்டிச்செய்யுளா கப் பாடியவர். அச்சிடவில்லை

Beginning:

தாகந்திர நெல்லிக்காய்ச் சாறுபடி ரெண்டு
தனிப்பசுவின்பாலுபடி நாலுந்தாக்கிப்
பாகமுட னல்லெண்ணெய் படியும் விட்டுப்
பல மொன்றே யதிமதுரம் பாங்காய்ச் சேர்த்து
வாகமிது தனைப்பதத்தில் வடித்து வாங்கி
மாமுகனைத் தியானித்து வாரமூழ்கில்
வேகமறும் விழிரோகம் பல்லைசவுதீரும்
விளம்பினே மாமலகத் தயிலமீதே.

இளநீர்தன்னில் மதுரந் திரிபலை யிடுமாமஞ் சளுசமமாயமை
களகளென்னக் கொதித்து வடித்துத்தேன் கலந்து மிந்துப்
புங் கற்பூரத்தூளிட்டுக்
கிளரிடுமிளநீர்க் குழம்பாமிதை கெட்டியோர் சிமிழுக்குள
டைத்திடு
தளரு நேத்திர ரோகங்கள் யாவையுந் தானோடு துகைகண்
டதாகுமே. 91

எள்ளுடன் பயறும் வேப்பிலை கடுகுங் கூட்டியே
தெள்ளுமென் பொடிகள் செய்து தீயினிற் புகைத்திட
மெள்ளவே கண்ணோய் சிவப்பும் விட்டிடுஞ் சாத்திரே
யுள்ளதோடு மென்றிம்முறை யோதினர் செய்வாயிதே. 139

End:

மண்ணெடுத்துப் பொடி செய்து முக்கடுகின் பொடி கூட்டி
பாயிடச்சாதி
வெண்ணெயிட்டுக் கலபுறத்தப்பியதை மற்றுமொரு மெல்
கலத்தால்

நண்ணுறு புறத்தாலு மிழைத்துடனெடுத்துச் சிமிளிலடை
நல்லமையைக்
கண்ணிவிடப்புழு வெட்டு மிழிகண்ணுந்திருமிதைக் கருதிச்
செய்யே. 379

---

## 71. No. 46. சரபேந்திரர்
## குன்மரோக வைத்தியமுறை

ஏடுகள் 183; Lines 4 in a Page.

இதில் எட்டுவகைப்பட்ட குன்மரோகங்களுக்கும், பலவகையான லேகியங்கள், வடகங்கள், மாத்திரைகள், தைலங்கள், சூரணம், எண்ணெகள், கிருதங்கள், ரசாயனம், தாம்பிர பற்பம், நாகசெந்தூரம், வெள்ளிபஸ்பம், முதலியவைகள் சொல்லப்பட்டுள்ளன. இதனை இயற்றியவர் வேலாயுத உபாத்தியாயர். செய்யுட்களில் சரபோஜிமகாராஜாவின் பெயர் வரப்பாடப்பட்டிருக்கிறது. இது அருமையானமுறைகளையுடையது. அச்சிடப்படவில்லை. இடையிடையே பூச்சி அரித்திருக்கிறது.

Beginning:

திருமலருஞ் செங்கழுநீர் மலருஞ் செந்நெற்
செங்கரும்புந் தென்னையும் பூகமுஞ் செழித்த
மருமலருங் காவுநிறை வயலுஞ் சூழ்ந்த
வளம்பதியாம் தஞ்சை நகர் மனுவைக் காக்குந்
தருமலரு நகைமுகவான் புருடமேரு
சரபோசி மகாராசன் சகல நூலுங்
கருமலரு ரோயாய்ந்துங் குன்மமாதிக்
கவுடதங்கட் டுரைக்கும் வெள்ளைக் கணேசன் காப்பே

கொடிவச்சிரம்புளி நாளை மருளின் மூலம்
குடிக்கருணை வனக்கருணைக் கிழங்கு தாலும்

படிப்புவரு நாயுருவி வேர்வகை யொன்றுக்குப்
பலம்பத்து மரிதகியும் பயித்துப் பத்தாய்
குடிப்பிடுநீர் நாலுமாக் காலு மிட்டுக்
கொளுத்தடுப்பிற் காச்செட்டொன் றாகத்தானும்
முடித்திறக்கி யரிதகியை யொடுத்துலர்த்தி
முன்னீரில் வெல்ல முப்பான் பலமு மிட்டேன் (1)

செய்துபின் பசுந்தேன் சேரிரண் டரையுஞ்
சேர்த்துடனே கொண்டிடக் கேளும்
எய்தரோ கங்க ளிரத்தகுன் மங்க
ளொடுத்திடுஞ் சத்திகுன் மங்கள்
வெய்துபித் தங்கள் மருத்துரோ கங்கள்
மேலெழு நோயெலாந் தீர
நெய்நிணம் பருகி வாகைபூண் டொளிரு
நிருபவேற் சரபவேந் துரையே. 177

End:

நொச்சியிலைதனை யொருபானைனிறை வேடுகட்டிநெடு தேங்காய்ப்பூ
பச்சை வெள்ளை புள்ளி யதிற் பருப்பிரண்டு மேல்வைத்துப் பாகமாக்கி
வச்சதனை யெடுதேங்காய்ப் பால்பிழிந்து மதுபாதி வைத்துக் காய்ந்த
நிச்சயநீர் பாதிவிட்டுச் சம்பிரக்காயளவதனை நேகத் தானே. 297

---

## 72. No. 47. சரபேந்திரர் நீரிழிவு முதலிய நோய்க்கு வைத்திய முறை

ஏடுகள் 29; Lines 6 in a Page.

இதுவும், அநுபோக வைத்திய முறைகளைத் திரட்டி

சரபேந்திரன் பெயரால் வேலாயுத உபாத்தியாயர் இயற்றிய தாகத் தோன்றுகின்றது. இதில் 77 செய்யுட்களுள்ளன. 81 வெற்றேடுகளும் இருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

Beginning:

*தாமரைத்தாது நெல்லியின்பருப்பு சந்தனங் கற்கட சிங்கி*
*தாமரை வளைய மருக்கரா வேருஞ் சாதிக்காய் குங்கிலிய*
*மூமே*
*வாமகற் பூரம் நீர்வள்ளிக் கிழங்கு மதியடிது ரந்திரி கடுகு*
*தீமை யில்லாத நெற்பொரியு நெருஞ் சிக்காயு நாகப்பூ*
*தானே.* 1

*பற்பமாந் தங்க பற்பத்தை நல்ல பாணியில் வைத்துல கத்*
*தோர்க்*
*கற்பமாம் ரோகம் பலித்திடும் ரோகபலா பலனறிந்தனு*
*பானம்*
*உற்பன மறிந்து கொடுத்திட வியாதி யோடிடுஞ் சிவதிரு*
*வையினால்*
*பொற்புள தஞ்சை நகர்ச் சரபேந்திரன் புனிதமா யுரைத்த*
*திம்முறையே.* 27

End

*இன்னமுங்கேளிக் கொழுந்தைத் தலையிலேயணி வேந்தர்*
*கள் வசியம்*
*நன்னயமா யிவ்வேலையுந் தானே நாவினிலடக்கியே நடக்க*
*உன்னிதமாக நடைகள் தோன்றுது வுலகினிற் சீர்த்திகள்*
*பெற்ற*
*மன்னவன் றஞ்சைச் சரபபூ பாலன் வசுமதிக்காயுணர்ந்த*
*துவே.* 77

---

## 73. No. 48 சரபேந்திரர் கரப்பான் முதலிய ரோகங்களுக்கு வைத்திய முறை.

ஏடுகள் 113; Lines 3—6 in a Page.

இதில், மண்டைக் கரப்பான், புடைகரப்பான், புழுங் காற் கரப்பான், சிலந்தி கரப்பான், சடைக்கிரந்தி, கழலை கரப்பான், விடக் கரப்பான், ஊது கரப்பான், பயித்தியக் கரப்பான், செங் கரப்பான், பெருங் கரப்பான், ஓடு கரப் பான், கர்ப்பிணி கரப்பான், விடபாக வீக்கம், அரையாப்பு, தொடைவாழை, விப்புருதி, பனைசை படர்தாமரை, எழுகா யறு, பவுத்திரம், ஒட்டுக் கோழை விப்புருதி, ஓடுவிப்புருதி, கண்டமாலை, முதலிய நோய்களுக்கு பலவகையான மருந்து கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இதனை இயற்றியவர் வேலாயுத உபாத்தியாயர். இதிலுள்ள செய்யுட்டொகை 210. இதில் 71 வெற்றேடுகளும் சேர்க்கப்பட்டுள்ளன. அச்சிடப்படவில்லை.

Beginning:

குருந்தாடா தோடையோ டிருகொச்சி புன்கு
  கொடிவேலி மிளகாணை நிலக் கடம்பு
பரிந்தசி ரக் கீரையுத்தா மணியெருக்கிப்
  பதினொரு வேருங் கருஞ்சீரகஞ் சிறுத்த
அரத்தையுங்கார் போகரிசி யிலைநேர் கூட்டி
  யரைத்துக் கோசலம் விட்டெண்ணெயி லெரித்துச்
சிரத்தினிற் பூசிட மண்டைக் கரப்பான் தீருந்
  திவ்வியமா மிம்முறையைச் செய்து பாரே. 1

பசுவின் பாலிலே நல்ல தாயம்மான்
  பச்சரிசி சம்பிரபழத்தள
விசையதாக வரைத்துக் கரைத்ததை
  மேன்மையாக நாலஞ்சு நாட் கொண்டிடு

தசையிலே யெழுவிப்புருகியும் போய்ச்
சடமு மெத்தக் குணமதாந் தஞ்சையி
லுசிதவாணர் தாமறி யன்புள்ள
உத்தமன் சரபேந்திர னருளிதே. 114

எருமை மூத்திரத்திற் பழங்கிட்டத்தை
யேயரைத்துத் தடவித் தானுமே
உரமதாங் கண்டமாலை வீக்கங்களு
முற்ற மற்ற சரீரத்தின் வீக்கமுங்
கரைந்து வூரைவிட்டோடுமே சங்கரன்
கருணையாற் சோழ மண்டலந் தன்னில்வாழ்
புரவலன் சரபோசிராசேந்திரன்
புனிதமாயுணர்ந் தாய்ந்த முறையிதே. 187

End;

மண்டலம் புகழ் மால் சரபேந்திரன்
வழுத்திய பிரமாணிக்கையின்படி
கண்டமாலை பஞ்ச பவுத்திரம்
காப்பனு மரையாப்புடன் புண்புரை
யண்டியபல நோய்களுக்கும் பல
அவுடமிரு நூறுடன் பத்துமாய்
தண்டமிழ்க்கவியாலும் வேலாயுதத்
தமிழ்வல னுரை நூலிது தானுமே. 210

---

## 74. No. 49 சரபேந்திரர் வைத்திய முறைகள்

ஏடுகள் 187; சிதிலமாயிருக்கிறது Lines 5 in a Page.

இதில் பழைய சுரங்கள் முதல் எல்லாவிதமான சுரங்கள், சுரத்தின் மேற்காணும் வீக்கங்கள், சன்னிகள், க்ஷயம், சுவாச காசம், காமாலை, பாண்டுமுதலிய ரோகங்களுக்கு மாத்திரை சூரணம், முதலிய பலவகைப்பட்ட மருந்துகளும் லேகியங்களும் தைலங்களும் சொல்லப்பட்டுள்

ளன. இதில் 563 செய்யுட்கள் இருக்கின்றன. இதனை இயற்றியவர் வேலாயுத உபாத்தியாயர். இது அச்சிடப்பட வில்லை.

Beginning:

நன்னயவெண் ணெச்சிகரு நொச்சி யல்லால்
நண்ணுகழற் கொடியோடு சாரணையிந் நான்கும்
சொன்னபடி யிலைச்சாற்றில் வகையொன் றுக்கே
சுகமாய்த்தா னுரிசேர்த்தா மணக்கி னெண்ணெய்
இன்னமந்தக் கோழிமுட்டை யிரண்டி லுள்ளா
யிலங்கும்வெள்ளைக் கருவும்விட்டுக்கோண்டே சுக்கு
பின்னதுகேள் காலரைக்காற் பலமே கூட்டிப்
பிசகாமலெரித்து நன்று யெடுத்திடாயே. 2

எடுத்ததிலோர் காசிடைக ளுள்ளே கொண்டே
யெழிலுடம் பிற்றடவிவந்தா லகலாமற்றுன்
அடுத்த பழஞ் சுரங்களெல்லம் வாசி யாமே
அந்தணர்க்கும் பெரியோர்க்குமெளியோர்க்கெல்லாம்
உடுத்த நல்ல வத்திரபூஷமுஞ் செம்பொன்
னும்பளசம் பளமுடனெக் நாளு மன்னங்
கொடுத்துதவு தருமதுரை தஞ்சை யாளுங்
குபேர சரபேந்திரமால் கூறும் வாறே. 2

End:

பொரிக்கார மொருகழஞ்சு பொரித்
திளநீரிற் கொடுப்பாய் பொருந்துநல்வெள்
ளரிக்காய்க்குட் பொரிக்கார மதனை வைத்தே
யுமிக்காந்த லதிலே நாட்டி
தெரிக்காமலே யெடுத்துப் பிழிந்து கொடு
நீரடைப்புத் தீரும் நன்றாய்
பரிக்காம னகுல னெங்கள் சரபேந்திர
பூபதி சொல் பண்பு தானே. 563

## 75. No. 50 சரபேந்திரர் வைத்திய முறைகள்

ஏடுகள் 136; சிதிலமாயிருக்கிறது Lines 5 in a Page.

இதில் வாய்வு ரோகங்கள், பெரும்பாடு, பிரமியம், எலும்புருக்கி, காமாலை, கல்லடைப்பு, மகோதரம், சோகை குமாரகண்டன் வலிப்பு, கவுசை முதலிய நோய்களுக்கு மருந்துகள் சொல்லப்பட்டுள்ளன. இதனை இயற்றியவர் கோட்டையூர் சிவக்கொழுந்து பண்டாரம். இவர் கோட்டையூர்ப் புராணம், திருவிடைமருதூர்ப் புராணம், கோடீச்சரக்கோவை, பிரகதீச்வரர் உலா, குறவஞ்சி, முதலியவைகளையும் இயற்றியவர். செய்யுட்டொகை 403. ஏட்டு இலக்கம் 188 முதல் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது.

Beginning:

செங்கழுநீர் கோட்டமதிமதுரசெல்லி முள்ளிகருஞ் சீரகம் பின்
கொங்கடர்ந்த சீரகந்திப்பிலிமூலம் வாய்விளங்கங் குணமாமஞ்சள்
அங்கந்த சிறுதேக்கு மாமஞ்சள் வெட்பாலை யரிசி யப்பால்
பங்கமிற்றிப்பிலிசெவிய மிந்துப்பு வசம்பு மின்னும் பகருவேனே
சொன்னவுரை தப்பாம லிவ்வகை யெல்லா மிடித்துச் சூரணஞ் செய்
தன்னதனை யிளவெந்நீர் தன்னதனிற் கொதிப்பாய தல்லாவிட்டால்
நன்னயமா யினித்திருக்குஞ் செந்தேனிலனுபானம் நன்றாயீவாய்
இன்னவகைப்படி நடந்தால் பொல்லாத வாயுவெல்லா மினி வாராதே 3

உண்டபேர் தங்கள் வயிற்றுப் பொருமு
லக்கினியி னொடுக்கம் பொல்லாத்
துண்டரிக்க வாயுமிக மெய்மெலிவு
முதாவலி தோன்றிரைச்சல்
பண்டாவாய் வின்னடக்கந் தீர்ந்துவிடு
மிம் முறை கேள் பண்பாய்ச் சோழ
மண்டலத்துக் கதிபதியாஞ் சரபேந்திர
பூபதிசொல் மார்க்கந் தானே. 18

End:

சொன்னபடி சுட்டலம்பி யவ்
விதை யோர் பலமெடுத்துச் சுகமாயந்த
நன்னயமாங் கெந்தகம் விராகனிடை
மூன்று வைத்து நயந்தரைத்தே
அன்ன வெண்ணெயிற் கலந்து தேக
மதிலே பூசி யம்மோ ருண்டால்
வன்னலுக்கஞ் செய்யானைச் சொரிக
ளெல்லாந் தப்பாமல் வாசியாமே. 403

---

## 76. NO. 51 சரபேந்திரர் சன்னிரோக சிகிட்சைகள்.

ஏடுகள் 202 Lines 4—6 in a Page.

இதில் சன்னி வகைகளும் அவைகளுக்குப் பலவகை யான மருந்து முறைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. இதனை இயற்றியவர் கோட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர். செய்யுட்டொகை 360. அச்சிடப்படவில்லை.

Beginning:

சுருக பெருங்காயமிள கொடுநேர்வாளப் பருப்புச்
சுக்கில்லைவந்து

மருமையதாய் வகையினுக்கோர் வராகனிடை வெற்
றிலைச்சாற்றரைத்துச்சாம
வரையுருட்டியுலர்த்திவைத்திடிது கருடாஞ்சன மாகு
மாதர் பாலி
னிருவிழிக்கு மெள்ளளவு போடுசன்னி பசாசுவிட
மெவையுந்தீரும். 1

பின்னமிலாதுறு சாளமேதவதாரங்களிவை பேசிரண்டா
யுன்னுறுகாசெடை யிடித்தே யிரண்டுபடி தண்ணீர்
விட்டுழக்காய்க்காச்சி
முன்னருந்தக் கொடுத்திட்டாற் சித்தவிப்பிரம சன்னி
முற்றுந்தீரும்
இன்னமுறை தஞ்சைவளர் சரபோசி மன்னர் மகிழ்ந்
திசைத்ததாமே. 161

திரிகடுகு வசம்புள்ளி நேர்வாளம் மகிழ்விந்து செப்பு
கின்ற
வரியதலைப் பிண்ணாக்குச் சாரணை வேர் சம்பிராத்துறிற்
பழச்சாற்
றொருகினந் தானூறவைத்தே யரைத்துருட்டி விழியி
னிலோருண்டையீந்தா
லரிய வொருத்தலை நோவு கபால சன்னிமுகரோகா
லகைதீரும். 20

கைகால் செவியுச்சி கண்டமூக் குக்குளிர்ந்து
மெய்தான் சுழன்று விழிசிவந்து—பையவே
வாயுமே ஞெக்கி வயிறுதனிற் சூலைவரில்
ஆயுநிலையில்லென்றறி. 352

End :

உள்ளிப்பருப்பிலரைப்படி தானுறவே யரைத்துச் சேலையி
னில்

மெள்ளச்சுருட்டி வேம்பினெய் விட்டே யெரியும் பெருஞ் சுடரிற்
றெள்ளப்பிடித்துப்பிழி தயிலஞ் சிரசுபிடரி தனிற் றடவி
யுள்ளுக்கிந்தாற்றுடியிடையா யுடனே தீரும் புறவீச்சு. 360

Colophon :

சர்வசித்து௵ மார்கழி௴ 14௳ வெள்ளேடு
புத்தகம். க. க்கு ஏடு 330. ஷைதேதியில் சிவக்
கொழுந்து பண்டாரம் வசம் ஏடு 100 நீக்கி ஏடு 230.

---

## 77. No. 52 சரபேந்திரர் வைத்திய முறை

ஏடுகள் 270; Lines 4 in a Page.

இதில் கர்ப்பிணிகளுக் குண்டாகும் நோய்களும் பாலர்களுக் குண்டாகும் வியாதிகளும் அவைகளுக்குப் பலவகைப் பட்ட மருந்துகளும் சொல்லப்பட்டுள்ளன. இதனை இயற்றியவர் திருவேங்கடத்தாபிள்ளை என்பவர். செய்யுட்கள் 454 இருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

Beginning

பாலைவேரும் வேலிப் பருத்திவேரு மிரண்டும் பசுவின் பாலிற்
சாலவரைத் துண்டி டினுஞ் சண்டையயது சமூலமுந்தான் றண்ணீராலே
சிலமுடனே யரைத்துத் தேன்கலந்து சேயிழைக்குத் தினச் செய்தக்காற்
பாலகன்றனே பிறக்கும் பைந்தொடிக்கா ரோக்கியமாம் பகருவீரே.
வேலிப்பருத்தியிலை வசம்போடுள்ளி விரும்பு முலைப்பால் விட்டரைத்துக்
கோலிமாது கீழ்வயிறு கொப்பூழ்மட்டுங் கொண்டிடவே

சாலமதித்த பாலகனுஞ் சதிராயுதயமா மென்னும்
ஞாலந்தனிலே யுயர்சோழ நாடன் சரபேந்திரன் முறையே. 35

நன்றாக விலையனைத்தும் நறுக்கியுள்ளிவ சம்புடனே நல்
லெள் ளெண்ணெய்
குன்றாத விளக்கெண்ணெய் வேப்பெண்ணெயுங்குழப்பிக்
கூட்டிமைந்தன்
தன்றலைமார் பகமட்டுந்தடவி வீக்கமுமிறங்குந்தனையும்
வார்க்கத்
துன்று காப்பான் வாதந் தொலையுமெனச் சரபேந்திரர்
சொன்னவாறே. 278

வெந்தயத்தையேவறுத்துக் கஷாயம் வைத்துக் கொடுத்
திடவும் விளைந்து மேன்மேல்
வந்த வயிற்றுக்கழிச்சல் மாறிவிடுமென்று சரபேந்திரவள்ளல்
விந்தை விந்தையாயுரைத்த மெய்ம்முறை யினிம்முறையு மிக
நன்றென்றே
சிந்தையினி லெண்ணியிது சித்தர்முறையென நல்லோர்
செப்புவாரே. 401

End

கொண்டிருந்தச் சாறுவார்த்தரைத்திதனைக் கொழுங்கடலை
யாவதாக
வுண்டைபண்ணி முலைப்பாலிலுரைத்தூட்ட வயிறுகடுப்
புடன் கணம்போங்
கொண்டசுரம் பெரியவர்க்குங் குணமாகு மிவையெல்லாங்
குறித்துத்தாங்கை
கண்டதுவே சரபேந்திரர் கருணையினாற் காசினியோர்க்
கருளினாரே. 454

## 78. NO. 53. சரபேந்திரர் வைத்தியம்.

ஏடுகள். 190 Lines 4 in a Page

இதில், பலவகைப்பட்ட வாத ரோகங்களுக்கு தயிலம் மாத்திரை எண்ணெய் சூரணம் முதலிய மருந்துகள் சொல்லப்பட்டிருக்கின்றன இதனை இயற்றியவர் திருவேங்கடத்தாபிள்ளை. செய்யுட்டொகை 288. அச்சிடப்படவில்லை சிறிது சிதிலமாயிருப்பதுடன் 94-ம் ஏடு சிதைந்துள்ளது.

Beginning :

நத்தைச்சூரி முற்றினவேர் நலமாய் மூன்று பலத்துடனே
யொத்த வசம்பு பலமுக்காலுயர்ந்த பூண்டு காற்பலமே
யித்தையம்மி தனிலிட்டேயிதமாய் நறுக்கியோண்டம்
சுத்த வெண்ணெய் படியதனிற்றலங்கத்தூவிப் பதத்தெரி
யே. 1

எரித்த வெண்ணெய் யுண்ணுக்கிலீந்து மேலும் பூசிடவே
வருத்தமான சில்விடமும் வண்டுகடியும் புடையனுடன்
பெருத்தவாத காப்பானும் பெரியசூலை சுருட்டைகணக்
தரித்த மாந்தம் போர் மாந்தம் தணியும் வாத மெண்பது
டன். 2

குறையாமல் மருந்தெல்லா முன்கஷாயங்
கொண்டரைத்திட்டே யெரித்து வடித்த பின்பு
நிறையவே யுடம்பெல்லாம் பூசி மூழ்க
நியமமாய் நாசியினிற் செவியிற்குத்த
மறைதருமே யெண்பத்து நான்கென்றோதும்
வாதமெல்லா மின்னது தான்றிண்ணமாகும்
முறைபுரியுஞ் சரபோசி மன்னர் சொன்ன
முறையாகு மிந்த முறை தெளிவாய்ச் செய்யே. 59

End:

சேர்த்ததனிலீரிருசேர் வெல்ல மிட்டுத்

திரமாகப் பாகாக்கிச் செவியஞ் சுக்குக்
கூர்த்திடுதிப் பிவிமூலஞ் சிறுநாகப்பூ
கொடிவேலி சடாமாஞ்சி யேலமிந்துப்
பார்த்திடுதிப் பிலியில வங்கப்பட்டையுடனே
யானவிலங் கப்பத்திரி வகைக்குப் பலத்தூள்
பார்த்திடுகல்லுலோக சிந்தூர மோர் பலந்தான்
பரிவுறுமப் பாகதனிற் பண்பாய்க் கூட்டே. 88

---

## 79. No. 54 (a) சரபேந்திரர் வைத்திய முறை

ஏடுகள் 253; Lines 4 in a Page.

இதில் குன்மரோகங்களுக்குப் பலவகையான மருந்துகள் கூறப்பட்டுள்ளன. இது 46—ம் நம்பர் போன்றது. ஆனால் செய்யுட்கள் 292 இருக்கின்றன. மிகவுஞ் சிதைந்திருக்கிறது. இது கொட்டையூர்ப் பண்டாரம் செய்ததென்று எழுதப்பட்டிருக்கிறது. அந்த நம்பரில் வேலாயுத உபாத்தியாயர் செய்ததாக இருக்கிறது. இதிலும் அதிலும் இருக்கும் செய்யுள் ஒன்றாகவே யிருத்தலின் வேலாயுத உபாத்தியாயரோ இதனைச்செய்தவரென்று கொள்வதே தக்கது.

---

## 80. (b) திரட்டுவாகடம் ஐம்பது

Lines 4 in a Page.

இதில் வாதமுதலிய ரோகங்களுக்கு மருந்து சொல்லப்பட்டிருக்கிறது. செய்தவர் பெயர் தெரியவில்லை.

Beginning :

வாதந்தா னென்பதாக வருகின்ற பக்கவாதஞ்
சீதமே நடுக்கு வாதஞ் சிறந்திடு முடக்கு வாதஞ்
சூத மெய்யசந்த வாதந் தோன்றிய முகத்தில் வாதம்
பேதமாம் வாதந்தீரப் பெருத்திடு மருந்து கேளே. 1

கலந்திடு ரெத்த வாந்தி கனரெத்த ரோகம் நெஞ்சில்
புலந்திடு ரெத்த பித்த பொருந்திய சயகாசங்கள்
மலந்திடு பெரும்பாட்டோடு வளரெலும் புருக்கிச்சூலை
நலந்திகழ் புண்ணுாக்கிர நாரியேமருந்து கேளே. 33

End:

போமிது பொன்னாங்காணி புகழ்சிறு கீரைமுத்தம்
ஓமிது சீந்தி நிம்ப முயருநாரத்தை கோட்டம்
ஆமிது மதுரமேல மடருஞ் சண்பகம்பூ வங்கம்
நாமிது சொன்னோ மெண்ணெய் நயந்தெரி முழுகப்
போமே. 50

---

## 81. (c) சரபேந்திரர் வைத்தியம்.

Lines 4 in a Page.

இதில் கர்ப்பிணிக்கும் குழந்தைகளுக்கும் மருந்துகள் கூறப்பட்டுள்ளன. இது 52-ம் நம்பர் போன்றது; ஆனால் அபூர்த்தி.

---

## 82. No. 55 சரபேந்திரர் விஷவைத்தியம்

ஏடுகள் 392; Lines 4—5 in a Page.

இதில், விரியன், நல்லபாம்பு, கருவழலை, சிலந்தி, பூரான், தேள், செவ்வட்டை, செய்யான், குரங்கு, கீரி, மூஞ்சூறு, சாரை, பெருச்சாளி, புடையன், மண்டலி, கொம்பேரிமூக்கன், எலிகள், நாய், குரட்டை, செங்கண்ணான், உதிரமண்டலி, பேய்நாய், பேய்நரி அரணை முதலியவற்றின் கடிகளுக்குப்பலவகையான மருந்துகளும் விஷச்சாக்குகளுக்கு முறிவும் சொல்லப்பட்டிருக்கின்றன. இதனை இயற்

றியவர் வேலாயுத உபாத்தியாயர். செய்யுட்டொகை 525. அச்சிடப்படவில்லை.

Beginning:

கங்கைதிங்கள் காந்தைதும்பை சூடுமெங்கள்
கைலாச நாதருட பாதம் போற்றி
துங்கஞ்சர போசிமக ராசன் றானுஞ்
சொல்லுமனு மதிப்படிக்கு விடங்கட் கெல்லா
மிங்கிதமா மாத்திரை யொற்றடங் குழம்பு
மேலான நசியமஞ்சனங் கடாய
.........மாஞ் செய்யுடனிற் பாட வெங்கள்
மதமுகனுங் கலைவாணி பதங்காப் பாமே. 1

புத்திர சீவியின் விதையைத் தண்ணீர் விட்டுப்
பூசிதமா யரைத்துவிடங் கடித்த வாயிற்
பத்திரமாய் லேபஞ்செய்தா லுங் கண்ணிற்
பழுதறவே யஞ்சனமிட் டாலுமூக்கில்
நத்திநசி யங்கள் செய்திடினு மீளும்
நலமிகுந்த தஞ்சைதுளா சேந்திர பூபன்
புத்திரன் சரபோசிரா சாதி ராசன்
புத்தியினு லுணர்ந்ததிந்த மூலி யாமே. 8

End:

சாலிய வாகன மாயிரத்தெ (ழுநூ) ற்றன்பது கலியுக வாய்த
நாலு மாயிரத்தி யொன்பது நூறும் நவிலிரு பத்தி யொன்
பதுவும்
மேலினுஞ் சர்வசித்தியிற் சித்திரை விளங்கிய முப்பதாந்
தேதி
வேலைசூழ் புவியிலுயர்ந்திடுந் தஞ்சை விபுசர பேந்திரன
ருளே. 525

அருளினு லய்யாக் கண்வரோ தயனு மன்புடனுரைத்திடு
படிக்கு

தரணியின் விடங்களியாவுமே மீளத்தக்கதாய் முக்கியவா
வாமிருந்திடு காரைக் குறிச்சியினில் வளரும் வேலாயுதக்
கவிஞன்
னூமிகு மைஞ்ஞூற்றய்யஞ்சு கவியா யுரைத்திடு
விடமகல்நூலே.

---

## 83. No. 56 சரபேந்திரர் வைத்தியம்

ஏடுகள் 251; Lines. 4 in a Page.

இதில், மூலம், உளமாந்தை, கயரோகம் க்ஷயகாசம் இருமல், இளைப்பு, குட்டம் முதலிய நோய்களுக்குப் பலவகையான மருந்துகள் சொல்லப்பட்டுள்ளன. இவைகளையல்லாமல் தாதுவிர்த்தி லேகியமும் மருந்திடு தீரமருந்துகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. செய்தவர் கோட்டையூர் சிவக்கொழுந்து பண்டாரம் என்று 'எழுதப்பட்டுள்ளது செய்யுட் டொகை 362. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

கூறுகின்ற வெண்காயம் நாலுபடி யெடுத்துக்
குறுகவே யரிந்துகொண்டு நீர்சுண்ட வறுத்து
தேறிடுநற் பசுவின்நெய் விட்டுப்பின்னும்
சிவக்கவறுத் ததன்பின்பு சீனிபல மூன்று
வீறுதரு சுக்குத்திப் பிலிமிளகு மூன்றின்
மெல்லிய சூரணமொவ்வோர் பலமெல்லாங் கூட்டி
மாறிலா வெருகடியின் பிரமாணங் கொள்ள
மாறிப்போ முயர்மூல வாயுத் தானே. 1

நாக மல்லிகைவேர் நறுஞ்சா ரணைவேர்பின்
வேக மருவுகொடு வேலிவேர்—வாகாந்
தவசி முருங்கைவேர் சம்பீரச் சாற்றி
லிவையரைத்து மூலத் திடு. 51

ஆக்கிடந்த வுண்டையி லோருண்டை மோரில்
அறவுரைத்து மூன்றுநா ளாறு போது
நீக்கமின்றிக் குடித்திடின் மூலக்கிராணி
நீடுபவுத்திர ரோகம் பாண்டு ரோகம்
தீர்க்கமுறு சோமரோ கத்தினோடு
திகழ் கருப்ப ரோகமுத லெவையுந் தீரும்
பார்க்கண்வளர் நகர்க் கெல்லா முயர்ந்த தஞ்சைப்
பதிமருவு சரபோஜி மன்னர் முறையிதுவே.

End:

சிருறு வெள்ளறுகு சங்கங்குப்பிவேர் நிலவேம்பு
காரமுறு சங்கம்வேர் சமன்கூட்டிப் பொடித்து வெரு
கடிக்கு நோய்
நேருறுநற் சிறுநீரிற் காலையிற் கொள் புளிகைப்பு நீக்கு
நெய்பால்
சேருடலின் கடுப்பு மருந்திடு வெதுமூத்திர நோய் தீ
ருயன்றே. 362

---

84. No. 57 சரபேந்திரர் வைத்தியம்

ஏடுகள் 303; Lines 4—6 in a Page.

இதில் சிரரோகம் செவிரோகம் பீனிசம், பல்வலி, நாவின் ரோகம், முகரோகம் முதலிய ரோகங்களுக் கெல்லாம் பலவகையான மருந்துகள் சொல்லப் பட்டிருக்கின்றன. செய்யுட்டொகை 401. இயற்றியவர் வேலாயுத உபாத்தியாயர். அச்சிடப்படவில்லை இடையிடையேசிதைந்திருக்கிறது.

Beginning

திங்கள் கதிருலவு தஞ்சை நகரையாளுந்
தீரன் துளசேந்திர மகராசனீன்ற
துங்கன் சரபோசி ராசாதி ராசன்

சுகரகத்தியர் போகர் சட்டைநாதர் சூதராம்
கோங்கணர் பிருங்கர் கருவூர ரெல்லோரும்
கூறும் வைத்திய நூலை யுணர்ந்தாராய்ந்து
பங்கமிலா மனுலகினுக்காய்ச் செய்யுள்
பாடமதமுகவனிரு பாதங்காப்பாம். 1

மதமுகவ னம்பியறு முகவன் கந்தன்
மலர்ப் பாதந்தனைப்போற்றி வையகத்தோர்க்
கிதமுற வென்றுரோக்கியசாலை யொன்று
ஏற்படுத்தி முன்முனிவர் சித்தர் யோகர்
பதமுறவே சொல்லிய நூறன்னை யெல்லாம்
பார்த்துணர்ந்து நாள்தோறும் சரபபூபன்
முதல்வனிட்சயித்தபடி சிரோரோகந்தான்
மொழியவயன் தேவி கலைவாணி காப்பாம்.

End

பெருந்தலை நோய்க் கொருமருந்து சொல்லக் கேளு
பேசாமலொருமனதாயிருந்து கொண்டு
எருக்கம் வேரும் கடுகு நேகவுந்தானே கல்வத்
திட்டரைத்துத் தலையிலப்ப
உரத்ததலை வலிதீரு மருந்த வத்தோ
ருரைத்த முறை யதைத்தஞ்சை நகரையாளுந்
துரந்தானுய் நீதி செலுத்துங் கெம்பீரத்
துரைகள் சிகாமணியுணர்ந்த பத்திதாமே. 400

பொன்னுலகோர் முனிவருல குக்காய் முந்நாள்
போதித்த வைத்தியத்தை யுணர்ந்து ணர்ந்து
தென்னனகைத் துளசேந்திர னீன்ற பாலன்
தீரன் சரபோசி மகாராசன் றானும்
சொன்னவுரை படிக்குசிரோ ரோகம் நானூற்
றொரு கவியுஞ் சிறப்பித்து வுசித மாகப்

பன்னுதமிழாற் காரைக் குறிச்சி வாழும்
பாவலன் வேலாயுதனும் பகரு நாலே. 401

சிரோ ரோக முற்றும்

குறிப்பு:

இதன் கடைசியில் அரையாப்புக்கு மருந்தெழுதிய ஏடொன்று சேர்க்கப்பட்டுள்ளது.

---

## 85. No. 58 சரபேந்திரர் வைத்தியம்

ஏடுகள் 478 ; Lines 4—5 in a Page.

இதில் விரேசனத்துக்கு மருந்தும் கிராணி, அதிசாரம், கழிச்சல், வயிற்றுக்கடுப்பு வயிற்றிரைச்சல் முதலிய உதர வியாதிகளுக்குப் பலவகை மருந்துகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. நாக்குப்பூச்சி கிரிப்பூச்சிக்கு மருந்தும் சொல்லப்பட்டுள்ளன. இயற்றியவர் வேலாயுத உபாத்தியாயர். செய்யுட்டொகை 705. அச்சிடப்படவில்லை சிதிலம் சிறிதிருக்கிறது.

Beginning :

கங்கையைச் சிரசி லணிந்திடுங் கைலைக் கடவுளர் பாதமே போற்றும்
மங்களத் தஞ்சை விபு சரபேந்திரன் மாமுனிவர்கள் மொழி நூலை
யுங்கவனித்து விரோசனங் கிராணியுடன் கழிச்சல் கடுப்பிரைச்சல்
சங்கையிலா வதிசாரமதகலச் சாற்றவைங்கரனுங் காப்பாமே.
ஆமணக் கெண்ணெயிற் கடுக்காய்ப் பொடியொடு கற்றாழையின் சாறதுவுங் கூட்டி
சேமமுறக் காத்தினுங் காவினுந்தடவி மத்திக்க நெடுநாணின்ற

வாமமுதலாய் மலக்கட்டும் போம் சவுக்கிய முண்டாகு
மென்று
கோமனுஞ் சரபேந்திரன் குவலையத்தோர்க்கும் முறையைக்
கூறினரே.
கருவேலம் பிசின் விலவம் பிசின் கிராம்பு கஞ்சாவினிலை
விளாம் பிசின் சாதிக்கா
யரிதாளவசுவாசி யபினேடெட்டும் மவ்வகைக்கோர் மூவாா
கனிடைகூட்டி
உரமான கஞ்சாவினிலைச்சாறு விட்டுவுற்பணமா மைபோல
வரைத்துக்கொண்டு
ஒருசுண்டைக்காயளவு முண்டை செய்துவுற்ற தேனதிற்
கொள்ளக்கிராணிபோமே.

End:

சீருஞ் செல்வ திருந்தஞ்சை மாநகர்ச்
செல்வமால் சரபேந்திரனருளினுல்
கூருகின்ற விரோசன மாதியாய்
குக்கியினில் வந்துற்ற வியாதிகள்
தீரவுநெய் குழம்பு கடாயமாத்
திரைகள் பற்பம் செந்தூரம் பலவகை
பாரதியருள் பெற்ற வேலாயுதப்
பாவலர் சொற்றொடர்பி ' தறியுமே. 705

---

## 86. No. 59 சரபேந்திரர் வைத்தியம்

ஏடுகள் 162 ; Lines 4—7 in a Page.

இதில், சூலைகள், காசம், க்ஷயம், இருமல், ஈளை, முதலிய வியாதிகளுக்கு பலவகையான மருந்துகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இதனைச்செய்தவர் வேலாயுத உபாத்தியாயர். செய்யுட்டொகை 452. அச்சிடப்படவில்லை. சிற்சில இடங்களிற் சிதைந்திருக்கின்றது.

Beginning :

வேலைசுற்றும் பூவரைப்பின் புகழாற்றுஞ்
சரபோசி வேந்தர் வேந்தன்
நூலைமுற்று மாய்ந்துதெளி புத்தியினாற்
பற்பலவா நோய்களுக்குள்
சூலையுற்ற வகைக்கெல்லாந் தீரு
மருந்தது செய்யச் சொன்னதாலே
வாலைபெற்ற மும்மதன்றாள் வணங்கு
வேலன் கவியால் வரைந்திட்டானே.

பொடுதலை கருநொச்சி கழற்கொடி
கரிசாலை போற் றெருக்கும்
கொடுசிறுத்த செங்கொட்டி மேனியிவை
யிலை வகைதான் கொண்டிடித்தும்
பொடி செய்து காலையந்தி யொன்பது
நாளுட் கொள்ளப் பொல்லாச் சூலை
விடுமுப்புப் புளி தள்ளிப்பத் தியமா
யிரு வெந்நீர் மேற் புளங்கே. 58

சுந்தர வெண்காரமதைப் பொரித்துப்
பாசித்தண்ணீர் துரிசெடுத்து
வந்தபழந் தண்ணீரிற் கலக்கி மூன்றே
நாளும் வகையாய்க் காலை
யுந்திரமாய்க் கொள்ளிருமல் சேற்று மழு
மேயகன்று மோடுந் தானே
தந்திரமா மருந்திதையுந் தஞ்சை
சரபோசி மன்னன் சாற்றும் வாறே. 356

End :

மூல முடன் பருவயிறு சுவாச காச
மருசு மூளைக் கும்பக்க

சூலையு நெஞ்சடைப்பிளேப்பு மருவை
பீலிகை பொருமற்றுடி கிராணி
சால வயிற்றினிற் புழு மந்தாக்கினியு
மற்று விடுஞ் சகத்தின் மீதே
சீலமிகுந் தயிலமிது தஞ்சை விபு
நிர்ணயித்த செய்கைதானே. 452

சூலை முதலிய கசரோகாதிகளுக்கு கவி
முற்றும்.

குறிப்பு:

ஏழு வெற்றேடும் மேகமிருபத்து ஒன்றுக்கு மருந்து கூறும் செய்யுள் எழுதிய ஒரு ஏடும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

---

## 87. No. 60 சரபேந்திரர் வைத்தியம்

ஏடுகள் 311; Lines 4—6 in a Page.

இதில், கீரிழிவு, பிரமியங்கள் பித்தபாண்டு, சோகை, மேகவாய்வு, இருபத்தொரு மேகங்கள் முதலிய வியாதிகளுக்குப் பலவகைப்பட்ட மருந்துகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இதனை இயற்றியவர் வேலாயுத உபாத்தியாயர். செய்யுட்டொகை 560. அச்சிடப்படவில்லை.

Beginning

திருவளரு மாதி சதாசிவனார் பாதம்
சென்னியில் வைத்துலகின்மனு வுக்காய் முன்னோர்
மருவளருந் தமிழாற் செய் வைத்தியத்தை
வாய்மைபெறு தஞ்சைதுளா சேந்திர பூபன்
றருபுதல்வன் சரபோசி மகரா சேந்திரன்
தமிழதினுலுரைக்கவென்று நிச்சயித்த
வருளதனு னார்க்குவரு மேகரோக
மதுக்கவிழ்த முரைக்க தும்பி முகனுங் காப்பாமே.

ஆவாராதி யடையொன் றேதக்கேள்
ஆவாரையிலையு மொருபிடி கொணர்ந்து
தாவிவளர் குறுவை யரிசியு முழக்குத்
தானரைத்து வுப்பில்லா வடையாய்ச் சுட்டு
ஆவலுடன் நல்லெண்ணெய் தோய்த்துச் சந்தி
யந்தியு முண்டிட நாளிரண்டு வேளை
தாவியநீரிழிவு மறுந் தப்பாமற்றான்
தஞ்சைவாழ் விபுவுணர்ந்த வடையிதாமே. 94

உகாவேர்ப்பட்டை விராகனிடை யொன்று
மொண்கடுகு விராகனிடை யொன்றும்
ஆகாதகாரக் கொடுவேலி வேர்ப்பட்டை
யது விராகனிடை யொன்றுங் கூட்டியே
முகாரவிந்த விழியால றிந்திந்த
முச்சரக்கை யரைத் தெடுத்துக் கொண்டு
சகாயஞ்செய் கருப்புட்டியை முன் கொடு
சாப்பிட்டவுடனிம்மருந்தைக் கொடே. 172

கொடுத்துத் தின்னவு மிப்படி மூன்று நாள்
குணமிருக்திடும் பத்தியமோ விலை
விடுத்து மெந்தப் பிரமியமுந்தீரு
மேதினிக்கிது கைகண்டதுண்மையே
அடுக்கு மென்ப தடுக்கா துணர்ந்து நன்
னறிவினாலே யறிந்தன்ன வத்திரம்
கொடுக்கு மிங்கித சங்கீத சாகித்திய
குணம்வளர் சரபேந்திரன் முறையிதே. 173

End:

கலியுக நாலாயிரந் தொளாயிரமுங்
கணக்குடனிருபத்து எட்டும்
நல மிகுஞ்சாலிவாகனந்தானும்
நவிலு மாயிரத் தெழுநூறும்

பலனுறு நாற்பத் தோன்பதின் மேலிற்
பற்றிய சர்வ சித் ததனில்
வலுவுள மகா மாத முப்பதனில்
வண்மை தென்னளகையிற்றுனே. 558

தென்னளகைச் செங்கோல் மனுநீதி
செலுத்தியே வள்ளலி லுயர்ந்த
மன்னர் கோன் சரபேந்திரன்
பூமி மனுக் குபகாரம தாக
வுன்னிய மேக வியாதிகட் கெல்லா
முயர் பற்ப சூரண லேகியம்
வன்னமதாஞ் செந்தூரமுங் கிருதம்
வளமுள நெய் வடகமுமே. 559

வடகமு மெண்ணெய் பலவிதமான
மருந்துகள் நோய்கள் தீருதற்கு
மடவுள செய்யு ளோந்து நூற்றின்மே
லறுபது கவியதா யுரைத்த
வடிவுள வாணி யருளது பெற்ற
வாணருக் கேவலும் புரிவேன்
திடமுள காரைக் குறிச்சி வேலப்ப
செல்வ பாவல னுரை நூலே. 560

---

## 88. No. 61 சரபேந்திரர் விரணரோக வைத்தியம்

ஏடுகள் 221; அபூர்த்தி Lines 4 in a Page.

இதில் பற்பல விரணங்களுக்கு எண்ணெய், நெய், களிம்பு, லேகியம் புகை, குழம்பு, கிருதம், காரம், தைலம், சூரணம் முதலிய மருந்துகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இதில் 315 செய்யுளிருக்கின்றன. இது சரபேந்திரர் உத்தி

ரவிற்கிணங் வேலாயுத உபாத்தியாயரால் அச்சிடப்பட வில்லை.

Beginning:

விரணங்களுக்குப்.

பாடாண வெண்ணை.

சலாசத்து மரைப்பலம் பாடாண மொருபலமிஞ் சம்பீரநீர்
உலாவரை துற்ற மொருதுட்டிடையை நேகவரைத்துரை சாக்கி
னிலாங்கவசம் பொதிந்து மிரண்டு மண்சேலை செய்து மிதை மணற்குட்
கலாவிவை மேல்வாளி நெருப்பிட்டு மண்கருக்கக் கண்டெடுத்தே. 1

இதுமது:

எடுத்தபின் பொடிச்செய்து யொருநாழிமுத்தினெண்ணை யிதிலும் போட்டு
அடுத்தாவிப்புடத்தில் வைத்துத்தெடுத்துப் புண்சிலந்தி யழு குணக்கும்
படுத்துடையாக்கட்டி வரைபுரைகளுக்கு முதலான பலபுண் ணுேய்க்குங்
கொடுத்திடு மேற்றடவச் சரபோசி மகராசன் கூறுவாரே. 2

கன்னக்கிரந்தி, காளான், கரப்பானிதுக் கெண்ணை.

கருஞ்சீர மொதியங் தோற் பூசகறப்பான் பட்டை சாத்தி மூலம்
மருதந் தோல் வினவெளுத்தைப்பிசினு நீர்ப்பூலா வளரும் பட்டை
தருமிவைகடனை நேகவரைத் தெண்ணைதனிற் கூட்டித் தானெரித்துப்
பருங்கன்னக் கிரந்திக்குங் காப்பானுக் கிடத்தீரும் பண் பாய்த்தானே. 112

End:

தண்டு நோந்தால் மருந்து:

அழிஞ்சிவே ரொலுமிச்சம் பழச்சாற்றிலிட்டரைத்து மதைத்
தண்டின்மேல்
வழிபூசத் தீர்ந்து விடு வெள்ளலரி மாதனை யிவ்வகை சமூலங்
கழிநறுக் குலத்தியே சமனுக் கோர்பானையிட்டுக் காணப்
பூமி
குழித்தயிலம் வாங்கி யரைப்பணவிடையுண் தண்டிவிடக்
குணமதாமே. 315

---

## 89. No. 62 சரபேந்திரர் வைத்தியம்.

ஏடுகள் 58; Lines 4 in a Page.

இதில், பாண்டு ரோகத்துக்குப் பலவகையான மருந்துகள் சொல்லப்பட்டுள்ளன. இயற்றியவர் வேங்கடாசலம் பிள்ளை யென்றெழுதப்பட்டிருக்கிறது. செய்யுட்டொகை 101. அச்சிடப்படவில்லை.

Beginning:

மஞ்சு சிவனிடம்வாழ் மஞ்சுகுழ லாளீன்ற
கொஞ்சுகும ரர்க்குமுன்னோன் கூறிய நூ—லஞ்சகத்தில்
தஞ்சமென்பார்க்கேயருளுந் தஞ்சைவெள்ளைக்குஞ்சரத்தின்
கஞ்சமலர்த் தாளிணையே காப்பு.

பண்பிலங்கு மாவாரம் பட்டையுஞ்சுக் குங்காச்சி
யுண்பவர்க்குக் கால்கையி னூதலும்போந்—திண்புயத்திற்
றூரணியுந் தஞ்சைச் சரபேந்திர னுரையால்
பாரணியாய்ச் சொன்னேன் பரிந்து

தேடரிய மிளகு சீரக மிந்துப்பு
திப்பிலியு மூன்று மிவை சமனதாகக்

கூடியதற் கோர்பாதி யிரும்பின் றூளைக்
கோமயத்திற் காடியிலுஞ் சுத்தி செய்து
கோடிகுண மேயுறநற் கிரிப்பான் சாறு
கொண்டிவையெல்லாமரைத்துத்துலாக்காய்நோய்
நாடுரிய நெய்தனிலுண் பித்தபாண்டு
நவிலுங்கா மாலையுடன் திரும்பாரே. 50

End :

ஒவ்வு விளக்கெண்ணெய் யொன்றை விட்
டொருநா டோய்ந்து குளியுற்ற சோகை
யவ்விடபாண்டும் பித்தபாண்டுங்
காமாலையுட னடர்கிராணி
கவ்விய வாய்ச் சுபம் போம் தாது
விருத்தியு முண்டாங் கனத்த பாரி
லெவ்வுயிருந் தன்னுயிரொன் றெண்ணு
சரபேந்திரமா வியம்பு வாறே. 108

---

## 90. No. 63 சரபேந்திரர் வைத்தியம்.

ஏடுகள் 57; Lines 4—5 in a Page.

இதில் சுரங்களுக்குப் பலவகையான மருந்துகள் சொல்லப்பட்டுள்ளன. இதனை இயற்றியவர் சுப்பராயக்கவிராயர் என்றெழுதப் பட்டிருக்கிறது. இதில் செய்யுள் தோறும் சரபேந்திரர் பெயர் காணப்படுகிறது. அச்சிடப்படவில்லை.

Beginning :

செந்தமிழின் முதலாய சகலகலை நாயகனார் சிவனாரீன்ற
மைந்தர் கந்தருக்கு முன்னோர் மேருதனிற் பாரதத்தை
மருப்பினாலே

அந்தமதா யெழுது கையர் சுரநூலைச் சொல்லுதற்கே
யருள்செய் மூர்த்தி
கந்தமலர்ப் பொன்னிலங்குந் தஞ்சை வெள்ளைப் பிள்ளையார்
காப்புத்தானே.

சுந்தரமிகும் விலாமிச்சவேர் வெட்டிவேர்
சுக்குபற்பாடகமலால்
சுகந்தமுளசந்தனம் கோரைக்கிழங்கினோடு
சொல்லுமிவ்வாறுவகையு
மந்தமுடனே பக்குவங்கள் தப்பாமலே
யதையடைச்சாராகவைத்
தப்பால்கொடுத்துவரில் வெப்பாயெழுந்திடு
மந்தபித்தச் சுரமெலாம்

மூந்தப்பறந்திடும் சிந்தனைகள் வாராது * *
முகவசிகாமதாகும்
மூலமென் றோலமிடுயானையைக்காத்திடு
முராரிமகிழுந் தங்கையால்
சந்ததநிறைந்த பெருவிடையீசர் கிருபையால்
சற்புருடசிங்கமெனவும்
சகலதேசந் துதிசெய் சரபேந்திரபூபதி
சங்கநிதி சொன்ன முறையே.

End :

பார்கொண்ட கீர்த்தியுயர் தஞ்சைநகர்மேவு
மதிபதிபோசல குலதிலகன்
* * * *
* * * *
சீர்கொண்ட சந்ததி தழைத்திடு முத்தமன்
சிங்காசனாதிபதிநற்
செல்வமுந்தன்மதிநிறை சரபேந்திரபூபதி
செப்பும்வகை தப்பாமலே

வார்கொண்ட சுரமெலாந் தீர்ந்திடக்
குளிகைபல வழுத்தினேன் குடிநீருடன்
வண்மைபெறு நாற்றெட்டுச்சிவகாம
மகிமையால் வாழியிச்சகமுழுதுமே.

---

## 91. No. 64 அசுவ வைத்தியம்

ஏடுகள் 45 ; Lines 5 in a Page.

இதில் குதிரைகளின் உற்பத்தியும் அவற்றின் சுழி, நாம்பு, நிறம், சத்தம் முதலியவைகளும் அவைகளுக் குண்டாகும்வியாதிகளும் அவற்றிற்கு மருந்தும் கூறப்பட்டுள்ளன. இருபது செய்யுட்கள் உரையுடன் இருக்கின்றன. நூல் முழுவதுமில்லாமையால் செய்யுட்டொகைஇத்தனையென்று தெரியவில்லை. இதனை மொழிபெயர்த்துத் தமிழில் இயற்றியவர் கோற்கைக் கோமான் குணராச சூரியன். பிழையதிகமாகக்காணப்படுகின்றன. அச்சிடப்படவில்லை

**Beginning :**

வடநூலின் வகைகண்டே யமைைக்காத்து
வருதாக பிறப்பின்வகை வளருந் தேகந்
மிடமான சுழிநாம்பு வர்ணஞ் சத்தம்
மெடுத்துவா வியற்பின்ன மேறுதோஷம்
விடமான நோயின் வகை மருந்து தந்த
மெலமவகையால் வயதும் விளங்ககாமக்
குடமென்முனி பகர்ந்த தமிழாற் சொன்னான்
குணராச சூரியன் பூங்கோற்கைக் கோமான்

எ—து. உற்பத்தி தேகதஞ் சுழி நாம்பு நிறம், சத்தமளவு நன்மைநோய் மருந்து வயது சொன்னபாயிரம்.

குடுமியடியிலுயர் சிரத்தில் குறித்த நாவிசெவியடியில்
வடிவுபெறவே தஞவேரில் வகுத்த கழுத்திற்கட் கடையில்

கடியபரியின் கடைவாயில் கதித்தவுரத்திலுயர்தோளி லுடைய சுழிதான் வருமாகில் மன்னருகந்து கொள்வாரே- என்பது குடுமியடியில் க. செவியடியில் 2. தனுவேராகிய பறவைச்சுழி ௪. கழுத்தில்சுழி க. உரைமணி க கடைக்கண் களில்சுழி 2. கடைவாயில் 2 புயங்களில்சுழி 2. இவையுடை யன உத்தமமாமசுவம். 20

End:

ரேத்தசுமான குதிரைக்கு வாய்ச்சென்று செவியும் வேர்த்து அண்டமும் வேர்த்து தண்ணீர் வடித்து நீர்ப்பாரிக்கும் ரெத் தம் போலேயிருக்கும் இதுக்குமருந்து. முந்திரிகைபழம் ஒருபலம் ஆடாதோடையிலை ஒருபலம் அதிமதுரம் ஒருப லம் சீந்தில்தண்டு ஒருபலம் கடுகுரோகணி ஒருபலம் இது இடித்துத்தேனில் குழைத்துக்கவாளமிடவும். இது போரா தாகில் ஓமம் ஒருபலம் சீனி நாலுபலம் ஒக்கக்கொண்டு நெய்யில் குழைத்திடத்தீரும்.

---

## 92. No. 66 மாட்டு வைத்திய அட்டவணை.

ஏடுகள் 43; Lines 1—5 in a Page.

இதில் மாடுகளுக்குண்டாகும் வியாதிகளும் அவைக ளுக்கு வைத்தியமும் வசனரூபமாக எழுதப்பட்டுள்ளன பிழையதிகம். அச்சிடப்படவில்லை.

Beginning:

கருநோய் கொண்ட மாட்டின் குணம்

எப்படியென்றால் வெயிலில் நில்லாது நாயெத்திமிறி மீனும். நீரிற்போய்நிற்கும். இதுக்கு மருந்து பருத்தியிலைச் சாறு மிழகுடி சிறுமீன் (கழு) விதண்ணீரும் கூடக்கலந்து வார்க்கவும். செவியடியில் சூடுசுடுசிறது வரு இந்தப்படி-

எழுசூடு சுடுகிறது. இதுக்கு இடதுசெவியிற் சூட்டுக்கோல் காச்சி ஊடுருவச்சுடுவது.

மூக்குவியாதி கொண்ட பசுவின் குணமும் மருந்தும்.

மூக்கிலே கோழை பறியும் நிலத்தோடே மூக்கைத் தேய்க்கும். இதுக்குமருந்து ஒருபடி உப்புங்கொம்மட்டி மாதளையிலையும் குங்கிலியமும் கூடக்கூட்டியரைத்து நசிய மிடவும். அதையெடுத்துக் கொண்டரைத்துக் காடியுடன் புகட்டுவது.

End :

கொம்பரைவியாதி கொண்ட பசுவின் குணமறியும்படி

தலையை முருத்திளோடே தேய்க்கும் அழி
மேய்ச்சல்மேயும் இதற்குமருந்து
நல்லவேளைச்சமூலமும் வசம்பு வெள்வெங்காயம்
நன்றாய்த்தட்டி நசியம்பண்ணுவது இதற்குச்
சூடுமுதுகிலுச்சியிலே மூன்றுசூடு சுடுவது.

---

## 93. NO. 67 வைத்திய அட்டவணை

ஏடுகள் 275; Lines 2—5 in a Page.

இதில் சூலைக்கட்டுக்கும், காசம் க்ஷயம் இருமல், ஈளை, முதலிய சிலேட்டும நோய்களுக்கும் பலவகையான மருந்துகள் சொல்லப் பட்டுள்ளன இது பெரும்பாலும் வசனமும் சிறுபான்மை செய்யுளுமாக எழுதப்பட்டிருக்கிறது அநுபோகமுறைகள் பலஇருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

Beginning :

சங்கங்குப்பியிலை மிளகு கலைமான் கொம்பு சுக்கு வெள்ளை வெங்காயம் பெருங்காயம் இவை சமம்கஷாயம் வைத்துக் கொடுத்தால் சூலைரோகம் தீரும். வேறுசூலைக்குக் கஷாயம். ஒருத்தலை வெள்ளைப்பூண்டு முருங்கைவேர்ப்பட்

டை திப்பலிமூலம் வசம்பு பாவட்டைவேர் சுக்கு இவைச மம் கஷாயம் வைத்துக்கொடுத்தால் சூலைதீரும்.

பட்டையோ ரெட்டதாகும் பகருங் கெந்தகநாலாகச்
சட்டமாயசுவ நாலுதளர் கொடி வேலி ரண்டு
மட்டமாயிடித்து நெய்யுமருவு சர்க்கரையுங்கூட்டி
நட்டமாஞ்சூலை நயந்துபுண் தீருமென்றே.

**End :**

கபத்துக்குஞ் சுவாசகாசத்துக்குஞ் சூரணம்

தாளிசபத்திரி, திப்பலிமூலம், சிறுநாகப்பூ, நறுக்குமூ லம், கற்கடகசிங்கி, லவங்கப்பட்டை, கூகைநீறு, பேரீச்சம் பழம், முந்திரிப்பழம், லவங்கபத்திரி, செவ்வியம், மாதளை யோடு, கடுக்காய், சடாமாஞ்சில், கருஞ்சீரகம், சாதிக்காய், கிராம்பு, சாதிபத்திரி, சீரகம், ஏலம், திப்பிலி, மிளகு, சுக்கு வில்வவேர், நெருஞ்சிவேர் கொத்தமல்லி இவையெல்லாம் வ கைக்கு அரைப்பலம் வீதம்கொண்டுவந்து நன்றாய்ச் சூர ணித்து வடிசெய்துகொண்டு எலுமிச்சம்பழச்சாறு விட்டுப் பிசறி நிழலுலர்த்தலாயுலர்த்தி காய்ந்தபிறகு இஞ்சிச்சாறு விட்டுப்பிசறி அதுவும் நிழலுணர்த்தலாயுணர்த்திக் காய்ந்த பிறகு இந்தச்சூரணம் நின்றநிறைக்கு சீனிகலந்து சாப்பிட வும் கபத்தையும் சுவாசத்தையும் பிடிக்கும்.

---

## 94. No. 68. வைத்திய அட்டவணை

ஏடுகள் 365; Lines 2—6 in a Page.

இதில்பலதினுசான அருமையான விரோசனமருந்து கள், மலசலக்கட்டு, கிரிப்பூச்சி, நாக்குப்பூச்சி, மலட்டுப்புழு, கிராணிகள், அதிசாரம், வயிற்றுக்கடுப்பு, இரத்தக்கடுப்பு மு தலிய வியாதிகளுக்கு அனுபோக மருந்துகள் சொல்லப்பட் டிருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

Beginning

கடுக்களி சுக்கிந்து கால்மதங்கோடங்கை
யடுக்களை நீர்வார்த் தரைத்துக்—குடிக்க
வளரு மதிமுக மாதே வயிறு
களமுள களமுள காண்.

நாபியில்தடவ விரோசனம்

ரசம் கெந்தகம் நேர்வாளப்பருப்பு நில்லம்விரை வெங்காரம், சிவந்த ஆமணக்கின்பருப்பு கொன்றைவிதை வேர்ப்பட்டை வகைக்கு வராகனிடை 2. கூட்டிப் பொடிபண்ணி சதுரக்கள்ளிப்பாலிலாவது பசுவின்பாலிலாவது ஒருசாமம் அரைத்து முற்றினதேங்காயில் அடைத்துப் பதினைஞ்சுநாள் குப்பையில் புதைத்து பிறகு தேங்காயு மருந்துக்கலத்தின் புறத்திலே அப்பி வெயிலிலே வைக்கத்தயிலம்விழும் அல்லது சீலையில் முறுக்கிப் பிழிந்து எடுத்துவைக்கவும். இந்த தயிலம் நாபியைச் சுற்றித்தடவபேதியாம். அலரிப்பூச்செண்டில் தடவிமோந்து பார்க்கப்பேதியாம்.

End

வழும்பு உதிரத்துக்கு

தெங்கம்பாளை முத்தமொடுதிகழும் வாழைப்பூவுடனே
துங்கமாக இடிப்பித்துச் சொன்னபடியே நீர்பிழிந்து
எங்கு மொத்த விலவம்பிசின் இதன்மேல் விடையமேல் விசிறி
தங்க வொன்று வழும்புதிரந் தப்பாதினிமேல் வாராதே.

---

## 95. No. 69 வைத்திய அட்டவணை

ஏடுகள் 354 Lines 4—6 in a Page.

இதில் சன்னிகளின் லட்சணமும் அவற்றிற்கு மருந்துகளும், புறவீச்சு, வலிப்புகள், குமாகண்டன் முசலகன் கா

மாலைகளுக்கு மருந்துகளும் எழுதப்பட்டுள்ளன. அச்சிடப் படவில்லை.

Beginning:

கெருட வஞ்சனம்

நேர்வாளப்பருப்பு விராகன் இடை க. துருசுவிராகன் இடை க. சுக்குவிராகன் இடை க மிளகு விராகன் இடை க பெருங்காயம் விராகன் இடை க இதுவெல்லாம் வெற்றிலைச் சாற்றில் சாமம் அரைத்து உண்டைசெய்து நிழலுலர்த்திக் கொண்டு முலைப்பாலிலுரைத்து எள்ளளவுபோடவும் இதுக் குத்தீரும் வியாதி சன்னிபேய் பிசாசு நீர்ப்பாடு விஷம் வீக்கம் சன்னி வாதம் எல்லாம் தீரும்.

சன்னிவாத முதலானதுக்கு வாத ராட்சதன்:

காவி, சூதம், அரிதாரம், கெந்தகம், சுக்கு மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், நேர்வாளங் கழஞ்சு, முருக்கிலைச் சாற்றில் ஒருசாமம் அரைத்து மிளகு பிரமாணம் உண்டை பண்ணி இஞ்சிச்சாற்றிலொரு உண்டை கொடுக்கவும் வாய்வு சன்னி வாதந் தீரும்.

சீதாங்க சன்னிவாத லட்சணம்:

சீதள மதிகமாகுஞ் செருக்கிய மூர்ச்சை தாகம்
போதவே வாந்தி விக்கல் பொருமிய கழிச்சலுப்பல்
பேதமாய் நடுக்கஞ் சோபம் பெருக்கவே யருமை தோனும்
வேதமே கூறு மித்தை சீதாங்க சன்னி யென்னே.

End;

பஞ்ச பிரமிய காமாலை இயம காமாலை தம்பக்காமாலை அழற் காமாலை பெருவயிறு:

காக்கணம் வேர், ஆதனை வேர், சிவதை வேர், கொடுவேலி வேர், சாரடைவேர், இவை ஓரொன்று நாற்பலங்

காய்ந்த கஷாய மேறிட்டு வைத்து இதில் நெய் நாழி, பால் நாழி, தயிர் நாழி, கோமிய நாழி, கோசல நாழி விட்டு கற்கம், திரிகடுகு, திப்பிலி, கருஞ்சீரகம், அசமதாகம் செவ்வியம், கடுகு, இந்துப்பு, பெருங்காயம், விழலரிசி வெட்பாலையரிசி இவை ஒவ்வொன்று கழஞ்சு அரைத்து காங்கைச் சாறு நாழி சேர்வாளம் அன்பது கூட்டிக் கள்ளிப்பால் உரிவிட்டு மெழுகுபதத்தில் வடித்து நக்கவும் பாண்டு ரோகம் கிரிச்சமெல்லாந் தீரும்.

---

## 96. No. 70 சரக்கு சுத்திமுறை.

ஏடுகள் 114; Lines 2—5 in a Page.

இதில் நவலோகம் ரசம் கெந்தகம் பாஷாணம் முதலிய சரக்குகளின் சுத்தி முறையும் தங்கம், செம்பு, நாகம், அபிரேகம் முதலிய செந்தூரமுறையும், எழுதப்பட்டுள்ளன. அச்சிடப்படவில்லை. இடையிடையே சிதைந்திருக்கிறது.

Beginning:

சுவர்ண சுத்தி:

தங்கத்தை செமமண்ணில் பொதிந்துப் புடம் போட்டால் சுத்தமான சுவர்ணமாம். பிறகு அச்சமாய் தகடாக்கி ஏமாதவஷிகிம் எலுமிச்சம் பழச்சாற்றில் மர்த்தனம் பண்ணி அந்தத் தகட்டில்பூசி உலேமுடியி விட்டு மேலேயு மூடி சீலை மண் தடவி ஒரு கச புடம் போட்டால் பொன் டஷ்பமாம். அந்தப் பஷ்பத்தில் எருக்கம்பால் அரசம்பட்டை சாற்றில் பர்த்திச்சு இங்கிலிக்கம் அந்தப்பஷ்பமத்தனை நிறை போட்டு சேக்வரைத்து அதன்பிறகு தூல்தாமாவெருது ரசத்தில் நாலுதிரம் மர்த்திச்சு காட்டெரு முட்டையில் ஏழு கசபுடம் போட்டால் பொன் செந்தூரமாம்.

End

குங்குலியம் சுத்தி:

குங்குலியம் சுத்திபண்ணும்படி வேப்பம் பட்டை கண்டங்கத்திரிவேர் பேய்ப்புடல் ஆடாதோடையிலை ஒவ்வொன்று பலங்கூட்டி இது எட்டுப்படி தண்ணீரில் போட்டு இரண்டுபடியாகக் காச்சி மட்டித்து ஒரு பானை யில் விட்டு வண்டு கட்டி அதின் பேரில் குங்குலியமிட்டு எரியிட மெழுகு பதமானால் இறக்கி அந்த நீரிலே கழுவி எடுத்து வைக்கச்சுத்தியாம். இது பிரயோகத்துக்காம்

---

## 97. No. 71 அனுபோக வைத்திய அட்டவணை.

ஏடுகள் 135; Lines 1—8 in a Page.

இதில் மாந்தம், கணை, இருமல், கல்லடைப்பு, நாம்புச் சிலந்தி, ரத்தபித்தம், வெட்டை வெள்ளை, பெரும்பாடு, அண்டவாதம், ஈரல்வலி, கிரந்தி, அரையாப்பு முதலிய ரோகங்களுக்கு பலவகையான மருந்துகள் எழுதப்பட்டுள் ளன. இதன் தலைப்பில் 'வைத்தியம் பிள்ளைப்பெருமாள் பிள்ளை குமாரன் தாமோதரம் பிள்ளை கொடுத்த அனு போக அட்டவணைசுவடி' என்றெழுதப்பட்டிருக்கிறது. அச் சிடப்படவில்லை.

Beginning:

மாந்த உண்டை:

சுக்கு திப்பிலி கடுகுரோகணி வட்டத்திருப்பிவேர் கடுக்காய் வகைக்கு பலம் $\frac{1}{2}$ ஆடாதோடைச்சாறு விட்டு அரைத்துக் கடலைப்பிறமாணம் உண்டை பண்ணி அனுபா னங்களிலே கொடுக்கவு மாந்தம் குணமாகும் அனுபா னமாவது புளிப்பு மாந்தத்துக்கு விருகநிடை 1 கருக்கிச்

சாம்பலாக்கி அதில் விருகநிடை 1 ஓமம் கூடப்போட்டுக் கருக வறுத்து வெதுப்படக்கி பேய் மிரட்டி இரண்டும் விருகநிடை 2. வீதம் கூடப்போட்டு வதக்கி, ½ படி தண்ணீர் விட்டு கால் சேராகக்காச்சி 2 வேளைக்கு, வேளைக்கு அரைக்கால் சேர் கிழாயத்தில் ஒரு மாத்திரை உறைத்து தேன்குத்திப் போட்ட மூன்று காளையில் எப்பேர்ப்பட்ட புளிப்பு மாந்தமும் சொஸ்த மாகும்.

அரோசிகத்துக்கு மருந்து:

பருத்திக் கொட்டை வறுத்தத தோல் போக்கின பருப்புபடி. அரைக்கால் நெற் பொரி படி. வ. ஏலம் பலம் 1. சுக்கு பலம் ½ திப்பிலி பலம் வ இவையெல்லாமிடித்துச் சூரணம் பண்ணி வெள்ளைச் சர்க்கரை சரிகூட்டி வைத்துக் கொண்டு இரண்டுநேரமு முள்ளங்கை கொண்டது சாப்பிடவும். இதுக்குத் தீரு வியாதி அரோசிகம் விக்கல் வாந்தி தீரும் கபஹாரம் கைகண்டது.

End:

அஷ்ட கிரந்திக்கு:

சீனம் விருகநிடை 5 பூரம் விருகநிடை 3 ரச செந்தூரம் விருகநிடை 2 லிங்கம் விருகநிடை 1 சீனம் காண்டியிற் போட்டு அனல் பிடித்து உருகுகிற வேளையில் இந்த மூன்று சரக்கும் பொடி பண்ணிப் போடவும்.

---

## 98. No. 72 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 244; Lines 3—5 in a Page.

இதில் பலவகைப்பட்ட புண், புரைகள், சூலைக்கட்டு, சொரி, சிறங்கு, தேமல், கிரந்தி, குஷ்டம் கண்டமாலை, செவ்வாப்பு, படுவன், துன்மாம்சம் முதலிய நோய்களுக்கு மருந்துகள் சொல்லப்பட்டுள்ளன, அச்சிடப்படவில்லை.

**Beginning**

ஒட்டிய புண்ணுக்கு உண்டை:

இரதம் பணவிடை க. திப்பிலி பணவிடை க. துருசு பணவிடை க. பாஷாணம் பணவிடை க. கடுக்காய் 6. மருதாணியிலை நல்ல வெல்லம் வெற்றிலைச் சாறு வார்த்து ரசமுறிச்சு உண்டைகட்டி வெல்லத்திலே உருட்டி விழுங்கவும். இரண்டு நேரமும் நாலு உருண்டை விழுங்கவும். கார்ப்பு புளிப்பு தவிரவும்.

வேறு இதுவுமது:

குறிஞ்சாவேர் தூதுவளைவேர் அசமதாகம் குப்பைமேனிச்சாறு வார்த்து ரசமுறித்து உண்டை கட்டி எருமை வெண்ணெயில் இரண்டு நேரமும் விழுங்கவும் கார்ப்புப் புளிப்பும் தவிரவும்.

சொறி தேமலுக்கு;

வெங்காரம் நெல்லிக்காய் கந்தகம் நாயுருவிவேர் இலைக்கள்ளிச் சாறு வார்த்தரைத்துப் பூசக் குணமாம்.

புரை விழுந்த புண்ணுக்கு:

சித்திரமூல மரைத்து சர்க்கரையுடன் கலந்து பிசைந்து அடை தட்டி நல்லெண்ணெயிற் போட்டு பொன்னிறமாய் எரித்துப் புரையிலே எண்ணெய் விடவும் தீரும் புண்ணுப்புரைகளெல்லாம்.

End:

அழிஞ்சிவேர் எலுமிச்சம்பழச் சாற்றில் அரைத்துத் தடவத்தீரும்.

வேறு:

மாதளைச் சமூலமும் நறுக்கிக் காயப்போட்டு வெள்ளையாளி நறுக்கிச் சமூலமும் காயப்போட்டு இது இரண்டும்

சமணுகப் பாரனையில் அடைத்து பூமி புடந் தயில பிறக்கவும் அரைப்பணவிடை தின்னவும் தண்டில் நடவவும்.

---

## 99. No. 73 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 437; Lines 5—6 in a Page.

இதில் குன்மம், சுரம், சூலை, பிறவிச்சு, இருமல், ஈளை, பிளவை, க்ஷயம், பாண்டு, காசம், மந்தார காசம், காமாலை, சோகை, மூலம், பிரமியம் நீரிழிவு, பவித்திரம், மூத்திர கிருச்சம், கண்ணோய், பல்நோய், எலிகடி, இரைப்பு, மகோதரம், முதலியநோய்களின் லட்சணமும் அவற்றிற்கு மருந்துகளும் அனுபோகமுறையாக கூறப்பட்டுள்ளன. செய்யுளும் வசனமும் கலந்தெழுதப் பட்டிருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

Beginning :

கண்ணுக்கு:

பீத ரோகணி பச்சைகற்பூரம் துத்தம்
பெருமைதிப்பிலியு மிளகுங் கூட்டி
சாதி நெல்லிக்காய்ச்சாறு வார்த்தரைக்கச்
சத்தியிடும் திமிர்ப்படலங்கள் தீரும்
வேதனை யோடத்திக் கோபாரகத்
திராவிழி கமலம் போலம்
கோது பில்லம்பூ மாறும் றாறு
யோசனை தெரியுங் கோதையரே.

கிரந்திக்கு:

சடுகட்டில் தகனம்பண்ணின எலும்பும் காசுக்கட்டியும் இது ரண்டும் சரிசமன் எடுத்துக் கறைபற்றின மண்வெட்டியிலே போட்டு விளக்கெண்ணெய் விட்டுச் சங்கு கொண்டு

உறைச்சு வழிச்சு வைச்சுக் கொண்டு புண்ணளவுக்குச் சீலை கிழித்துத் தடவிப்போட்டு வாச்சிராம் கண்டது.

சத்தி குன்மம் 18 க்கும்:

ஒரு தேங்காய் கொண்டுவந்து கண்திறந்து தண்ணீர் ஊத்திப்போட்டு உழக்கு எருக்கம்பால் கறந்து தேங்காயில வைத்துக் கண்ணு மடைத்து எரு அடுக்கில் ஓடு கருகச் சுட்டு அரைச்சு ஒரு பாக்களவு தின்னப் பதினெட்டுக் குன்மமும் பொருமலு நிற்கும் கைகண்டது.

**End:**

முந்து கெர்ப்ப மிலாதுக்கும் விப்புருதிதனக்கும்
முத்தெருக்கஞ் செவியதனைக் குறுகத்தண்டுலர்த்தி
அந்தமுடனிடித்த மருந்துடனே குறுவை நெல் மா
வொக்கச் சேர்த்தருந்த மலட்டுப் புழுப்போம் பிள்
ளையுண்டாம்
இந்த விலை நல்லெண்ணெய் தனில் வருத்துக் கட்ட
இயங்கு கண்ட மாலைதுடை வாழை யரையாப்பு
வந்த மூலக்குத்துக்கும் கட்டவே குணமாம்
மானனி சேர் வேலரத்தை மாட்டிய கண் மயிலே.

Colophon:

சகாப்தம் 1722 இரவுத்திரிவரு மார்கழிமீ 21உ சுக்கிரவாரமும் திரிதிகையும் பூசநட்சத்திரமும் கூடியசுபதினத்தில் ராசமானிய ராசஸ்ரீ சரபோசி மகாராசா சாயபு அவர்கள் ஆக்ஞாபிச்ச பிரகாரம் கலாசிக் கணக்கு வெங்கடேசம் பிள்ளை குமாரன் சுப்பராயன் வைத்திய சாஸ்திரம் அட்டவணை எழுதி முகிந்தது முற்றும் குருவேதுணை.

குறிப்பு:

மருந்து விவர அட்டவணை ஏடுகள் 22. முன்னே கோக்கப்பட்டுள்ளன.

## 100. No. 74 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 370; Lines 4—5 in a Page.

இதில், சோகை, பாண்டு, காமாலை, குன்மம், மூலம், பவுத்திரம், உளமாந்தை, குட்டம், க்ஷயம், முதலிய நோய்களுக்கு மருந்துகள் கூறப்பட்டுள்ளன. அச்சிலில்லை. இடையிடையே சிதைந்துள்ளது.

Beginning:

பாண்டு ரோகத்துக்கு கிஞ்சாதி லேகியம்:

புளியிலை பலம் 100. துருப்பிடித்த இரும்பு பலம் 50. தண்ணீர் படி 20. கூடவிட்டுக் கஷாயம் காய்ச்சி யிரண்டு படி கஷாயமாக்கிக் கொண்டு பழ வெல்லம் பலம் 50. இஞ்சி மேற் புறணி வாங்கித் துண்டு துண்டாய் நறுக்கினது பலம் 16. இதுவுங் கூடப்போடுப் பாகாய்க்காச்சிக்கொண்டு இதில் சுக்குப் பலம் 2. திப்பிலி பலம் 2. மிளகு பலம் 2. சீரகம் 2. கருஞ்சீரகம் பலம் 2. இவை பொடிபண்ணி வடிகட்டிக் கொண்டு லோகம் பலம் க. மண்டூரம் பலம் க. இவையுங் கூடச்சேர்த்து மூன் பாகிலே கலந்து அரைப்படி தேன் விட்டு லேகியம் செய்து வைத்துக்கொண்டு அந்தி சந்தி பாப்பிடவுந்தீரும் வியாதி பாண்டு காமாலை தீரும் இதுக்குப் பத்தியம் இறைச்சி புளிப்பு கடுகு எண்ணெய் குருத்துவமான கறிகள் ஆகாது. குருத்துவமான கறியாவது வாதத்தை யுண்டாக்கிற கறிகள்.

End

வெண்குட்டத்துக்கு:

தலைவிரிச்சான் சமூலம் கொண்டுவந்து சூரியப் புடம் பண்ணி நல்ல நாள் கேட்டு குணினீர் (குறுணி நீர்) காழித் தண்ணீராகக் காச்சி வேது பிடிக்கவும் குணமாம்.

---

## 101. No. 76 வைத்திய அட்டவணை.

ஏடுகள். 306; Lines 5 in a Page.

இதில் நாடி நிதானம் சரக்கு சுத்தி நானாவிதரோகங்களுக்கு செந்தூரம் பற்பம் கிருதம் நெய் குளிகை எண்ணெய் தயிலம் குடிநீர் வடகம் சூரணம் லேகியம் முதலியவைகள் கூறப்பட்டுள்ளன. வீரபத்திர மந்திரம் பத்திரகாளி மந்திரம் மோகினிமந்திரம் வயிரவமந்திரம் தன்கட்டுமந்திரம முதலியனவும் எழுதப்பட்டிருக்கின்றன. 55 முதல் ஏட்டிலக்கம் போடப்பட்டிருக்கிறது. அச்சிடப்படவில்லை

Beginning:

இரதம் சுத்தி பண்ணும்படி:

இரதம் பலம் குறையாமல் கல்வத்திட்டு மஞ்சள் பொடியிலும் ஓட்டடையிலும் மும்மூன்று நாழிகை. ஒவ்வொன்றிலே தனித்தனியே மத்திச்சு ஊதிப்போடவும். அதன் பிறகு கற்றாழை நீர் சந்தனக் குழம்பு செம்பரத்தம்பூ வெற்றிலைச் சாறு பழுபாகல் கிழங்குச்சாறு நிலப்பனை கிழங்குச் சாறு அழிஞ்சிச் சாறு அம்மன் பச்சரிசிச் சாறு கையாந்தகரைச்சாறு சாரணையிலைச்சாறு பலாஷம் பட்டைக் கஷாயம் கொன்றைப்பட்டைக்கஷாயம் இந்த வகையிலே ஒன்றிலே மும் மூன்று நாழிகை மத்திக்க சுத்தியாம் பிறகு சகல யோகத்துக்கும் கூட்டிக்கொள்ளவும்.

விஷசுரகுணம்:

நடுக்கலும் வேர்க்கையும் காச்சலுமுண்டாயிருக்கும் என்றறியும்.

குடிநீர்:

தசமூலம், பெருவாகை, பெருங்குமிழ், முன்னை, பாதிரி வில்வம். சிறுவழுதலை, கண்டங்கத்திரி, நெருஞ்சி இதுவேர்

கள், சிற்றாமல்லி. பேராமல்லி மூலம், சுக்கு இத்துடன் கோஷ்டம் திரிகடுகு திப்பிலி திப்பிலிமூலம் கூட்டிக் குடுக்கவும்.

End:

குப்பைமேனிவேர் இரண்டு வேரைப்பிடுங்கி மூசுறுகூட்டுக்குள்ளே வைத்தால் ஒன்றைப்புறத்திலே தள்ளி ஒன்றை உள்ளே வைத்துக் கொள்ளும் புறமே தள்ளின வேரையெடுத்துக் குளிசமாடி முன்னிறப்பில் வைக்க முறியும்.

Colophon :

சகாப்தம் 1722 க்கு ரவுத்திரிஹூ தைமீ 30உ சோமவாரமும் திதி :யேகாதசியும் மூல நட்சத்திரமும் கூடின சுபதினத்தில் ராசமானிய ராசஸ்ரீ சரபோசிமகாராசா சாயபு அவர்கள் ஆக்ஞா பிச்சபடிக்கு துபாசி கிஷ்ணப்ப நாயக்கர் குமாரன் ரெங்கய்யன் வைத்திய வாகடம் அட்டணை எழுதி முகிந்தது முற்றும்.

குறிப்பு:

மருந்து விவர அட்டவணை எழுதிய ஏடுகள் முன்னே சேர்க்கப்பட்டுள்ளன.

---

## 102. No. 75 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 261; Lines 2—6 in a Page.

இதில் பற்பங்கள் செந்தூரங்கள் எண்ணெய் லேகியம் சூரணம் மாத்திரைகளும் குன்மம் சுரம் சன்னி பலவிதமான காப்பான் பிரமியம் நீரிழிவு பிளவை பவித்திரம் சூலை காசம் பாண்டு காமாலை குமாகண்டன் மூலம் கிராணி முதலிய நோய்களுக்கு மருந்துகளும் கூறப்பட்டுள்ளன. அச்சிடப்படவில்லை.

Beginning :

கண்டங்கத்திரி சமூலமு மரைத்து குகைபண்ணி காய விட்டு அதில் ரச மிருவது விராகநிடை விட்டு ஓடுபோட்டு மூடி சீலைமண் செய்து காயவச்சு பிறகு செங்கல் பரல் 2. உப்பு இரு நாழி யிடிச்சு கூடக்கலந்து சட்டியில் கீழு மேலு மிட்டு நடுவே குகையை வச்சுமூடி சீலை மண் செய்து மூன்று நாளாறுபொழுது எரியிட்டு எடுத்துக் கொள்ளவும்.

மூக்கு நீர்ப் பாய்ச்சலுக்கு:

கடுக்காய் நெல்லி தான்றிக்காய் கனக மிளகு வேர்க்கொம்பு
அடுக்கா ரோடிந்துப்பு அழகா யொவ்வோரிடை கூட்டி
முடுக்கா யரைத்துத் தேனிற் குழைத்து தின் பீராய்
நடுக்காயக்கண தினவு நயனவாதந் தலையிடிக
ளடுக்காயிருந்த சேத்துமமுமகல வோடுங் கண்டாயே.

மலட்டுப் புழுவுக்கு

ஆடுதின்னாப்பாளை விரைமுள்ளிக்காயளவு அரைத்து
வெண்ணெய் சரிகூட்டித்தூரமான நாள்முதல்
மூன்றுநாளுங் கொடுக்கவும் பூச்சிவிழுந்துபோகும்

End:

பயித்தியவாய்வு உப்பிசகுன்மம் மூலவாயு பாண்டு சங்கிரா
ணி மேகவாயுக்கு

அசமதாகம் வசம்பு வில்வப்பழம் கொடுவேலிவேர்
பெருங்காயம் அதிவிடயம் சதகுப்பை வட்டத்திருப்பி
செவியம் கடுகு ரோகணி திப்பிலிமூலம் எவச்சாரம்
குடசப்பாலைவிதை மஞ்சலவணம் பேய்ப்புடல் திரி
கடுகு திரிபலை தண்ணீர் விட்டான்கிழங்கு இதுசூரணம்
பண்ணி இதுசரியிடை விளக்கெண்ணெய் விட்டு
வெயிலில் வைக்கவும். இதில் இலந்தைக் கொட்டைப்

பிரமாணங்காலமே வெந்நீரில் குடிக்கவும் அக்கிக்கு குளிர்ந்த தண்ணீர் குடுக்கவும். இந்த வியாதிகளெல்லாந் தீரும்.

---

## 103. No. 77 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 240; Lines 4—5 in a Page.

இதில் தைலம் சரக்கு சுத்தி பற்பம் செந்தூரம் மாத்திரை குளிகை வடகம் நசியம் புகை அஞ்சனம் முதலியவற்றின் முறைகளும் சுரம் பாம்பு விஷம் தேள் விஷம் எலிகடி பேய் நாய் கடிகளுக்கு மருந்தும் விநோதமுறைகளும் கூறப்பட்டுள்ளன. இவைகளுக்கு விவரம் எழுதிய பத்து ஏடுகள் முன்னே சேர்க்கப்பட்டிருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

Beginning :

பிருங்காமலகத்தயிலம் நேத்திர ரோகத்துக்கு:

கையாந்தகரைச்சாறு படி க பொன்னாங்கண்ணிச்சாறு படி க. வாசனைப்புல் சாறுபடி க. நெல்லிக்காய்ச்சாறுபடி க. நன்னாறிச்சாறுபடி க. இனிக்கற்கத்திரவியம். அதிமதுரம் பலம் 1. சந்தனம் சேர் க. சேங்கொட்டை பலம் 1. கடுகுரோகணி விராகநிடை 2. சிற்றரத்தை பலம் 1. இலாமிச்சாம்வேர் சேர் 1. நல்லெண்ணெய் படி 1. பால் படி 2. இவை யெல்லா மெண்ணெயும் பச்சிலைச் சாறுங் கூட விட்டு பாகமாய் காய்ச்சுகிற போது இந்த கற்கத்திரவியங்கள் சூரணஞ் செய்து எண்ணெய் பக்குவத்துக்கு வருகிறபோது சூரணத்தை யெண்ணெயிலே போட்டுப் பதமாயிறக்கிக் கொள்ளுகிறது. இந்தத் தயிலம் தலைமுழுகுகிறது. சிரரோகத்துக்கு நசியம் செய்கிறது. இதனாலே தீருகிறவியாதிகள் சிரரோகம் நேத்திர ரோகம் காது ரோகம் நீலகாசம் பித்த காசம் இவைமுதலான ரோகங்கள் தீரும்.

நேத்திர ரோகத்துக்கு சந்திரப்பிரபாவதி

மாத்திரை:

எள்ளுப்பூ 80. திப்பிலி 60. சாதிப்பூ மொட்டு 50. மிளகு 16. இவைதண்ணீர் விட்டரைத்து மாத்திரை செய்துலர்த்தி தண்ணீரிலே யுரைத்துப் போட்டால் நேத்திரரோகங்கள் தீரும்.

End:

சலதம்பனம்

குடியொட்டியிலைச்சாறு தோலிலேயூட்டித் தண்ணீரில் போட சலஸ்தம்பனம்.

---

## 104. No. 78 வைத்திய அட்டவணை

ஏடுகள் 280; Lines 2—6 in a Page.

இதில் சுரலட்சணமும் அவைகளுக்கு பலவிதமான மருந்துகளும் அட்டவணையாக எழுதப்பட்டிருக்கின்றன அச்சிடப்படவில்லை இடையிடை சிதைந்துள்ளது.

Beginning:

பித்தசுரத்துக்கு ஆனந்த வயிரவன்

சாதிலிங்கம், நாவி, மிளகு, வெங்காரம், திப்பிலி இவை ஓரொன்று கழஞ்சி எலுமிச்சம்பழச்சாற்றில் அரைத்துக் குன்றியளவு உண்டைபண்ணி கொத்தமல்லி சுக்கு காஞ்சநீரிலிடவாத சுரந்தீரும்.

சன்னிவாத சுரத்துக்கு.

குருவிச்சம்வேர் முள்ளிவேர் தூதுவளைவேர் முக்காவேளைவேர் பொன்முசுட்டைவேர் நிலவேம்பு கடுகுரோகணி சிறுதேக்கு சுக்கு மிளகு திப்பிலி இவைபதினொன்றும் குடிநீர்வைத்துக் குடுக்கவும் கைகண்டது.

வாதசிலேட்டும சுரலட்சணம்

முகமது வெளுக்குமெய்நோம் மொழிவரக் குரலும் நோகும்
பகைபல்லிலுதிரம்பாயும் பதறிய விருமலுண்டாம்
தகவுடனுரத்தில் சற்றேதயங்கிய நோவுண்டாகும்
வகையுப்பு சமுமுண்டாகும் வாதசேற்று மங்கள்தானே.

End :

விஷம சீதசுரத்துக்குக் கஷாயம்

கொடிவேலி பேராமுட்டி சிற்றாமுட்டி பொன்முசுட்டை ஈசுரவேர் சுக்கு நன்னாரிவேர் துளசி வேலிமுாண்டி இவை சமபாகம்கஷாயம் வைத்துக் கொடுக்க விஷமசீத சுரந்தீரும்.

இதுவுமது: நாரத்தை இலை சுக்கு துளசி இலந்தையிலை பேய்ப்புடல் கண்டங்கத்திரி சீந்தில்கொடி பற்பாடகம் விஷ்ணுகாந்தை சீரகம் இவைகஷாயம் வைத்து மிளகு சர்க்கரையும் மேன்பொடி பொட்டுக் குடிக்க சீதசுரம் விஷமசுரம் தீரும்.

இன்னமொன்று கொடிவேலி வெள்ளுள்ளி பொன்முசுட்டை பேய்ப்புடல் வேம்பீர்க்கு பற்பாடகம் செவ்வியம் சுக்கு இவை சமபாகம் செய்து எட்டி லொன்றாய்க் காய்ச்சிக்கொடுக்க விஷமசுரம் தீரும்.

---

## 105. No. 79. வைத்திய அட்டவணை

ஏடுகள் 313; Lines 2—5 in a Page.

இதில் பிரமியம் குஷ்டம் கிராணி பித்தம்காற்பதூ அரையாப்பு மூலக்கிராணி குழந்தைகளுக் குண்டாகும் நோய்கள் முதலிய வியாதிகளுக்கெல்லாம் அட்டவணையாகப் பலவிதமான மருந்துகள் எழுதப்பட்டுள்ளன. மாட்டு

வைத்தியமும் எழுதப் பட்டிருக்கிறது. இவ்வட்டவணையி யிலுள்ளவற்றிற்கு விவரம் எழுதிய ஒன்பது ஏடுகள் முதலில் சேர்க்கப்பட்டுள்ளன.

Beginning:

எல்லாப்பிரமியத்துக்கும்:

அத்திவேரும் கிளுவைவேரும் புளியம்வேரும் ஆவாரைவேரும் தூதுவளைவேரும் இவை யரைத்து கருஞ்சீரகம வெல்லம் பசுவின் நெய் பசுவின்பாலில் சாரித்து மூன்று நாள் குடுக்கவும் கைகண்டது.

வேறு:

எருமைத் தயிர் ஒருபடி ஈரவெங்காயம் ஒருசிரங்கையும் சிறுக அரிஞ்சிக் கொண்டு நற்சீரகம் சற்றேஅரை வறுப்பு வறுத்து ஆழாக்கு மாத்திரம் பொடி செய்து தயிருடனே சாரித்து தின்னவும். இப்படி மூன்று நாள் தின்னக் கொள்ளவும்.

மலட்டுப் பூச்சி விழ மருந்து:

ஆண்வசம்பும் வெள்ளைப் பூண்டும் வெங்காயம் இது மூன்றும் கொட்டைப்பாக்களவு அரைத்து தும்பைச்சாறு விட்டுக்கலக்கி மாதவிடாய் வந்த மூன்று நாளும் குடிக்கவும் மலட்டுப்பூச்சி செத்துப்போம் பிள்ளையுண்டாம்.

**End:**

மேகவாய்வு சூலைக்கு:

பட்டையே வெட்டதாகும் பகர்கந்தகம் நாலாம்
சட்டமாம் அசுவை நாலு தளர்கொடு வெவி ரெண்டு
மட்டமாய்க் கூட்டி மருவி சர்க்கரையிலுண்ண
நட்டமாம் மேகசூலை நயந்த பண தீருமே.

---

## 106. No. 80 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 197; Lines 4—5 in a Page.

இதில் குன்ம ரோகங்களுக்கு பலவிதமான மருந்துகள் எழுதப்பட்டிருக்கின்றன அச்சிடப்படவில்லை.

Beginning :

வச்சிரவல்லி அரிதகி லேகியம்

குன்மம்:

பிரண்டை புளிநாரைக் கிழங்கு மாலக்கிழங்கு கருணைக் கிழங்கு காட்டுக் கருணைக்கிழங்கு நாயுருவிவேர் இவை வகைக்கு பலம் 10. கடுக்காய் 100. நாலு மரக்கால் சலம் விட்டு எட்டி லொன்றாகக் காச்சி அதன்பிறகு கடுக்காயெடுத் துலர்த்தி அந்தகஷாயத்தில் 30 பலம் வெல்லம் போட்டு பாகுகாய்ச்சி இலவங்கப்பட்டை இலவங்கப்பத்திரி ஏலம் சிறு நாகப்பூ சுக்கு திப்பிலி திலப்பனங்கிழங்கு வாய்விளங்கம் சீரகம் கருஞ்சீரகம் ஓமம் சதகுப்பை வெட்பாலைப் பட்டை கோஷ்டம்.

தேன் பலம் 15. நல்லெண்ணெய் பலம் 4. கூடவிட்டுக் கிண்டி வைத்துக் கொண்டு இரண்டு விராகனிடை சாப்பிட மூலம் குன்மம் வயிற்றுக்கட்டி சூலை பாண்டு சோகை பவுத்திரம தீரும்.

End :

அஷ்ட குன்மம் வயிற்று வியாதிக்கு குலாந்தகன்:

இரசம் கெந்தகம் அரிதாரம் நாவி செம்புப் பொடி சுக்கு மிளகு திப்பிலி ஒருவிராகனிடை சுத்திபண்ணின நேர்வாளப்பருப்பு மூன்று விராகனிடை கூட்டிக் கையாந்தகரைச்சாறு வார்த்து மூன்று சாமம் அரைத்து குன்றிப் பிர

மாணம் உண்டை பண்ணி வைத்துக்கொண்டு இஞ்சிச்சாற்றில் நொச்சிக்கஷாயத்தில் கொடுக்கவும்.

---

## 107. No. 81 வைத்திய அட்டவணை

ஏடுகள் 248; Lines 2—5 in a Page.

இதில், நேத்திரரோகங்களுக்குப் பலவிதமான மருந்துகள் சொல்லப் பட்டுள்ளன. அச்சிடப்படவில்லை.

**Beginning**

நேத்திரரோகம் பல்லசைவுக்கு பிருங்காமலத்தயிலம்

நெல்லிக்காய்ச்சாறு படி 2 எண்ணெய் படி 1 அதிமதுரம் பலம் 1 பசுவின்பால் படி 4 இவைஎண்ணெயிலிட்டு தயிலபக்குவமாயெரித்துக் கொள்ளுகிறது. இதனாலே தீரும் வியாதிகள் நேத்திரரோகங்கள் பல்லசைவுகள் தீரும்.

கண்ணுக்குக்குழம்பு

சவுக்காரம் துருசு மடல்துத்தம் இவை ஒரொன்று பணவிடை சற்றே வெதுப்பித் தண்ணீர்விட்டரைத்து குழம்பாக்கி சிமிழிலடைத்து வைத்துக்கொண்டு கண்ணிலிடவும். தீரும்வியாதி நீல்காசம்படலம் தண்ணீர்குத்தி விழுகிறது பூப்பட்டமாலைக்கண் வெள்ளெழுத்து புகச்சல் இவையெல்லாம் தீரும் கைகண்டது

இழிகண் ஆணிபடலம் தீர

வெண்பா

> நெய்யாணி தேன்படல நீலிகுமரிக்கு
> கையாந்தகரையிருள் கடியும்—வெய்யவே
> போமே முடமயிரும் புண்ணுக்காளி
> விரும்பியிடு வெள்ளைாற்றின் வேர்.

என்றது வெள்ளை நந்தியாவட்டத்தின் வேர் நெய்யிலு ரைச்சிட ஆணிபறிவும் தேனிலிடப்படலம் போம் நீலியிலைச் சாற்றிலிட முடமயிர்போம் அரளிப்பாலிலிட இழிகண் ணோய் தீரும் என்றவாறு.

இதுவும் கண்ணுக்கு

உண்டைக்கற்பூரங் கூட்டியிழைத்திடவும்.

---

## 108. No. 82 வைத்திய அட்டவணை

ஏடுகள் 194 ; Lines 4—5 in a Page.

இதில் வாதரோகங்களுக்குப் பலவிதமான மருந்துகள் எழுதப்பட்டிருக்கின்றன. இது அச்சிடப்படவில்லை

வாதத்துக்கு:

**Beginning :**

நத்தைச்சூரிவேர் முற்றின வேர் கொண்டு வந்து குறுக நறுக்கி ஒருபடி விளக்கெண்ணெயில் வெள்ளைப் பூண்டு பலம் வ. வசம்பு பலம் முக்கால். இவைகளையும் தோலோடே நறுக்கிப் போட்டுப் பொன்னிற மாகக்காச் சியிறக்கவும். கற்கத்தோடு வைக்கவும். இதற்குத்தீரும் வியாதிபாதத்தின்மேல் வீக்கத்துக்கு தோச்சு உடம்புக் குந் தடவி ஸ்நானம் பண்ணக் குணமாம்.

80. வாதத்துக்கும்:

இதில், நல்லெண்ணெய் இலுப்பெண்ணெய் வேப் பெண்ணெய் புங்கெண்ணெய் தேங்காய்ப்பால் குங்கிலியப் பொடி ஒக்கச்சேர்த்து இவை மூன்று நாள் பதத்தில் வடித்து மேலும்பூச வாதம் எண்பதும் தீருமென்றிமை யோர் சொன்னார். இது கைகண்டது அவுஷதம்.

End:

பித்தவாதத்துக்கு:

இரண்டு கோழிமுட்டை ஊற்றி அவரைவிதை உப்பு மிளகு கூட்டிப் பொடி செய்து அந்த முட்டையுடனே கூட்டி நல்லெண்ணெய் வார்த்துச் சுட்டுத்தின்னவும்.

---

## 109. NO. 83 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 211; Lines 4—5 in a Page.

இதில், மூத்திரரோகங்கள் கல்லடைப்பு முதலிய ரோகங்களுக்குச் சிறந்த அநுபோக முறைகள் எழுதப்பட்டிருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

Beginning:

மூத்திரப்பாளத்துக்கு கல்லெரிப்புக்கு:

நெருஞ்சி வேர் பாலில்குடிக்கவும். பசிரி நெய்யிற் குடிக்க. நாயுருவிவேர் பாலில்துவைத்து வெண்ணெய் விழுங்கி மோர் குடிக்க மாறும். செப்பு நெருஞ்சிவேர் அது மதுரமும் பாலிற் குடிக்க மாறும். கல்லெரிப்புக்கு மணி வெங்காரம் ஒரு பணவிடையும் அரைத்துச் செவ்விளநீரிற் கரைத்துக் குடிக்கவும்.

நீரடைப்புக்கும் கல்லடைப்புக்கு மருந்து:

பணவி சமூலமும் பொன்னாங்காணி சமூலமும் நீர் முள்ளி இது மூன்றும் மூன்றுபிடி கொண்டுவந்து எலுமிச் சங்காயளவு அரைத்து நல்லெண்ணெயில் கொடுக்க விழும். நந்தியாவட்டம் வேர் பாக்குடன் தின்னவும்.

End:

..........சவிறகு போலத்தட்டி முறிச்சு கெந்தி வெடியுப்பு குளிர்தாமரைச் சாறு எலுமிச்சம்பழச்சாறு...........ல்

வார்த்துக் குழப்பி அஞ்சுநாள் சூரியபுடம் வைக்க பற்ப மாம். ஒரு பணவிடை கருப்புக்கட்டி.........பலவியாதியுந் தீரும். பால் தயிர் துவரம் பருப்பு வழுதலைப்பிஞ்சு பாசிப்ப யிறு தூதுவளங்காய்.......ள்ளவும் அக்கினிபல முண்டாம்.

---

## 110. No. 84 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 175; Lines 3—6 in a Page.

இதில், குழந்தைகள் கரப்பான் வீக்கம் நீரிழிவு அரை யாப்பு, மூலரோகம், க்ஷயம், மேகாணம் சன்னி, காமாலை, பெரும்பாடு, குட்டம், எலிகடி முதலிய நோய்களுக்குப் பல வகை மருந்துகளும் மதனகாமேசுவரம் முதலிய தாது விர்த்திலேகியங்களும் தயிலங்களும் பிறவும் அநுபோக முறையாக எழுதப்பட்டுள்ளன. அச்சிடப்படவில்லை.

Beginning:

குழந்தைகள் கரப்பான் வீக்கத்துக்கு குடிநீர்

சிவனார்வேம்பு ஓமம் சதகுப்பை கருஞ்சீரகம் காட்டுச் சீரகம் செங்கத்தாரிப்பட்டை பூதகரப்பான்பட்டை அவுரி வேர் மாமஞ்சள் நன்னாரிவேர் நெருஞ்சிவேர் பூளைவேர் செவியம் திப்பலிமூலம் செப்புநெருஞ்சிவேர் கண்டங்கத்தி ரிவேர் வகைக்கு விராகநிடை 2 இடிச்சுத் தூள்பண்ணி ஒருசட்டியிலூறப்போட்டு அரைப்படி சலம்விட்டு எட்டி லொன்றாய்க் காச்சிக் குடுக்கவும் இப்படி இரண்டு வேளையும் ஏழுநாள் கொடுத்து உப்பில்லாபத்தியம் வச்சுக்குடுக்கவும் இப்படிக் குடுப்பதனால் சகல கரப்பானும் வீக்கமுந்தீரும் குழந்தை கரப்பனுக்குக் குடுக்கிறது. பெருந்தேவி அம்மா ளுக்கு வச்சுக்குடுத்த கிஷாயம்.

புழுவெட்டுக்குமை:

வெங்காரம் பொரித்துக் கலத்தின்மேல் வைச்சக்

கையாந்தகரைச் சாறு விட்டு உலக்கைபூணிஞலே மூன்று நாழிகை யிழைச்சு பிறகு வெண்ணெய் போட்டு சங்கிஞலே அப்படி யிழைச்சு சிமிழில் வைச்சுக் கொண்டு புழு வெட்டாயிருந்த இடத்தில் தடவிஞல் அஞ்சு நாளையில் முளைக்கும்.

**End:**

உன்மாதம் பைத்தியத்துக்கு நசியம்:

உடும்பு பிச்சு கொண்டுவந்து ஒரு காண்டி நல்லெண்ணெயில் எரித்து நசியம் பண்ண உடனே தீரும். அநேக பயித்தியம்.

குறிப்பு:

இவ்வைத்திய அட்டவணைக்கு விபரம் எழுதிய ஏடுகள் 9-ம் அகத்திய ரெத்தினச்சுருக்க அட்டவணை ஏடு 5-ம் கொங்கணர் கற்பவிதி அட்டவணை ஏடு ஒன்றும் இருப்பதோடு ஆயிசுக்கு கிண்ணி சோதனை, மத்தாப்பு செய்முறை, மூலிகைகளின் விஷபாகம் கூறும் வெண்பா 2 வைத்தியம் கோபாலசாமி பிள்ளை ருக்குமணியம்மாளின் திதி விவரம் கண்ட ஏடு 2 அய்யாக்கண்ணுபிள்ளை பிறந்த நாள் குறித்த ஏடு 1-ம் சேர்க்கப்பட்டுள்ளன.

**Colophon:**

சாலிவாகன சகாப்தம் 1746 தாரணுஸு கார்த்திகைமீ 23உ சோமவாரம் காலமே நாழிகை 10-க்கு மகாராசஸ்ரீ மகாராசா சத்திரபதி சாயபு அவர்களுடைய சாஹேபு வித்ததுக்கு வைத்தியம் கோபால பிள்ளை குமாரன் கொட்டியம் மத்தியஸ்தம் அய்யாக்கண்ணுப் பிள்ளை என்னும் அடியவன் பிதாவாகிய கோபால பிள்ளை அவர்களுடைய சுதசத்தாரிஞலே எழுதிவைத்த அவாளுடைய அனுபோக முறையாகிய கைவளைச் செவடியை இந்த மூல

பாடத்தைப்பார்த்து இந்தப்பிரதி எழுதி நிறைவேறி உசுர் நிவேதனம் பண்ணி சாஷ்டாங்க விண்ணப்பம் இந்தப் படிக்கு இந்தச் செவடி எழுதின சுதசததார் நிமித்த கார ணம் மகராச ஸ்ரீ உசிர் சரணாரவிந்த தாசன் கொட்டிய மத்திசத்தம் அய்யாக்கண்ணு பிள்ளை கையெழுத்து வேனும் அனந்தங் கோடி சாஷ்டாங்கம்.

---

## 111. No. 85 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 277; Lines 4—5 in a Page.

இதில், சுரங்களுக்கும் அவை காரணமாகக் காணும் மற்ற ரோகங்களுக்கும் பலவிதமான மருந்துகள் அனுபோக முறையிற் சொல்லப்பட்டிருக்கின்றன. அச்சிடப்படவில்லை இடையிடையே ஏடுகள் முறிந்துள்ளன.

Beginning:

சகல சுரத்துக்கும் மேல் உண்டையிடவும்:

உண்டைவரைக. அரிதாரம் மயில்துத்தம் சங்கு சுட்ட நீறு சமனுகக் கூட்டிச் சூரணம் வெற்றிலைச் சாறு விட்ட ரைத்து உழுந்து மருவாதி குளிகைபண்ணி வெல்லத்து டனே ஒருகுளிகை மூன்று நாளிடத்தீரும்.

சுரத்துக்குக் குளிர் சுரத்துக்கு:

சிறுபுள்ளடிவேர் கடுக்காய் சுக்கு மிளகு கடுகுரோ கணி நேர்வாளம் இரதம் இந்த ஆறுவகையும் வகைக்கு விராகனிடை க. எலுமிச்சம்பழச்சாறு விட்டரைத்து சுண் டைக்காயளவு உண்டைபண்ணி வைத்துக் கொண்டு புளி யுள்ளே வைத்து விழுங்கவும். வெந்நீர் குடிக்கவும். வெந்நீர் கையாடவும்.

தாபசுரத்துக்கு:

நாணல் வேர் சிறுகாஞ்சரிவேர் மூத்தக்காசு பற்பாட

கம் வெட்டி வேர் விலாமிச்சம் வேர் அத்திதிப்பிலி சுக்கு இவை சமன் கொண்டு இடித்துத் தூளாக்கி வைத்துக் கொண்டு வெருகடி தூள் போட்டுக் காச்சிக்குடுக்கவும் பொரிகஞ்சி காச்சிக் குடுக்கத் தாபசுரம் விடும். தண்ணீர்த் தாகம் சுரம் விடும். உள்ளுழலை நிற்கும் கைகண்டது.

End:

நாள்பட்டசுரத்திலே விஷபாகம் வீக்கங்கள் எடுத்தால் எண்ணெய்:

சித்தவரைக்கிழங்கு, அவுரிவேர்ப்பட்டை, வக்கணத்தி வேர்ப்பட்டை, சாரணைவேர், வட்டக்கிலு கிலுப்பைவேர் முடக் கொத்தான் வேர், வேலிப்பருத்தி வேர் ஓரொன்று கழஞ்சி முருக்கிலை செம்முள்ளியிலை இண்டிலை சங்கிலை சிறு வழுதலையிலை தூதுவளையிலை கரிப்பான் செருப்படியிலை ஆடா தொடையிலை நாரத்தையிலை பருத்தியிலை மணித்தக்காளி யிலை வெள்ளறுகு ஊரறுகு ஓரொன்று சாறு நாழி கழுதை யிலத்தி பிழிந்த சாறு உரி, கழுதைப் பால் உழக்கு உள்ளி வராகன் 2 வசம்பு வராகன் 2 கூட்டி மருந்தும் அரைத்துச் சாறுங்கூட்டி நாழி யெண்ணெயி லெரியிட்டு வடித்து உள் ளுங்கொண்டு மேலும் பூச சுரம் விஷபாகம் வீக்கம் தீரும்.

---

## 112. No. 86 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 282; Lines 2—5 in a Page.

இதில், மலட்டு விப்புருதி, மாந்தம், கணம், கிரந்தி கழிச்சல், பிரமியம் அரையாப்பு பித்தபாண்டு விஷபாண்டு காமாலை பாரிசவாயுவு சோகை குட்டம் கருப்பவிப்புருதி மேகவெட்டை கண்டமாலை சன்னி பெரும்பாடு குழந்தை நோய் முதலிய பலவகைப்பட்ட வியாதிகளுக்கு மருந்துகள்

அனுபோகமுறையில் சொல்லப்பட்டுள்ளன. இதில் இடை யிடையே ஏடுகள் சிதைந்திருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

Beginning;

மலட்டு விப்புருதிக்கு மருந்து

கொழிஞ்சி வேர்ப்பட்டை பலம் க கருஞ்சீரகம் பலம் க வேம்பாடம்வேர் பலம் க இதையிடித்து வேப்பெண்ணை யில் காச்சி மாலைநேரத்தில் பதமாயிறக்கி வடித்துப்பதினை ஞ்சு நாள்கொள்ளவும் பூச்சிவிழும் கெர்ப்பந்தரிக்கும் இதற் குப்பத்தியம் உப்புப்புளி தவிரவும்.

கண்டமாலைக்கு

கண்டமாலைக்கு தவசி முருங்கையரைத்து மூன்று நாள் போடவும் பிறகு தயிலம் போடப் பேய்ப்பீர்க்கம் விதை படி 2 சித்தாமணக்கம் விதை படி 2 தேத்தாம் விரை படி 2 அழிஞ்சி விதை படி 2 எட்டி விதை படி 2 விளஞ்சிராய் குறுணி இதுசேர ஒரு பாண்டத்திற்போட்டுத் தயிலமிறக்கி எடுத்து நெல்லிக்காய் கெந்தகம் விராகநிடை 3 பொடிசெய் து தயிலத்தில் போட்டுக் கிளறி சீலையில் தோய்த்துப் புண் ணிற் போடக் கண்டமாலை தீரும் கைகண்டது.

End:

சுரத்தின்மேல் வீக்கத்துக்கு

வெள்ளாட்டுப்புழுக்கை வெள்ளாட்டுக்கோமியம் விட் டு அரைத்துப்பூச வீக்கம்வாடும். இதுவும் பொடுதலை சமூல மும் நீர்முள்ளி சமூலமுமாவை சமூலமும் பிரமிசமூலமும் வெள்ளைக்காக்காட்டான் சமூலமும் ஆலம் ஈர்க்கு புலிதுடக் கித்தண்டு சிறுவழுதலை சமூலமும் நல்லவேளைத்தண்டு மு ருக்கிலை பாதிரியீர்க்கு பாலுவேர் சுரைத்தண்டு துளசி சமூ லமும் விஷ்ணு காந்தி சமூலம் இது சமன்கொண்டுகுறுக நறுக்கி குறுணிநீரிலிட்டு சுக்கு மேல்தோல்சீவி தட்டிப்

போட்டு மிளகு திப்பிலி உள்ளிமுடிஞ்சி போட்டு உழக் காய்காச்சிக் குடிக்கும்போது முடிந்த மருந்தும் அரைத்துக் கலந்து குடுக்கவும்.

குறிப்பு:

இதன் கடைசியில் வியாதிகளுக்கு எழுதிக்கட்டும் சக்கரங்கள் எழுதிய 6 ஏடுகள் இருக்கின்றன.

---

## 113. No. 87 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 202; Lines 2—5 in a Page.

இதில் பலவகைப்பட்ட வாயுவு ரோகங்களுக்குப் பல விதமான மருந்துகள் அனுபோக முறையாக எழுதப்பட்டிருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

Beginning:

பதினெலுவாய்வுக்குந்தூள்

பச்சைநாபி, செரிவிஷம், மிளகு அக்கரா, சாதிக்காய், திப்பலி, சுக்கு, வெங்காரம், குங்கிலியம், இந்துப்பு, காந்தம், சவுக்காரம், பெருங்காயம், அசமதாகம், சீதளதயிலம், நாகதாது, கெந்தகம், சாதிலிங்கம் ஒரொன்று. 3. ப. நிறையாகக்கூட்டி வறுத்துப்பொடிசெய்து தேனிலிடப்பதினெலு வாயுவுந்தீரும் இது கைகண்டது.

பாரிசவாயுவுக்கு:

வெள்ளுள்ளி உரித்த பல்லு இரண்டு சிரங்கை முளையெடுத்துப் போட்டுப் பொன்னிறமாக வறுத்து உடனே விளக்கெண்ணெய் குத்தி இரண்டு மூன்று கருப்புக் கட்டி பொடி பண்ணிப் போட்டுக் கிண்டி சுடச் சுடத் தின்னவும். இப்படி மூன்று நாள் தின்ன பாரிசவாய்வு தீரும். துவரக் கட்டு மிளகு நீர் வார்த்து அசனம் பண்ணவும் தீரும் கைகண்டது.

End;

வயிற்றுவலி கடுப்பு சீதக்கட்டு இரத்தபிரமியத்துக்கு:

திரிகடுகு கொத்தமல்லி ஓமம் உள்ளி வசம்பு அரைத்துப்பழம்புளி கரைத்து மிளகுநீர் காச்சி மூன்று நாள் அசனத்துடன் கூட்டவும் இரத்த பிரமியத்துக்கு எருமைத் தயிர்வடித்து அதில் ஒரு காசிடை ஊமத்தை யிலைச் சாறு விட்டுக் குடிக்க மாறும்.

---

## 114. No. 88 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 143; Lines 2—5 in a Page.

இதில், வல்லை, பிரமியம், குறைநோய், உடம்பிற் கற்றாழை நாற்றம், எலும்புருக்கி, உழலை, மூர்ச்சை தாகம், வெப்புப்பாவை, அகுவை, கவுசை, கெண்டை, கண்டமாலை, வாய்ப்புண், கெர்ப்பநோய் முதலிய வியாதிகளுக்குப் பலவிதமான மருந்துகளும் அனுபோக முறையில் எழுதப்பட்டிருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

**Beginning**

வல்லைக்குமருந்து

சன்னசாலைக்கடுகு கல்லாய்ந்து அன்றுடகம் சத்து சத்து தின்னக்கரையும். வேறு அழிஞ்சில்வேர் அரைத்து மிளகாணைவேர் சமனுகக்கூட்டிப் பசுவின்பால் வார்த்தரைத்து குன்றிமணிப்பிரமாணம் உண்டைபண்ணி சன்னசாலைக் கடுகு அரைத்துப் பதினேரு உண்டை உருட்டி மூந்தப்பசுவின்பாலில் வார்த்து உழக்குக்குடித்து அழிஞ்சில் வேர் அரைத்த உண்டை ஒன்று தின்னபின்பு கடுகு அரைத்த உண்டையொன்று தின்ன இப்படி பதினேரு உண்டை அழிஞ்சில்வேர் அரைத்த உண்டை பதினொன்றும் மாறி மாறி இருபத்தொரு உண்டையுந்தின்று பின்பு களிப்பாக்குங் கா

சுக்கட்டியும் ஆக நாலாறுதிரம் பாக்கு வெற்றிலை தின்ன முதுகில் இளவெயில்பட இருக்க வார்த்திபண்ணும். பின்பு மிளகுசாறும் சோறும் அசனம் பண்ண இப்படி மூன்று நாள் நித்தம் இருபத்திரண்டு உண்டையுங் கொள்ளவும் வல்லிவியாதி நிற்கும். கடுகு ஒருமண்டலம் தின்னவும் இதுக்குகைப்புப் புளிப்புத்தவிரவும்.

சீதம் விட

கன்று கடுவேருக் கரியமால் தன்தொடையும்
நன்று மிளகுடனே நாகாமும்—என்றரிய
திப்பிலியினோடே திகழுரைத்துக் கொண்டக்கால்
வெப்புடனே சீதம் விடும்.

End

வாய்ப்புண்ணுக்கு

நெய்பலம் 4, திப்பிலிபலம் வ, சுக்குபலம் $\frac{1}{8}$, தேத்தாங்கொட்டை பலம் $\frac{3}{8}$, கருஞ்சீரகம்பலம் $\frac{3}{8}$ ஏலம் பலம் வ, சாதிக்காய்பலம் வ அதிவிடயம் பலம் $\frac{1}{2}$, அதிமதுரம் பலம் வ சிறுநாகப்பூ பலம் $\frac{3}{8}$ அரத்தை பலம் $\frac{3}{8}$, சிற்றரத்தை பலம் $\frac{3}{8}$, கிராம்பு பலம் வ, சக்கரை பலம் வ கோஷ்டம் பலம் $\frac{1}{2}$, முந்திரிகைப்பழம் பலம் $\frac{1}{2}$ சுக்கு பலம் $\frac{1}{2}$, மிளகு பலம் $\frac{1}{2}$, அரைத்துக்கரைத்துப் பதத்தில் வடித்து உள்ளே காண்டிகொள்ளவும்.

இதுவும் வாய்ப்புண்ணுக்கு நொச்சி இலையை மென்று மெயவும்.

---

## 115. No. 89 இரசவாத மருந்துகளின் அட்டவணை.

ஏடுகள் 372; Lines 2—5 in a Page.

இதில், இரச வாதத்திற்குரிய பலவகையான பற்பம்

செந்தூரம் கட்டுவகைகளும் வைத்திய அநுபோகமுறைகளும் சொல்லப்பட்டுள்ளன. சாலங்களும் மந்திரங்களும் காய கற்பமுறைகளும் இருக்கின்றன அச்சிடப்படவில்லை.

Beginning:

அபத்திய குணம்:

கொள்ளுக்காடி கொமட்டிக்காய் கோழிபன்றி செம்மறியும்
பள்ளச் செம்பு வல்லாரைபாலை சுரைக்காய் பூசணிக்காய்
துள்ளப்பருத்த பாகற்காய் சுண்டையவரை பெரும்பயறு
மெள்ளத் தனையுந் தின்பீரே லெல்லா மருந்து மிழந்தீரே.

வாதத் தொழில்:

பூகரேக்குப் பொடியாக்கி வெங்கலப் பொடியுஞ் சமன் கூட்டி நிறுத்துக் குகையிலிட்டு வெங்காரமிட்டு நாகமுருகிற முகத்தில் குத்தி உருக்கத் தாம்பிரமாம். இந்த தாம்பரம் மூனு கூறும் வெள்ளி ஏழு கூறும் கூட்டியுருக்கினால் நாலரைமாத்துக் காணும்.

ரசவலிவு:

பாலைப்பால் பஞ்சிலூட்டி ஒரு குகைபிடித்து அதில் பாலைப்பால் விட்டு அதில் கழுஞ்சு ரசம் விட்டு குகையை வைத்து இருபது நாழிகை கரிபோட்டுருக்கக் குளிகையாம் இந்த குளிகை தப்பயான் கழுஞ்சுக்கு ஒருமாக் குடுத்துப் பார்க்கவென்பது மாற்றும்.

End

இலிங்க செந்தூரம்;

வெடியுப்பு பலம் 2. சட்டிகாயவைத்து சட்டியிலிட்டுத் தீயெரிக்க உருகு மதில் கருங்கம்பிளியை பிச்சுப்போட வெண்ணெய்போலேயாம் அதை ஆரவைத்து அதிற் சீனக்காரம் பலம் $1\frac{1}{2}$ நவச்சாரம்.

## 116. No. 90 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 288; Lines 4—5 in a Page.

இதில், பலவகையான கஷாயம் சுரசம், எண்ணெய், கிருதம், லேகியம், ரசாயனம், சூரண முறைகளும் அவைக ளால்தீரும் வியாதிகளும் சொல்லப்பட்டுள்ளன. அச்சிடப்ப டவில்லை.

Beginning:

மேக ரோகத்துக்கு கஷாயம்:

திரிபலை, மரமஞ்சள், பாதிரிவேர், கோரைக்கிழங்கு, பாவட்டை இவை சமபாகம் கஷாயம் வைத்து மஞ்சள் பொடிபண்ணிப் போட்டுத் தேன்குத்திக் கொடுக்க மேக ரோகந்தீரும்.

மது மேகத்துக்குக் கஷாயம்:

தேற்றும் விதை கைல்விமுல்லி, புரசம்பட்டை, கடுக் காய் இவைகஷாயம் வைத்துச் சாப்பிட மது மேகம் தீரும்.

வாசாதிகிருதம்:

ஆடாதோடையிலை, சீந்திற்கொடி இவையிரண்டும் கஷாயம் வைத்து இறுத்துக்கொண்டு பசுவின் நெய்விட்டுக் காச்சி மூங்கிலுப்பு திப்பிலி அதிமதுரம் இவை பொடிபண் ணிப் போட்டுச் சர்க்கரையுஞ் சேர்த்துச் சாப்பிடத் தீரும் வியாதிகள் பயித்தியரோகம் குட்டங்கள் சயம் காசம் இரத் தபயித்தியம அரோசிகம் தலைமயக்கம் பயித்திய கிராணி பயித்திய குன்மம் மேகரோகம் இவைகள் தீரும் இளைத்த பேர்கள் பெருப்பார்கள்

End:

கெர்ப்பிணிகளுக்கு வந்த வாதத்துக்கு சூரணம்:

சீரகம், திப்பிலி, இரண்டும் பொடிசெய்து தேனிலா

வது வெல்லத்திலாவது உள்ளங்கைக் கொண்டது சாப்பிட்டால் கெர்ப்பிணி வாதம் தீரும்.

---

## 117. No. 91 வைத்திய அட்டவணை

ஏடுகள் 288 Lines 2—5 in a Page.

இதில் கெர்ப்பிணிகளுக்கும் சிறுகுழந்தை களுக்கும உண்டாகும் பலவகையான வியாதிகளுக்குப் பலவிதமான மருந்துகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அச்சிடப்படவில்லை இடையிடையே ஏடுகள் ஒடிந்தும் சிதைந்தும் இருக்கின்றன.

**Beginning:**

பிரசூதத்துக்கு

செம்பை விதையை யரைத்து கொப்பூழிற்றடவவும் ஊமத்தைவேர் தலைகீழாய்க் கட்டித்தூக்கவும் முள்ளிவேர் நாயுருவிவேர் விடத்தேர் இவைமூன்றும் குளிசமாடிப் பெருவிரல் இட்டு இறக்கப் பெறநோக்கும் இந்தக்குளிசம் எண்ணெயில் தோய்த்துச் சிரசிலிருந்து இறக்கித்தடவப் பிரசூதியாம்.

பெண்பிள்ளைகளுக்கு நஞ்சுவிழாமலிருந்தால்

பிள்ளைபெற்ற பெண்டுகளுக்கு நஞ்சுவிழாமலிருந்தால், கருணைசமூலமும் பறித்து முதுகுதண்டிலே இறங்கப்பூச நஞ்சுவிழும், உடனே துடைத்துப்போடவும்.

கணத்துக்கு மருந்து

கடுக்காய் வெந்தயம் நற்சீரகம் கருஞ்சீரகம், கடுகுரோகணி வட்டத்தூத்திவேர் சாரணைவேர் ஈரவெங்காயம் கற்றாழைமடல் பழம்புளி இவைகூட்டி அரைத்து விளக்கெண்ணெய் பிழிந்து வடித்துக்கொண்டு பிள்ளைகளுக்கு வார்க்கவும் இது கைகண்டது பத்தியம் ஒன்றும் ஆகாது

End:

முலைப்பால் குடியாத பிள்ளைக்கு

*சிறுகீரைவேர் முலைப்பாலில் அரைத்து வார்க்க முலை குடிக்கும்.*

---

## 118. No. 92 விஷவைத்திய அட்டவணை.

ஏடுகள் 246; பூர்த்தி Lines 2—5 in a Page.

*இதில் எல்லாவிதமான விஷங்களுக்கும் மருந்துகளும் சிலமந்திரமும் சொல்லப்பட்டிருக்கின்றன. அச்சிடப்படவில்லை.*

Beginning:

*வெள்ளைக்குன்றிமணிவேர் வாயிலடக்கினால் சகலவிஷங்களும் தீரும்.*

பேய்க்கு சன்னிக்கு விஷத்துக்கு

*காயங்கார மரிதாரங் கனிவா யிரத மிந்துப்பு*
*பேயின் பீர்க்கு இலைச்சாறு பேணியரைத்து உண்டை செய்து*
*மாயம்போலவிஷந்தீண்டிவருவார் கண்ணிலிடுவீராய்ப்*
*பேயுந்தீரும் விஷமீனும் பெருத்தசன்னியு மறிந்திடுமே*

எலிகடிரைஇப்புக்கு மருந்து

*வெல்லம் இரண்டுண்டையில் எருக்கம்பால் வார்த்து*
*குழைத்து தேத்தாங் கொட்டையளவு உண்டை*
*பண்ணிகாலமே ஒருஉண்டை தின்னவும். ஏழுநாளில்*
*இரைப்புத்தீரும சீராகுங்கைகண்டது.*

End

நஞ்சுதின்ன பேருக்கு

*செம்பையிலையரைத்துக் காடியில்கரைத்து மஞ்சளுங்*

கொடுக்கவும். பத்தியம் சிறுபயறு கஞ்சி காச்சிக் குடிக்கவும்.

---

## 119. No. 93 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 226; Lines 2—5 in a Page.

இதில் செவிநோய்கள் பீனிசரோகங்கள், பல்லிலுண்டாகும் வியாதிகள், கபாலத்தில் காணும் பிணிகளுக்குப் பலவிதமான மருந்துகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அச்சிடப்படவில்லை. இடையிடை யேடுகள் முறிந்திருக்கின்றன.

செவியடைப்பு தலைநோவு இரைச்சல் சாச்சல்களுக்கு எண்ணெய்.

நொச்சி சாரணை உத்தமதாளி திராய் இவை ஒரொன்று சாறு நாழி கொள்ளவும். முடக்கொத்தான் ஈசுரமூலி கூவிளை சங்கு புங்கு கச்சச் குறுஞ்சா சாரணைவேர் அவுரி உத்தமதாளி குன்றி நத்தைச்சூரி குதிரைவாலி திராய் நிலக்குமிழ் காக்கை நொச்சி கிலுகிலுப்பை இவை ஒரொன்று கழஞ்சு கொண்டு மேல் மருந்து அரத்தை சதகுப்பை தேவதாரம் மஞ்சள் கருஞ்சீரகம் வெளுத்த பிசின் திப்பிலி சுக்கு கடுகுரோகணி மிளகு வெள்வெங்காயம் வசம்பு சாதிக்காய் பெருங் குரும்பை கிராம்பு ஏலம் இலவங்கம் இவை ஒரொன்று கழஞ்சு இவையெல்லாம் அரைத்து இலுப்பை எண்ணெய் நாழி நல்லெண்ணெய் நாழி சிற்று மணக்கெண்ணெய் நாழி புகட்டி................. முழுகி நசியம் பண்ணவும். இதுக்குத் தீரும் வியாதி செவியடைப்பு தலைநோவு இரைச்சல் மந்தம் காச்சல் வாயுந்தீரும் கைகண்டது.

ஒருதலை வலிக்கும் நாசியாலே யிரத்தம் விழுகிறதற்கும்

மஞ்சள் வசம்பு கடுகுரோகணி ஆம் இவை தன்னிலொக்கக் கொண்டு பொடிசெய்து சேலையிலூட்டித் திரித்து

விளக்குக் கொளுந்தி நாசியிற்புகை பிடிக்கவுந் தீரும்.

End :

கபாலவலிக்கு மருந்து:

பூவம்பழமும் பழவரைப்பும் புதிய மிளகு மிந்துப்பு
மாவந்துடங்கு மகத்திப்பா லதுவோ டொக்கப் பொடி
கொண்டு
தாவழுமேப்பால் தனிற்கலக்கித் தப்பா திரண்டு நாசி யிடப்
பாவக்கபால வலிதானும் பசாசு மகன்று போமன்றே.

---

## 120. No. 94 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 251; Lines 2—5 in a Page.

இதில் நீரிழிவு, பிரமியம், மூத்திரக்கிருச்சம், கல்லடைப்பு, முதலிய வியாதிகளுக்குப் பலவகையான மருந்துகள் அநுபோகமுறையில் எழுதப்பட்டுள்ளன. அச்சிடப்படவில்லை.

Beginning :

நீரிழிவுக்கு மருந்து:

ஆவாரம் விதை, ஓதியம்பட்டை, அத்திவிதை பனைவிதை, சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, நவதானியம் இவை யெல்லாம் இளவறுப்பாய் வறுத்து நன்றாய்ச் சூரணம் பண்ணி வெருகடி பிரமாணம் சாப்பிடவும். வாழைக்காய் மொச்சைப்பருப்பு கறி பண்ணி கடுகு வெந்தியம் வகைக்கு மூன்றுவிராகனிடை போட்டுக் கறி பண்ணி சாப்பிடவும்.

நீரிழிவு பிரமேகத்துக்கு மருந்து:

குன்றியிலை, வேலம்பூ, ஆவாரம்பூ, உழுந்து, இது நாலும் சூரணம் பண்ணி பேயன்பழத்திலும் சர்க்கரையி

லும் வெண்ணெயிலும் கூட்டிப் பிசைந்து கொள்ளத்தீரும் கைகண்டது.

பிரமியக் கல்லடைப்புக்கு:

நாயுருவியிலை யொருபிடி ஈரவெங்காயம் ஒருபிடி இரண்டுங் கூட்டி அரிந்து வேகவைத்து அந்தச் சட்டியிற்றானே உழக்குப் பசுவின் நெய்விட்டு வறுத்துத் தின்னவும் நாலு நாள் தின்னவுங் கல்லடைப்புத் தீரும்.

End:

நாகப்பூ புளியம் விதைத்தோல் தக்கோலம கோரோசனை ஓமம் ஒரொன்று ஒரு கழஞ்சு கூட்டிப் பசுவின்பால் விட்டரைத்துக் கலந்து பதத்தில் வடித்து காலமே ஒரு மண்டலங் கொள்ள நாட்பட்ட எலும்புருக்கி காச்சல் இருமல் சயம் நாலுவிதமாய் விழுகிற மேகம் இருபத்தொன்றும் காமாலை பாண்டுரோகம் இதுமுதலான வியாதி யெல்லாம் தீரும். இன்னும் கோவை வேரைப் பசுவின் பால் நாழியி லெட்டு நாள் கொள்ளவும. அசாத்தியமான மேகங்களெல்லாந் தீரும்.

---

## 121. No. 95 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 258; Lines 1—8 in a Page.

இதில் நவரத்னங்களின் சுத்தியும் அவற்றின் பற்பமுறையும் நவலோகங்களின் சுத்தியும் அவற்றின் பற்ப செந்தூரங்களும் வேறு பலவகையான மருந்துகளும் அவற்றால் தீரும் வியாதிகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. இடையிடையே சிதிலமாயிருக்கிறது. அச்சிடப்படவில்லை.

Beginning ;

..................ப்பு வளையலுப்பு இந்துப்பு வெடியுப்பு கெந்தவடியுப்பு நவச்சாரம் சத்தி.........ம் எவச்சாரம்...

.....................டும் வகைக்கு விராகனிடை க. வெங்காரம் துத்தம் கெந்தகம் சவுக்காரம் எள்ளு சுட்டசாம்பல் கரைத்து...............த்துக் காச்சி யெடுத்த உப்பு நாயுருவி சுட்ட சாம்பலில் கரைத்து எடுத்த உப்பு இவை............ வகைக்கு விராகனிடை க. படிக்காரம் சேர் இ, நவச்சாரம் சேர் இ. இவைகளை யெல்லாம் குறுணி.........ணை தண்ணியில் கரைத்து தெளிவிறுத்து அந்தத்தண்ணியிலே ஏழு நாள்...........து..................வைத்து தோண்டியில டைத்து வாலைகட்டித் திராவகம் இறக்கினால் சங்கத்திராவக.............

வெள்ளி பற்பம்:

சுத்திபண்ணின வெள்ளியை யீசலிறகு போலே தட்டி காகநிமிளையைப் பால் வார்த்தரைத்து ஏழுவிசை உலரப்பூசி அகலிலிட்டுச் சீலைமண் செய்து கசபுடம் போடப் பற்மாம். பணவிடை சகல ரோகத்துக்கும் கொடுக்கலாம்.

குஷ்டத்துக்கு குக்கில் ரசாயனம்:

சுத்திபண்ணின குக்கில் சேர் 1 கெந்தகம் சேர் 1 கார்போக அரிசி சேர் 2 இடிச்சு சூரணம்பண்ணி தேனில் மூவிரல் கொண்டதூள்மத்திச்சு சாப்பிடவும் பதினெட்டு வித குட்டம் போம். சமுசயமில்லை.

**End:**

கண்டத்திப்பிலி ரசாயனம்:

கண்டத்திப்பிலி தூள் படி $\frac{1}{4}$ திப்பிலிதூள் படி $\frac{1}{8}$ நெய் பலம் ௬. தண்ணீர் விட்டான் கிழங்குச் சாறு பலம் 8 ..................படி க நெல்லிமுள்ளி கொத்தமல்லி ஏலம் சிறு நாகப்பூ லவங்கப்பட்டை லவங்கப்பத்திரி சுக்கு விலாமிச்சம் மிளகு கோரைக்கிழங்கு கடுக்காய் தான்றிக்காய் நெல்லிமுள்ளி சடாமாஞ்சில் கருங்காலி சீரகம் வகைக்கு

விராகனிடை 2 இடிச்சு சூரணம்பண்ணி தேன்விட்டுப் பிசைந்து கழற்சிக்காய் பிரமாணம் சாப்பிடுகிறது தீபனம் உண்டாம். சத்தி நிற்கும் மாரிடிப்பு தாகம் அரோசி ஆம்பல் பித்தம் ரெத்தபித்தம் க்ஷயம் போகும் சீதபித்தமும் போம் இது வெல்லாம் அடுப்பில் வைத்துப் பதமாய்க்கிளரி யெடுத்து வச்சுக்கொண்டு கழற்சிக் காய் பிரமாணம் சாப்பிடவும் தீபனம் உண்டாம் அதிகதாகம் போம் ஆமல்பித்தம் போம் ரெத்த பித்தம் போம் சீதபித்த பிணிகளெல்லாம் போம்.

---

## 122. No. 96 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 181; Lines 5 in a Page.

இதில், கண்டாமலகம், ஏலாதிச் சூரணம், தாம்பிர பற்பம், அரிதார பற்பம், மகா ஏலாதி, சாதிலிங்க பற்பம், கெந்தக பற்பம், அபிரேக பற்பம், மூதண்டத்தயிலம், வாலுழுவை நெய், அபிரேக செந்தூரம், ஈசுரமூலி கற்பம், கெந்தகாதி லேகியம், ஆனந்த வயிரவன் மகா நாராயணத் தயிலம், அமுதசஞ்சீவிக்குளிகை, கூஷ்மாண்ட ரசாயனம், அக்கினி குமாரன், ஏலாதிச்சூரணம் கதலிக் கிருதம், மகா சிந்தாமணிக் கோடாசுழி முதலிய மருந்துகளும் அவற்றால் தீரும் வியாதிகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. சிறுபான்மை பாடலும் பெரும்பான்மை வசனமும் கலந்தெழுதப்பட்டிருக்கின்றன.

Beginning

பயித்தியம் நாவறட்சி தியக்கம் நடுக்கல் வயிறெரிப்பு சலக்கழிச்சல் இதற்கு கண்டாமலகம்:

கண்டாமலகச்சா றொரு குறுணி நாழிசாறுமே கூஷ்
பாண்டம

*கருந்து சர்க்கரை பலமிருபது கரைத்துக்காச்சி குழம்பு செய்தே*
*உண்டானதோர் திரிகடுகு செவ்வியம் சீரகத்துடனிந்து மொன்றி......பலம்*
*ஓது மிலவங்கமு முத்தமு மேல்மு முறமதுர நாகமலருந்*
*தண்டாது பச்சிலெ தாளிசபத்திரந் தனதுபல மரையள பொடியாய்த்*
*தண்ணூறலவுபூசணிக்காயுலர்ந்ததை நெய்தனிற் பொரித் துப் பொடிசெய்தே*
*பண்டானதோர் குழம்பிற்றூவி வெந்துறு பதத்தில் நெய் தேனிருபடி*
*பாரித்திறக்கி நித்தமூன்று காசிடை கொள்ளபறந்திடும் நோய்கள்கேளே.*

*கேளுங் குணமாம் வியாதிகள்தான் கிளரும்பித்தம் நாவறட்சி*
*மூளுந்தியக்கம் விக்கலுடன் முதிர்ந்த கடிகள் பல நோவும்*
*நாளு நாளு மெய்யுணர்தல் நடுக்கல் வேர்வு வயிறெரித்தல்*
*வேளில் மகா மெய்தானும் வீறுங் கண்டாயலகமிதே.*

பலவியாதிக்கும் ஏலாதிச் சூரணம்:

*ஏலம் கிராம்பு சாதிக்காய் சாதிபத்திரி சுக்கு மிளகு சிற்றரத்தை சிறுநாகப்பூ கற்கடகசிங்கி வெங்காரம் செவ்வியம் அதிமதூரம் நற்சீரகம் இவை ஒரொன்று விராகனிடை க திப்பிலி விராகனிடை 13 ஆக வகை 2-க்கு கூட்டின விராகனிடை 26 இளவறுப்பாய் வறுத்துப் பொடி செய்து சர்க்கரை விராகனிடை 6 ஒக்கக்கூட்டி சேர்த்து வைத்துக் கொண்டு அந்தி சந்தி தின்னவும். இதற்குத் தீரும் வியாதி காயசுவாதம் இருமல் மகோதரம் இளைப்புத் தீரும். கைகண்டது.*

End :

த்த விஞ்சதிருக்குலு பண்ணும்படி பலரோகத்துக்கு:

திரிகடுகு திரிபலை கோரைக்கிழங்கு வாய்விளங்கம் செவ்வியம் கொடிவேலி ஏலம் இலவங்கப்பட்டை திப்பிலி மூலம் மாசிக்கம் தேவதாரம் ஆமணக்கம் வேர் பேயத்தி முட்டிவேர் மஞ்சள் மரமஞ்சள் சவ்வச்ச லவணம் எவச்சாரம் இந்துப்பு திப்பிலி அத்தித்திப்பிலி ஓமம் இவை சமன் கூட்டிச் சூரணம் பண்ணி இதுக்குச்சரி குக்குலும் சுத்தியானது கூட்டிச் சூரணம் பண்ணி இரண்டு மொக்கக்கூட்டி ஒரு விராகனிடை தேனில் நெய்யில் கொள்ள காச சுவாசம் மூலம் பவுத்திரம் குன்மம் வயிறூதல் குடல்வாதம் வாந்தி உளமாந்தை வாதங்கள் குட்டம் பதினெட்டும் தீரும் சாராயத்திற்கொள்ளுகிற பேருக்குச் சாராயத்திற் கொடுக்கவும்.

---

## 123. No, 97 (a) தேரையர் வைத்தியம் குணவாகடம்.

ஏடுகள் 169; Lines 5 in a Page.

இதில், வெள்ளைக்குட்டம், அதிசாரம் தவளைக்கடி, வங்கு, தேமல், படர்தாமரை, காசபடலம், கண்ணிமைதுடிப்பு, குந்தம், பித்தகாசம், முதலிய கண்விபாதிகள் இருமல், மூலம், மகோதரம், சுரங்களுக்கு மருந்து, வியாதிகளின் குணம், சிலபதார்த்தங்களின் குணம் ஆகிய இவைகள் கூறப்பட்டுள்ளன. ஆரம்பத்திலாவது கடைசியிலாவது இன்னார் செய்தார் என்றெழுதப்படாவிடினும் செய்யுளை நோக்கும் போது தேரையர் வைத்தியம் போலக் காணப்படுகிறது.

Beginning:

தலைமுழுக தலையிற்கறுக்க:

அருக்கன் எண்ணெய் அழகழிக்கும் அணியார் திங்கள்
அழகுண்டாம்

செருக்கும் செவ்வாய் நீயாகும் சீரார் புதனே மதியுண்டாம்
கருத்தை யழிக்கு நல்வியாழங் கள்ளவெள்ளி கோயாகும்
பெருக்கச் சொன்னோம் சனியெண்ணெய் பேணிமுழுகும்
பெரியோரே.

கையாந்தகரை காரென்று கார்புகவரிசி கருஞ்சீரகம்
மையார் திலத்திலாவாரை வேர் மற்றும் நீலி வாாகியுடன்
நெய்யோடிதனை யோரிரண்டு நிகழாதுண்ண வல்லீராய்
மையார் குழலும் வண்டாகும் வாணாள் கோடியிருப்பீரே.

எண்ணெயின் குணமே தென்னில் இளமையு மொளியு
முண்டாம்
கண்ணிரு செவியும் நோவும் காசமுங் கனிவு மாற்றும்
புண்ணினில் நோவு மாற்றும் புனிதுடல் வேர்வு போக்கும்
திண்ணிய கபமுங் காத்து திகழ் சிரத் திருமல் போக்கும்.

End :

கண்டித மாகச் சொன்னோங் கருதி மருந்து கொண்டால்
மிண்டிய சூரிமாரி மிகுத்தகதோர் இருட்டி சிட்டு
கொண்டலா பஞ்சாட்டை குறுகிய சேவல் காடை
மிண்டிய தூக்கிணத்தி மிகுத்தசொல் கிளியுங் குயிலும்
பண்டித ரெல்லாஞ் சொல்வர்பத்திய மாகு மன்றே. 323

---

## 124. (b) சுரத்தின் பிறப்பும் அதன்வகையும்.

Lines 5 in a Page.

இதில் சுரங்களின் லட்சணமும் அவற்றிற்குக் குடிநீரும் சொல்லப்பட்டுள்ளன. 48-வது செய்யுளிலிருந்து எழுகப்பட்டிருக்கிறது.

**Beginning :**

காலுச்சி அயர்தி யளவாகவே சென்று கம்பித்து நிற்கு
முடனே

மேலுச்சி வாதமுளா தாகியே சென்றபின் மெய்யும் நலிந்து மெலிவாம்
கோலிற் சிறந்த தோர்வாதமூற் கூறுடன் கொண்டதோர் பித்த மூன்று
வாலிற் சிறந்ததோர் அய்யமொரு கூறுகும் வாதசாம் வந்திடு வதே.

**End :**

கரைத்துப் பதத்தனிலே வடித்துக் கழஞ்சு நெய்தா னருந்து விராய்
விரைத் தோடலரு மளக மின்னே மிகவுங்குளிரு முடம் பெல்லாம்
உரைத்தே வாகடநூலதனை உண்மையாக வுரை செய்தோம்
தரைக்குள் முனிவன் சொன்னதனைத்தானே சொன்னான் தாரணிக்கே.

---

## 125. (c) வைத்திய அட்டவணை.

Lines **5** in a Page.

இதில், பாண்டு, கிராணி. பிரமியம், சத்திகுன்மம், விஷபாகம், விப்புருதி, சலக்கழிச்சல், கல்லடைப்பு, கண்வியாதி, முதலிய வியாதிகளுக்கு மருந்துகள் அட்டவணையாக எழுதப்பட்டுள்ளன.

---

## 126. No. 98 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 220; Lines 2—5 in a Page.

இதில், கரப்பான், விஷபாகம், மகோதரம் வீக்கம், சோகை, ஊது காமாலை, அரையாப்பு, பிளவை, தொடைவாளை, ஓடுவிப்புருதி, பவுத்திரம், கண்டமாலை, முதலிய வியாதிகளுக்

குப் பலவிதமான மருந்துகள் சொல்லப்பட்டுள்ளன. அச்சிடப்படவில்லை.

மண்டை கரப்பானுக்கு:

கொடுவேலிவேர், குருந்தவேர், ஆடாதோடைவேர், நெருஞ்சிவேர், கருநொச்சிவேர், நிலக்கடம்பின்வேர், சிறுகீரைவேர் வேலிப்பருத்திவேர்..................வேர், புங்கம்வேர், எருக்கம்வேர், கடுகுரோகணி அரத்தை, கருஞ்சீரகம், கார்போகரிசி, இவைதன்னிலொக்கக் கூட்டிக் கோமியம் வார்த்தரைத்து எண்ணெயிலெரித்துத் தலையிலு மிட்டுப்பூச மண்டை கரப்பான் தீரும்.

விஷபாகத்துக்கு குடிநீர்:

செம்முள்ளி பஷ்பம் பண்ணி ஒரு கடுக்காயும் பஷ்பம் பண்ணி நாழி வெள்ளாட்டுக் கோமியத்தில் அரைத்துக் கொடுக்க விஷபாகம் தீரும்.

கண்டமாலைக்கு எண்ணெய்:

மனுஷரைச் சுட்ட எலும்பு சூரணம் பண்ணி வடிகொண்டு நாய்க்கோட்டான் வேரப்பட்டை எடுத்து நய்யத் தட்டி ஒரு விளாங்கனிப் பிரமாணம் அரைத்து நல்லெண்ணெய் நாழி விட்டு மிளகு வெள்ளுள்ளி வசம்பு ஓரொன்று இருகழஞ்சு அரைத்துக் கலந்து எண்ணெயிட்டு வரக் கண்டமாலை தீரும் கைகண்டது. இந்த எண்ணெய் இடுமுன்னே வெள்ளிய சீலையை மூரிலே தோய்த்து எட்டு நாள் போட்டுப்பிறகு எண்ணெய் இட்டுவரவும்.

பிளவை கன்னக் கிரந்தி யரையாப்பு வீக்க மென்னப்பட்டதுக் கெல்லாம்:

குன்றி மணிப் பருப்பு எட்டிக்கொட்டை வகைக்கு களற்சிக்காயளவு நாபி விராகனிடை அரை வெங்காரம் விராகனிடை அரை கொடிவேலிவேர் எலுமிச்சம் பழச்சாற்றில் வேக

வைச்சது சிறு எலுமிச்சங்காயளவு எல்லாங் கூட்டி எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துப் பத்துப் போடவும். வீக்கமென்னப்பட்ட தெல்லாந்தீரும்.

---

## 127. No. 99 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 202; Lines 2—5 in a Page.

இதில் நாற்பது வகையான பித்தங்களுக்கும் அவை சம்பந்தமான ஏனைய ரோகங்களுக்கும் பலவகையான மருந்துகள் எழுதப்பட்டிருக்கின்றன. முதலாவது ஏடில்லை. அச்சிடப்படவில்லை.

அயலேகியம்:

**Beginning:**

லேகியத்திற் கலந்து தேன் படி ¼ கலக்கவும். இரண்டு நேரமும் தான்றிக்காயளவு கொள்ளவும். பித்தம் பிரமை விகாரம் மூர்ச்சை அங்கதாகம் தலைச் சுற்றும் பயித்தியம் காமாலை நீர்கடுப்பு அதிசாரம் தாது நஷ்டம் இவை எல்லாந் தீரும்.

பயித்தியத்துக்கு நெய் பண்ணும் வகை:

பசுவின் நெய் குறுணிக்கு நீலவேர் உணர்த்தி ஏலம் வெல்லம் லவங்கம் அதிமதூரம் சண்பகப்பூ செங்கழுநீர் கோஷ்டம் பொன்னாங்கண்ணிவேர் சிறுகீரைவேர் ஆரைவேர் இவை கூட்டி யரைத்துக் கரைத்து நெய் பண்ணி உள்ளுக்குங் கொடுத்து மேலுக்கும் பூசவும் பத்தியம் கார்ப்பு புளிப்பு தவிரவும்.

**End:**

வாந்தி விக்கலுக்கு வாய் நீரூறலுக்கு:

வாந்தி விக்கலுக்கு மாதளங்காயுலர்த்திப் பொடி செய்து தேனில் கொள்ளத் தீரும். வாயில் நீரூறி வருகிற தற்கு

இஞ்சிச் சாற்றை வெச்சென வெதுப்பி வைச்சுக் கொப்பளிக்கத் தீரும்.

---

## 128. No. 100 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 167; Lines 5 in a Page.

இதில் பலவிதமான வியாதிகளுக்கு மருந்துகள் எழுதப்பட்டிருப்பதோடு இரசவாத மருந்துகளும் கற்பமூலிகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

இருமலுக்கு மருந்து:

திப்பிலி கொண்டு வந்து வைச்சுக் கொண்டு நாழி கொள்ளுகிறபானையில் கால் படி பால் விட்டுப் பானைவாய் சீலைகட்டி அந்த சீலைமேல் திப்பிலி வச்சு சட்டிகொண்டு மூடி இரண்டு நாழிகை எடுக்கவும். திப்பிலி எடுத்து ஆக்கப பொடி செய்து சீனிக்கற் கண்டு ஒரு பலம் பொடி செய்து கூடக்கலந்து தினசரி அரைக்காசிடை தின்னவும் வெந்நீர் குடிக்கவும். பத்தியம் புளி புகயிலை தவிரவும். பத்துநாள் கொள்ளவும். இருமல் தீரும்.

பித்தளைப் பிரயோகம்:

பித்தளை ராவின பொடி நாலு விராகனிடை அரிதாரம் இரண்டு விராகனிடை செய்பாத்தம்பூவில் சிவப்பு வாங்கி ஆறுதிரமரைக்கவும் அதை அடைதட்டி உலர்த்தி அதின் மேலே ஏழு சீலைமண் செய்து ஒருசாணுழம் ஒருசாணகலம் குழிகல்லி அதிலே கீழும் மேலும் காட்டெரு வடுக்கிப்புடம் போட்டுத் தன்னுலாறவிட்டு எடுத்துப் பார்க்க மயில் கழுத்துப்போல இருக்கும் இப்படியிராமலிருந்தால் பின்னையும் ஒருபுடம் பேடவும் அதை யெடுத்து வெள்ளிக்கு நாலுக்கு ஒன்று கொடுக்க நாலு மாற்றுக் காணும்.

**End:**

சகல சுரத்துக்கும்:

ரசம் கெந்தகம் கெவுரி வாளம் சுக்கு கடுக்காய் வெங்காரம் சித்தாமணக்கு விதை ஆக சரக்கு 8-ம் சமன் கூட்டி எலுமிச்சம்பழச் சாறு விட்டு மூன்று சாமம் அரைச்சு வெயிலிலே வைக்க மெழுகு பதத்தில் எடுத்துக் குகையிலே வைத்து மேல் சில்லுப்போட்டுச் சீலைமண் செய்து வாரகபுடம் போடவும் ஆறவிட்டு எடுத்துக் கரியாயிருக்கிற அந்தக் கரியைக் கலுவத்துக்கு வைத்து பாத்து ப-க்கு விராகனிடை ¾ நாவி சுத்தி பண்ணி அடையிடை மிளகு போடவும் விளக்கெண்ணெய் விட்டு அரைத்து சிமிழிலடைத்து வைத்துக் கொள்ளவும். அனுபானம் போராமுட்டி சுக்கு கஷாயத்தில் கொடுக்கவும் பத்தியம் புளி புகை தவிரவும் சகல சுரந்தீரும் மூன்று நாள் மூன்று பொழுது கொடுக்கவும்.

---

## 129. No. 101 போகர் நிகண்டு.

ஏடுகள் 274; Lines 5 in a Page.

இதில், சவுக்காரச்சுன்னம், கடுங்காரசெயநீர், பஞ்சலவண உப்புக் கெதை, அயச் செம்பு ரசேந்திர குரு, கெந்தகச் செம்பு, துருசி செந்தூரம் வெடியுப்புச் செயநீர், திராவகம், நாகக்கட்டு, நாகச் செம்பு, காந்த ஈயம், மூலிகைச் செம்பு முதலிய இரசவாத மருந்துகளும், சவுக்கார முதலிய உப்பின் பெயர், உபரசங்களின் பெயர், கடைச்சரக்கின் பெயர், கடைச் சரக்கின் சமுதாய குணம், லோக சமுதாய குணம் சரக்கு வைப்பு முதலியவைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன இதனை இயற்றியவர் போகநாயனார் இவர் காலாங்கி அய்யரது மாணாக்கராவார். இதில் 784 செய்யுட்களிருக்கின்றன. அச்சிட்டிருக்கிறது.

**Beginning :**

அகண்டபரி பூரணமா மய்யர் பதம் போற்றி
அடுக்க நின்ற உன்மனைத்தாய் பதத்தைப் போற்றி
நிகண்டெனவே திருமூல நாயர் பாதம் போற்றி
நீங்காமல் காலாங்கி அய்யர் பதம் போற்றி
புகண்டு நின்ற நாதாக்கள் ரிஷிகள் பதம் போற்றி
பேரான வாக்குடைய வாணிபதம் போற்றி
முகண்டு நின்ற குஞ்சரத்தின் பதத்தைப் போற்றி
மூவுலகு மெச்சுதற்கு நிகண்டு கேளே. 1

கேளப்பா வறுபத்து நாலுமா புள்ளோர்
கெடியாகப் பாடியதோர் சாத்திரத்துக் கெல்லாம்
வாளப்பா மறைப்பான சூத்திரத்துக் கெல்லாம
மாலையைப்போல் பேர் மறைப்பை வெளியாய்ச்சொல்வேம்
சூளப்பா சவுக்காரம் சுன்னமாக
சூட்சமெல்லா நிகண்டுக்குள் சொல்லக் கேளு
பாளப்பா சவுக்காரம் பாக்குப்போல சீவி
பலமஞ்சு புத்தோட்டில் பரப்பிடாயே. 2

**End :**

நாகப்பூ வேலமொடு கிராம்பு சடாமாஞ்சில்
நற்கெந்த மாஞ்சி யொடு மெழுகு கோட்டம்
கூகப்பூ குங்கிலியம் குந்தரிக்கம் குக்கில்
கூகைநீறு கத்தூரி கறுப்பு வகையாகும்
பாகலோ ரோசனை குங்குமப்பூ வோடு
பாரமாஞ் செந்தனம் சாதிக்காய் சாதிபத்திரி
பாக்குத் தனித்த தாளியங்கம் பிசின் செவ்வள்ளியாமே.

குறிப்பு:

இந்நிகண்டிலுள்ள விஷய விபர அட்டவணை எழுதிய எட்டு ஏடுகள் முன்னே கோக்கப்பட்டுள்ளன.

130. **No. 102** (*a*) கெவுளி காதல்.

ஏடுகள் 52; Lines 5 in a Page.

இது, பல்லி சொல்லுதற்குப் பலாபலன் கூறுவது. செய்தவர் பெயர் தெரியவில்லை. எட்டு விருத்தத்தாலாயது பிழை அதிகமாயிருக்கின்றன. அச்சிடப்பட்டிருக்கிறது.

சுக்கிலாம் பரதரம் விஷ்ணும்
சசிவர்ணம் சதுர்புசம்
பிரசன்ன வதனம் தியாயேத்
சர்வ விக்கினோப சாந்தயே

Beginning:

அருக்கனு மொழியும் பல்லி அதிகமே கலகமாகும
செருக்கிய மனைபெண் ணொண்ணுஞ் சேரலாய்க் கொள்வா
ரென்றே
உருக்கிய நோவு தீரா துன்னிப மில்லைகண்டாய்
பெருக்கவே சண்டை யுண்டாம் பிறப்பது பொய் மெய்
தானே. 1

வன்மைசேர் புதனதன்னில் மறையவ னோலை சேரும்
உம்மைசேர் சாவுதூதன் உறுதியாம் கலகம் அச்சம்
நன்மையே யில்லை கேடாம் நாடிய தெய்வ குற்றம்
இம்மைசேர் பகைவன் வாரான் என்றது பல்லி நாலே 4

End:

அருக்கன் 60 அருந்திங்கள் 90 திருக்கன் செவ்வாய் 40 செயபுதன் 50 வியாழன் 70 வெள்ளி 80 சனி 30 ஆக நாழிகை 420.

---

131. (*b*) தும்மல் காதல்.

Lines 5 in a Page.

இது தும்மலின் பலனுரைப்பது. அச்சிடப்படவில்லை.

இரவு மேல் தும்மல் கேடு இந்து மேல் நன்மை யாகும்
புாகரும் பூசல் செவ்வாய் புதன் புத்தி வருவா ருற்றார்
சுரகுரு பொன்னே ரத்தம் சுக்கிரன் மிகவும் நன்றாம்
வாவுறு சனியே சண்டை மரணமாம் பானு தானே.

---

## 132. (c) பாம்பு மந்திரமும் மருந்தும்.

Lines 5—6 in a Page.

சிதைந்துள்ளது அச்சிடப்படவில்லை

Beginning:

எங்கே யெங்கே யென்று பாஞ்சளஞ்சிய சேறுடன்.........
பிடித்துக்கட்டிக்கொண்டு இத்துவளவாவா சுவாமி யானேவா
பிடிபிடி கெருடா பிடி பிடிச்சால் விடாதே............ .....
பிடித்துக்கொண்டு வாடா என்னத் திர்ந்தது விஷமே.

End:

விஷத்துக்கு

பழுபாகல் கிழங்கு அப்பைக்கிழங்கு கொல்லன் கோ வைக்கிழங்கு ஆடுதின்னாப்பாளை தலைச்சுருளிவேர் நன்னாரி வேர் பொன்முசட்டைவேர் மிளகரணைவேர் கருப்பிடாவேர் வீழிவேர் சிவனார் வேம்புவேர் அழிஞ்சிவேர் வெள்ளறுகு... ..............................................இது வெல்லாம் நிழலிலே உலர்த்தி பிறகு வெயிலிலே வைச்சு இடித்து தூள் பண்ணி பேய்ச்சுரைக்கூட்டில் வைத்துக்கொள்ளவும் விஷந் தீண்டி......... வெருகடிப்பிரமாணம் ............... ......

சிவமயம்.

---

## 133 (d) வைத்திய அட்டவணை

Lines 4—6 in a Page.

இதில் பேய்காய்கடி, கிரந்தி, நேத்திரரோகங்கள் பெ

ரும்பாடு, மேகவெட்டை, பவுத்திரம், குன்மம் நீர்கட்டு, மூலம், முதலியவைகளுக்கு மருந்து எழுதப்பட்டிருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

Beginning:

பேய்நாய் கடிக்கு மருந்து

*சாராயமும் நல்லெண்ணெயும் கூட்டிக்குழப்பி யிடப் பேய்நாய்க்கடிதீரும். பேய்த்தும்பைச்சாறும் வெங்காரமும் உரைத்திடவும் பேய்நாய்க்கடிதீரும். வரகரிசி நாழி அவித்துத் தின்னவும். குங்கிலியப்புகை பின்போகாட்டவும் பேய் நாய்க்கடி தீரும் கைகண்டமருந்து*

End:

பேதிக்கு

*பசுவின் பால் சேர் $\frac{1}{2}$ பிதிபாகலிலைச்சாறு சேர் $\frac{3}{8}$ இரண்டுங்கலந்து காலமே கொடுக்கப்பேதியாம். பச்சத்தண்ணீரில் குளித்துப்புளிச்ச மிளகுசாறு பண்ணி சாப்பிடவும்.*

*கற்றாழஞ்சோறு வாங்கி அஞ்சுகடுக்காய் பொடிபண்ணி அந்தக்கற்றாழஞ் சோற்றில் அந்தக்கடுக்காய் ராத்திரி ஊறப்போட்டுக் காலமே யெடுத்துப் பிசைஞ்சு வடிகட்டி பாவு சேர் விளக்கெண்ணெய் சுடவச்சுக் குடுக்கவும் பேதியாம். பசுவின் கோமயம் சேர் $\frac{1}{2}$ கடுக்காய் 5 பொடிபண்ணி அந்தக் கோமயத்தில் ஊறப்போட்டுக் காலமே யெடுத்துப் பிசைஞ்சு வடிகட்டிக் குடுக்கவும் பேதியாம். ஒருசேர் தண்ணீரைக்கால் சேர்தண்ணீராய்க்காச்சி கால்சேர் விளக்கெண்ணெயில் குழப்பிகுடுக்கவும் பேதியாம்.*

---

## 134 (e) விஷ்ணுதோத்திரம்.

Lines 4—6 in a Page.

*இதில், தமிழ் எழுத்தால் எழுதப்பட்டுள்ள தெலுங்கு தோத்திரங்கள் இருக்கின்றன.*

Beginning :

மறுகுலுண்டாம்மழு நேனு மட்சாவத்தாரா (1)
குறுத்துகா குறுப்பச் சூடு கூர்மாவத்தாரா (2)
வருகுண்ட லவுக்கா வய்யா வாராக அவத்தாரா (3)
செருலுகரு நிஞ்சு நாசிம்மாவத்தாரா (4)
வட்சமு—கிருலுகலுகு வாமன அவத்தாரா (5)
பட்சி வாகனுண்டா பலபத்திர அவத்தாரா (6)

End:

அக்கையா ஸ்ரீகேசவாய எம்போ சிந்த மந்திர களிந்த

---

## 135. No. 103. வைத்திய அட்டவணை

ஏடுகள் 108; Lines 2—5 in a Page.

இதில் மாடுகளுக் குண்டாகும் சிற்சில நோய்களுக்கும் விக்கல் சுரம் ஈளை இருமல் ஓக்காளம் எலும்புருக்கி கல்லடைப்பு காமாலை பாண்டுமூலம் மகோதரம் குன்மம் நீரிழிவு பெருவயிறு சூலை கவுசி வெப்புப்பாவை சீராமை முதலிய வியாதிகளுக்கும் நாகம் விரியன் மண்டலி செய்யான் அரணை நட்டுவாக்காலி எலி பெருச்சாளி முதலியவற்றின் கடி விஷங்களுக்கும் மருந்துகளும் பற்பசெந்தூர சூரணங்களும் பிறவும் எழுதப்பட்டிருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

Beginning :

பசுவுக்கு தினசு பிடித்திருந்தால் மருந்து

ஒருபடி நல்லெண்ணெய் கொண்டுவந்து தேகமாத்யந்தமும் துவளையிடவும் ஒருநாள்விட்டு ஒருநாள் துவளையிடவும். அந்தப்பசுவின் பேரில் தினசு அண்டாது. இது சோதனை பார்க்க வென்றால் ஒரு தினசைப்பிடித்து நல்லெண்ணெயில் துவட்டிப்பார்த்திருக்கச் சாகும். இது பரிட்சை கைகண்டது.

எலிகடிக்கு

*காட்டு முருங்கைவேர் ஒரு முள்ளிக் காயள வரைத்து இறையளவு இந்துப்புக்கலந்து உலர்த்திப் பொடிசெய்து ஒரு காசிடை ஆமணக்கெண்ணெயிற் கலந்து விழுங்கப் பதினெட்டு எலிகடியுந்தீரும்.*

எலும்புருக்கி சுக்கில பிரமியம்

*சத்திச் சாரணைக்கிழங்கு கோவை வடக்கே போர வேரும் விழுதுபட அரைத்துப் பசுவின் நெய்யிற் குழைத்து விழுங்கவும். பத்தியம் பாலுஞ் சோறு முண்ணவுட.*

**End**

வெட்டைக்கு மருந்து

*நெல்லிக்காய்ச்சாறு படி வ சீனிசர்க்கரை போட்டுக் குடிக்க வெட்டை தீரும்*

குறிப்பு :

*இதிலுள்ள மருந்துக்கு விவர மெழுதிய அட்டவணை ஏடுகள் ஐந்து முன்னே கோக்கப்பட்டிருக்கின்றன. இதில் முதலில் 12. ஏடுகள் இல்லை.*

---

## 136. No. 104 (a) வைத்திய அட்டவணை.

ஏடுகள். 114; Lines 6—9 in a Page.

*இதில் காமாலை பீனிசம் இருமல் சுரங்கள் நீரிழிவு பெரும்பாடு எலும்புருக்கி அண்டவாதம் குடல்வாதம் ருத்திரவாயுவு முதலியவைகளுக்கு மருந்துகளும் காயகற்பங் களும் செந்தூர பற்ப லேகியங்களும் விஷத்துக்கு மருந்தும் சிற்சில பதார்த்த குணமும் எழுதப்பட்டுள்ளன. அச்சிடப் படவில்லை.*

வந்திடு க்ஷயரோகத்தின் வருகிர கத்தின் பேரும்
முந்திடு பிராயச்சித்தந்தான் மூண்டிடு வாறு தானும்
தந்திடு அவிழ்தந்தானும் தானது செய்யு மாறும்
இந்துறை குழலினாளே இயம்புவோமினிது தானே

க்ஷயரோகம் பிடிக்கிற காலத்தில் அக்கிராசனென்கிற கிரகம் பிடிக்கும். அவன் பிடித்த காலத்தில் உடம்பில் சுரமுண்டாம் தொண்டைக் கபாலம் புண்ணாயிருக்கும். மார்பு ஈரல் புண்ணாயிருக்கும் இருமலுண்டாயிருக்கும். தொண்டைப்பு கைச்சல் தினவுண்டாயிருக்கும். அந்திகாலம் இருமலுண்டாம் சுரமும் காணும் விடியற்காலம் இருமல் அதிகமாயிருக்கும் அந்தக்கிரகத்துக்குப்பிராயச்சித்தம் கோதானம் பூதானம் எருமைக்கிடாய் தானம் கொடுக்கத்தீரும். இது சுத்தப்பிரதானம் என்றது காரிய சித்தாந்தம் என்றது.

காமாலைக்குத் தேங்காய் லேகியம்

திப்பிலி சுக்கு மிளகு கருஞ்சீரகம் நல்லசீரகம் அசமதாகம் அரப்பொடி காந்தம் பழங்கிட்டம் இது கூட்டித் தேங்காயி லடைத்துப் புடமிட்டு எடுத்து மேலோடு வாங்கிப் போட்டுக் கையாந்தகரைச் சாறு வார்த்தரைத்துப் பழ வெல்லம் போட்டுக் கலந்து கொடுக்கவும் சோகை முதலானதும் போம்.

ஆறுத எந்தப் புண்ணுக்கும் புகை:

ரசம் கெந்தகம் துருசி க. வங்காளப்பச்சை க. கருங்குங்கிலியம் காசிடை ச ஆகக்கூட்டிப் பொடி செய்துக் கொள்ளவும் கையத்தனை யகலம் இரண்டு மெழுகு சீலையில் கள்ளிப்பாலூட்டி அந்தச் சீலையில் இந்தப் பொடியைப் பாப்பித் திரியாகத்திரிச்சு விளக்கில் கொளுத்திப் புகையைப் பிடிக்கவும். புண் ஆறும்.

---

## 137. (b) பாம்புகளின் சாதியும் குணமும் பிறவும்.

Lines 7—8 in a Page.

**Beginning**

அனந்தனே அருக்கனாகு மாயுறு சுகியே திங்கள்
கனந்தரு தகான் செவ்வாய் கரிபுதன் கெருடனாகும்
மினந்தரு விசாழம் பர்மம் வெள்ளியிற் பர்மம் மாகும்
தனந்தரு சனியிற் சங்க பாலனுங் குளிய னாமே.

**End :**

நல்ல பாம்பு வயிற்றிலே சித மண்டலி பிறக்கும். விரியன் வயிற்றிலே நண்டுவாய்க்காலி பிறக்கும். கருவழலை நல்ல பாம்பு வயிற்றிலே பிறக்கும். பாம்புகடிக்கும் காலத்தில் முன் வாய்ப் பல்லு பட்டால் கொல்லுமென்றறியவும், இப்படி விஷங்கள் சாதி குணமறியவும்.

விஷத்துக்கு மந்திரம்:

டாரி மிக்கியாரிலோா பந்திக்காயாரே நதி நதி விஷந்தி விஷமில்லை யோரே. நந்தியெனும் முனியெனும் நாரதனும் இந்திரனும் செந்தியில் நடந்திட சில்ல சிவா தில்லைச் சிவனே எழுந்திரு சிவந்த பாதமே எழுந்திரு. உப்பிலே மந்திரிச்சுக் கொடுக்கவும் தண்ணீர் ஓதி இரைக்கவும் பார்வை பாக்கிறது. ஷூ இந்த எந்திர முகத்திலே பார்க்கிறது.

---

## 138. (c) விநாயகர் அகவல்.

Lines 6 in a Page.

இது விநாயகர் தோத்திரம் அவ்வையார் இயற்றியது. அச்சிடப்பட்டுள்ளது. இது 689-ம் நம்பர் உட்பிரிவாகிய (i) போன்றது. இதின் கடைசியில் மூன்றடிகள் இல்லை.

Beginning :

சீதக்களபச் செழுந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலவிசை பாடப்
பொன்னரை நாணும் பூந்துகி லாடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ கெறிப்ப
பேழை வயிறும் பெரும்பாரக் கொம்பும்

End :

அணுவுக்கணு வாயப்பாலுக் கப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற ஞானக் கரும்பையுங் கூட்டி
வேடமு நீறும் விளங்க நிறுத்திக்
கூடுமெய்த் தொண்டர் குணத்துடன் காட்டி
அஞ்சக் காத்தினரும் பொருள் தன்னை
[நெஞ்சக் காத்தி னிலையறி வித்துத்
தத்துவ நிலையைத் தந்தெனை யாண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே.]

---

## 139. (d) நாடி நூல்.

Lines 5—6 in a Page.

இது நாடி லட்சணமும் வியாதிகளின் லட்சணமும் கூறுவது. இதில் 50 செய்யுட்களே இருக்கின்றன.

Beginning :

கரிமுக னடியை வாழ்த்திக் கைதனில் நாடி பார்க்கப்
பெருவிர லங்குலத்தில் பிடித்தடி நடுவே தொட்டா
லொருவிர லோடில் வாத மிருவிர லோடிற் பித்தந்
திருவிரல் மூன்றி லோடிற் சேற்றுமை நாடியாமே.

End:

தொப்புளும் வலித்து நொந்து துவங்கிடா திரத்தம் வந்து
அப்பொழு தந்த மூல மறியவே வெளியில் விள்ளும்

தப்பற மேனி வற்றித் தருகிடா வாதை செய்யில்
முப்புறக் கண்ணின் மாதே யிது பொத்த மூல மாமே.

---

## 140. (e) சுரத்தின் பிறப்பும் வகையும் அதிசார லட்சணமும் சில மருந்து சுத்தியும்.

Lines 5—8 in a Page.

**Beginning**

லோகத்திலே உண்டான சுரம் பிறந்தது. அதினுடைய உக்கிரம் கால மிருத்தியுவுக்குச் சமானமானது. பரமேஸ்வரன் தக்கயாகத்தை வென்று கோபமாயிருக்கிற சமயத்தில் நெற்றிக் கண்ணினாலே சுரம் பிறந்தது. அந்தச் சுரம் சேட்டும சுரம் பூதசுரம் அசிரண சுரம் அபிகாத சுரம் தொந்த சுரம் வாதசுரம் பயித்திய சுரம் ஆகச் சுரம் விதனம் எழு விதம் பிறந்தது.

**End:**

கெந்தகந்தான் கரண்டியதில் நெய் மேலிட்டுக்
கிளாரம லுருக்கியே பாலில் சாய்த்து
இந்தவித மூன்றுதரம் காச்சச் சுத்தி
யீதல்லாற் பிட்டவியற் பாலிற் சுத்தி
அந்தமுள்ள குழிவெட்டி சட்டிவைத்து
ஆவின்பால் விட்டதின் மேல்
பந்தமுள்ள கெந்தகத்தைப் பரப்பி மூடிப்
பருவாளி யிட்டெரிக்கப் பதவாயத்தி

---

## 141. (f) நாடிசாஸ்திரம்

Lines 7—9 in a Page.

இதுவும் (d) போல நாடிலட்சணம் கூறுவது. இதில்

சாத்தியா சாத்தியம் மரணகண்டிகை தொந்த நாடிகளின் லட்சணம் கூறப்பட்டுள்ளது.

Beginning:

ஆகிய நாடிமூன்று மெழும்பிடில் சன்னியாகும்
வாகினால் அன்னங் கோழி மயிலென நடக்கில் வாதம்
ஏகிய ஆமை அட்டை யிவையென நடக்கும் பித்தம்
போகிய தவளை பாம்பு போல்வது சிலேட்டுமமாமே.

அன்னமே கோழி ஒணான் உடும்பென நடக்கும வாதம்
பின்னையே அட்டையாமை பொருந்திடில் பித்தமாகும்
சொன்னநேர் மடநல் லாளே சுற்றிய தவளை பாம்பு
அன்னவை நடக்கு மாகில் ஐயமென்றறிந்து கொள்ளே.

End

இசைந் திடும் பித்தம் ரெண்டும் வாதமுந் தனித்தொன்றாகில்
பசிந்திடாப் புளிப்பு வேண்டிக் கூடிய தவனம் பற்றும்
இசைந்திடும் உஷணமுண்டாம் இவையிவை மிகவுந்தோன்றும்
அசைந்திடும் பித்தவாத தொந்த மென்றுரைக்கலாமே.

---

## 142. (g) வைத்திய அட்டவணை.

Lines 7—9 in a Page.

இதில் சாக்கு சுத்தி சுரங்களின் லட்சணம் மருந்துகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

Beginning:

காடிதனில் நேர்வாளம் பத்துநாள் கதிக்கவேயூறவைத்துச் சாணப்பாலில்
வேடுபட வெந்திறக்கி நஞ்சுபோக்கி வியன்பாலிலறு கீரைக் குமரிச்சாறம

வாடுபட வெவ்வேறே வெந்திறக்கி வரிசைபெறச் சுத்தித்
தீனச் செய்வீராகில்

ஏடுலவு பூங்குழலா யிந்த வண்ண மிவ்வுலகிற் செய்வார்க
ளில்லை கண்டாய்.

End:

லிங்கங் கட்ட:

சாதிலிங்கம் அஞ்சு விராகனிடை ஒரு கட்டியாய்க் கொண்டு வந்து ஆதளைப் பால் விட்டுத் தேச்சு சூரியப்புடமாக மூன்று நாள் வைக்கவும் தினம் மூன்று விசை ஆதளம் பால் தடவவும். பின்னும் அக்கிராகாரம் வெங்காரம் சீனக்காரம் சவுக்காரம் படிக்காரம் இந்த அஞ்சுவகையும் பொடி செய்து கொண்டுவந்து மஞ்சள் கருவிட்டுப் பிசரி கட்டி தெரியாமல் எருக்கிலை கனமிருக்க கவசம் பிடித்து பின்பு மடல்துத்தம் கொண்டுவந்து மஞ்சள் கருவிட்டு அரைத்து எருக்கிலே கனமிருக்க கவசம் பிடித்து பின்பும் கட்டியைக் குகைக்குள்ளே வைத்து மேலு மூடிக் கருதடவின சீலை கொண்டு மூன்று சீலை மண் வாய்க்குச் செய்து பின்பு அந்த சீலை கொண்டு ஏகமாய் மூன்று சீலை செய்து குக்குட புட மிடவும்.

---

## 143. (h) நயன சாஸ்திரம்.

Lines 7—8 in a Page.

இதில் கண்ணில் உண்டாகும் 96 வியாதிகட்கு விபரமும் அவற்றுள் இன்னின்ன இடத்தில் இத்தனை வியாதிகள் உண்டாகும் என்பதும், அவ்வியாதிகளின் பெயர்கள் இன்னவென்பதும் அவற்றிற்கு மருந்துகள் இன்னவை என்பதும் கூறப்பட்டுள்ளன.

Beginning:

கண் வியாதி:

கண்ணில் பிறந்த ரோகம் 96. அவைக்கு மூளியில்

வியாதி 45. வெள்ளை முனியில் வியாதி 20 நிமையில் வியாதி 16 கடைக்கண்ணில் வியாதி 15 ஆகவியாதி 96.

கண்ணது நோக வேண்டும் காரண மேதோ வென்னில்
நண்ணிய அப்புத் தன்னில் நலம்பெறக் குளிக்கை யாலும்
பிண்ணிய மயிரிலங்கு பிசந்தெண்ணெய் போகாதாலும்
விண்ணிடை வெளவையாலும் விளைந்திடும் நோய்கள் தானே.

End:

நந்தியாவிட்டப்பூச் சாறும் நல்லபனைமட்டைச் சாறுடனே
மந்தியாருண்ணு மூலைப்பாலும் வளருமுருங்கையிலைச்சாறும்
சந்தியார் தன்னிலோரொன்று தன்னில் தனித்தனிச்சாறு
மூக்கு
வெந்தியார் சந்தனமதாம் மேவு மஞ்சள் பனங் குருத்தே 53

மூந்திச் சொன்ன நாலு முடியக்கழஞ்சரை யோ ரொன்று
இந்தயான் சொல்வே னினிக் கேளாயிப்படிச் சிப்பியு மப்ப
டிக்கொள்
தந்தியர்மிட்டு முடிவித்து தன்னிலோகப் பொடிகள் தன்னில்
இந்தப்படிதான் செய்யித முட னின்னஞ் சொல்வார். 54

---

## 144. (i) நாடி நூல்

Lines 7—8 in a Page.

இதுவும் (d) யைப்போல நாடியைப்பற்றிச் சொல்வது. பாட்டும் வசனமுமாக இருக்கிறது.

Beginning:

வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் வாண்மலரான்
நோக்குண்டாம் மேனிநுடங்காது—பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கை யான்பாதந்
தப்பாமற் சார்வார் தமக்கு.

கரிமுக னடியை வாழ்த்திக் கைதனில் நாடியார்க்கப்
பெருவிர லங்கு லத்திற் பிடித்துடனடுவே தொட்டால்
ஒருவிர லோடில் வாதம் இருவிர லோடிற் பித்தம்
திரிவிரல் மூன்றி லோடில் சேட்டும நாடியாமே.

**End:**

வந்த நோய் கண்டு செய்யும் குணத்தையே வகுத்துக்காணில்
முந்தவே நானிலத்தில் முத்துடனதிக்க நின்றால்
அந்த நோய் கொண்டுவந்த பித்தமு மமைத்து தானும்
இந்தநூலின் வழியதாக இருந்து நீ வருந்திக் காணே.

குறிப்பு:

இவைகளையல்லாமல் சிலவியாதிகளுக்கு மருந்தும் பற்பசெந்தூர லேகியமும் எழுதிய வைத்திய அட்டவணை ஏடுகள் நான்கு சேர்க்கப்பட்டுள்ளன.

---

## 145. No 105 (a) வைத்திய அட்டவணை.

Lines 2—7 in a Page.

இதில், அஞ்சனம், சாலம், வசியங்களும், புல்லுருவிப் பிரயோகங்களும், பதினெண் குட்டங்கள், காமாலைகள், மூலங்கள், ரத்தமூத்திரம், பிரமியம், ஒருதலைவலி, செவிநோய் கண்வியாதி, விஷம் முதலியவற்றிற்கு மருந்துகளும் எழுதப் பட்டிருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

Beginning:

அஞ்சனம்:

சாரணைவேர் தலையோடும் கண்பட்ட சட்டியில் வறுத்துக் குப்பைமேனிச் சாற்றில் கையில்போட விடம் சர்வஞ்ச

னம். தலையோடும் கையாந்தகரைச் சாற்றில் அரைத்துத் திலதமிட கையிலும் போட ஓடும்.

புண்கண்ணுக்கு:

சங்குதுத்தம் ஓரிலைத்தாமரைவேர் சிறுகீரைவேர் சிறுபுள்ளடிவேர் பொன்னாங் காணிவேர் அதிமதுரம் சிறுபூனைவேர் கடல்நுரை இவை யோரொன்று கழஞ்சி புழுகு பணவிடை எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்து கலத்தொடு கலஞ்சாரித்துண்டை பண்ணி முலைப்பாலிலிடக் கண் வேதனை போம்.

புல்லுருவி:

திருவாதிரைநாள் ஆடாதொடைமேற் புல்லுருவி மடியில் வைக்கச் சதுரங்கம் வெல்லும். புனர் பூசநாள் ஆலின்மேற் புல்லுருவி குடிக்கப்பிள்ளையுண்டாம். பூசத்து நாள் இலுப்பை மேற் புல்லுருவிப்பாலிலரைத்துப்பூச வெட்டறுது.

End;

இந்துப்பு சீனக்கார மிலங்கு பொட்டலை வெங்காரம்
சந்தித்து நாலு நின்ற சமன்சலா சத்துங் கூட்டி
வந்தித்துப்புடமே செய்து வாரகன் செந் தேனிற்கொள்ள
சந்தித்த மூல குன்மம் சகல கிருச்சமமும் போமே.

---

## 146. (b) யந்திர மந்திர அட்டவணை.

Lines 5—6 in a Page.

இதில், பேய், பாம்பு, எலிகடி, முசலகன், ராசவசியம் வழக்கு வெல்ல, அம்புவிலக, கண்ணோய், தலைநோய் முதலியவைகளுக்கு எழுதிக்கட்ட யந்திரங்களும் பலவகையான மந்திரங்களும் இருக்கின்றன.

Beginning:

இவ்வியந்திரம் பேய் பாம்பு புலி கள்ளர் தீண்டாமல்:



End

கொடு முடி இளம்பிறை கொங்கையார் தானையார். தரு நீறு அம்மையார் தில்லை விடு விடு லோகதிரு நீற்றை ஒதி நெற்றியிலிட்டுக்கா முருகுக காமனாரே. கடுந்திப்படுவாய் அட்டந்திரி ஆகாசந்திரி திரிநாதன் வளர்த்த கருநாய் செந்நாய் போலக் காலிலே வந்து வணங்கிடும்.

---

147. (c) வைத்திய அட்டவணை.

Lines 5 in a Page.

இதில் பலவியாதிகளுக்குச் சுலபமான மருந்து முறைகள் எழுதப்பட்டிருக்கின்றன.

Beginning;

குருப்புறப்பட்டுக் கொப்புளிச்சால் மருந்து:

நிலக்கடம்பு வேர் ஒரு எலுமிச்சங் காய் மறுமவாரி அரைத்து சிறு நீராவது நீர்ச்சோற்றுத் தண்ணீராவது ஒருசேரைத் தண்ணீரில் முறுஞ்சா குடிக்கவும் ஆறிப்போம்

வயிறு கடுப்புக்கு மருந்து:

மிளகு பொரிச்சு அரைச்சு காஞ்ச நல்லெண்ணெ யிலே மிளகு பொடியைப் போட்டுக் குழப்பி உள்ளங்கை

யிலே இட்டுக்குடுக்கவும் வயிறு கடுப்பு கிராணி எல்லாம் குணமாம்.

End

கடிவிஷத்துக்கு:

இந்துப்பு கல்லுப்பு சவுக்காரம் வெருகன் கிழங்கு முள்ளங்கிக் கிழங்கு சுக்கு பதினைஞ்சு இந்த மருந்தெல்லாம் ......... இடிச்சுப்புதுப்பானையிலே யிட்டுத் தின்ன வெண்ணெய் போலே உருகிப் போம்.

---

## 148. (*d*) ஜாலங்களும் மந்திரங்களும்.

Lines 5—7 in a Page.

Beginning :

வெண்குன்றி சமூலம் பிடுங்கிப் பசும்பாலிலரைத்து உண்டைபண்ணி அரிதாரமும் புறுவெச்சமும் கூட்டி அரைத்துப் பூசணிக்காயில் தடவிவெட்ட இம்மருந்து நாழி அடியில் தடவ நாழி நடக்கும் உலக்கையில் தடவ உலக்கை நிற்கும்.

சோகிமந்திரம்

ஓம் ஸ்ரீமுக முகல வாகினி சரா ஆனந்த கற்பவல்லி பிரம பிரம ஸகல சன மோகன மாதி தேவி சுவாகா. இந்த மந்திரம் பதினையாயிரம் உருச்செபித்து பால் நெய் அறுகு பழம் இதுகள் எல்லாம் ஓமம் வளர்த்து தனி வீட்டிலேயிருந்து அழைப்பிச்சுக் கொள்ளவும்.

End:

இதுக்கு மந்திரம் என்கட்டும் கட்டுப் பிறர்கட்டும்
பெட்டைக்கட்டு என்கட்டும் வன்கட்டாய் நிற்கட்டு.

ஆண்கட்டுவிட ஓம் உத்தமமானி முத்தமமான மாகாளி யானைப் போல என் மாகாளி உத்தமமான மாகாளியாக சுவாகா.

---

## 149. (e) வைத்திய அட்டவணை

Lines 5—6 in a Page.

இதில் நயன ரோகங்களுக்கும் குதிரைகளுக் குண்டாகும் வியாதிக்கும் வேறு சில வியாதிகளுக்கும் மருந்துகள் எழுதப்பட்டுள்ளன.

**Beginning:**

கண்ணுக்கு மருந்து வெள்ளெழுத்துக்கு மருந்து

ஓரிலைத்தாமரை வேர் கழஞ்சுதுத்தம் களஞ்சு நெல்லி முள்ளி அரைக்கழஞ்சு முளகு கால்களஞ்சு எலுமிச்சம் பழச்சாற்றில் அறைத்து உண்டையாக்கி எலுமிச்சம் சாற்றிலுரைத்துக்கண்ணிலிடப் படலம் வெள்ளெழுத்து பூவும் பறியும்.

குதிரைக்கு குப்பை நோவு பிடித்தால்

புல்லு தின்னாது தண்ணீரும் குடியாது நாசியில் சலமாகவிழும். இதுக்கு மருந்து தென்னம் வேர் எலுமிச்சம் பழச்சாறு நல்லெண்ணெய் இவை கூட்டி நசியம் இடத் தீரும்.

மண்ணைச் சூலை பிடித்தால்

நாக்கை நட்டு நிற்கும் கண்தெரியாது மலவீங்கும் தொண்டைவீங்கும் இதுக்கு மருந்து மணிப்பிரண்டை வேரும் இலையும் கிழங்கு மிடித்து வெதுப்பித் தொண்டையில் தடவவிடும்.

**End :**

மூக்கிலே ரத்தம் விழுகிறதுக்கு நசியம்

ஒருசேரை வெற்றிலைக்காம்பு ஒற்றை வெண்காயமும் நருக்கி பூண்டு மிளகும் நருக்கி நாசியில் விட்டபிறகு உடனே வெள்ளாட்டுப்புழுக்கை ஊசியிலே குத்திசுட்டு அந்தப்புகை வாங்கவும் இதில் நில்லாவிட்டால் மூன்று நாள் பொறுத்து ஒருதுளி ஊமத்தைச்சாறு நாசியில் அற்பத்தில் விடத்தீரும்.

குறிப்பு:

இவைகளையல்லாமல் வாணமருந்துகள் எழுதிய ஏடுகள் இரண்டு கடைசியில் கோக்கப்பட்டிருக்கின்றன.

---

## 150. No. 106 (*a*) வைத்திய அட்டவணை

ஏடுகள் 190; Lines 6—7 in a Page.

இதில் பாண்டு வயிற்றுக்கடுப்பு, நீர்க்கடுப்பு கல்லடைப்பு பெரும்பாடு பிரமியம் மஞ்சட்காமாலை முதலிய வியாதிகளுக்கு மருந்துகள் சொல்லப்பட்டுள்ளன. அச்சிடப்படவில்லை. சிதிலமாயிருக்கிறது.

**Beginning :**

செங்கழுநீர் நெய்க்குவகை

பொன்னாங்காணிவேர் சிறுகீரைவேர் சீந்தில்தண்டு...
செங்கழுநீர்க்கிழங்கு தாமரைவளையம் இருவேலி............
கற்றாழைமடல் இவை ஒவ்வொன்று இருபலம்..................
நாலொன்றாக காச்சிப்பிசைந்து பிழிந்து வடித்து.............
க்கு மருந்துக்கு வகை அதிமதுரம் கோட்டம் ஏலம்.........

நீர்க்கடுப்புக்கும் கல்லடைப்புக்கும்

எருமைத்தயிர் கட்டித்தூக்கின தயிர் ஒரு எலுமிச் சங்

காயளவு அரைக்கீரை ஒரு எலுமிச்சங் காயளவு நல்லெண் ணெயில் பிரட்டி மூன்றும் ஒக்கக் கலந்து கொள்ளக்கல்லு விழும் நீர்க்கடுப்பு நிற்கும்.

காமாலை

கீழாநெல்லிவேர் இரண்டு பாக்கத்தனை நன்றாக அ ரைச்சுப்பசுவின் பாலில் வெல்லம் போட்டுக் குடிக்க கண் மஞ்சணித்தல் நீர் மஞ்சணித்தல் நிற்கும்.

---

151. (b) மாட்டு வைத்தியம்.

Lines 7—9 in a Page.

இதில் மாடுகளுக்கு உண்டாகும் சிலவியாதிகளுக்கு மருந்தும் சூடு போடும் விதமும் கூறப்பட்டுள்ளன. அச்சி டப்படவில்லை

Beginning:

இளம்பாளை இலவம்பட்டை ஒதியம் பட்டை அத்திப் பட்டை மாம்பட்டை மருதம்பட்டை கருவேலம்பட்டை நாவல்பட்டை மயிர்மாணிக்கம் பெருந்துத்தி நறுந்தாழி இலை பூலா இலை இரண்டுமூன்றுபாளைமூடி எலுமிச்சம்பழம் அஞ்சு இவைஎல்லாம் இராவடுப்பிலே துவைச்சு குறுணி பழங்கஞ்சி வார்த்து இராவடுப்பிலே வேகவைத்த மற்றநாள் துவைச்சு குறுணிமோர் பழங்கஞ்சி குறுணி வார்த்துப் பிழி ஞ்சுப்புகட்டவும். விலாப்புறத்தில் இரண்டு சூடு சுடவும்.



End:

மாட்டுக்குளம்பு வறுத்து தண்ணீரி............கருனைக் கிழங்கு வெருகங்கிழங்கு பசுமஞ்சள் மணத்தக்காளி சேர

ரோசனை.........லாம் காடி வார்த்தரைத்து மூன்று நாள் புகட்ட நிற்கும்.

---

152. (c) வைத்திய அட்டவணை.

Lines 7—8 in a Page.

இதில் வயிற்றுவலி, கவுசை, வெப்புப்பாவை, குன்மம் வாயுத்திரட்சி, படர்தாமரை, பிரமியம், மகோதரம், குடல்வாதம், பெரும்பாடு, அதிசாரம், பித்தபாண்டு எலிகடி ஊதுகரப்பான் முதலிய நோய்களுக்கு மருந்துகளும் சூடுகள் தம்பனக்குளிகைகளும் எழுதப்பட்டிருக்கின்றன. அச்சிலில்லை.

**Beginning :**

வாயு குன்மத்துக்கு:

கள்ளிக்கட்டை முழுநீளம் வெட்டிவந்து சோறு வாங்கிப்போட்டு கல்லுப்பு நாழிஇட்டு அதில்...............நாரத்தங்காய் வாய் நெகிழ்த்துவைத்து அதின்மேலே மீள உப்பு வைத்து................தை வாய்மூடி புரிசுற்றி உமியு மெருவுமிட்டுப் புடமிட்டு எடுத்து உப்பையும்..........யும் வேறே வேறே வைத்துக் காயைத்தின்ன உப்பைக் கரைத்துக் குடிக்கவும்.

கல்லெரிப்புக்கு

அத்திக்காயுலர்த்திப் பொடிசெய்து பாலிற் குடிக்க செப்பு நெருஞ்சில் சமூலம் ஒருபடி அவுரி இலை ஒருபிடியும் அடைசுட்டுத் தொப்புளில் வைத்துக் கட்ட மாடப்புறுவின் எச்சமும் கோழிக்காரமும் இரண்டும் சமனெக்கத் தேன் வார்த்தரைத்துக் குழப்பித்தின்ன கல்லுவிழும் கீழ்வயிற்றில் நெய்யும் எண்ணெயும் இட்டுவைக்க ஆலமொட்டு அரசமொட்டு நற்சீரகமும் எருமைத்தயிரில் கொடுக்க.

செவ்வட்டை கடிக்கு

சேங்கொட்டை 200 கல்லுரலில் போட்டு இருப்புக் குச்சு கொண்டு துகைச்சு நன்றாய் துவைச்சதுக்கு பிறகு எள்ளு இருநாழி நன்றாக இடிச்சு ஒக்கப்போட்டு நன்றாகத் துவைச்சுப்பிறகு புட்டிக் கருப்புக்கட்டி போட்டுத்துகைச்சு ஒருகலசத்தில் வைச்சுக் கழற் கொடிப்பிரமாணம் கொள்ள வும்.

**End:**

பாஷாணம் 2 ப துத்தம் க ப துருசு ½ ப இவை மூ மத்தைஇலைச்சாறு வார்த்தரைச்சு மிளகுப்பிரமாணம் உண் டை பண்ணி பாலேட்டிலே இடவும் இரதம் க ப தேன் ரு ப அரிதாரம் ரு ப மனோசிலை ரு ப இவை பாகலிலைச்சாறு வார்த்தரைத்து செப்புக்கிண்ணியில் பூசி சட்டியில் கவிழத் து சீலைமண்செய்து சுற்றிவா மணலைச்சொரிந்து மேலே செம்பா ஆருதல் எள்ளு ஆருதல் வைத்து கீழே தென்னிலை பிரமாணம்.

---

## 153. No. 107 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 107; Lines 4—6 in a Page.

இதில், நீரிழிவு, உடம்பெரிவு நீர்க்கடுப்பு, மூலம், பயித்தியம், சுரம், வெட்டை, கல்லடைப்பு, பிரமியம்' சோகை, ஊதுகணை, பெரும்பாடு, மலட்டுவலி, எலிகடி முதலிய வியாதிகளுக்குப் பலவிதமான மருந்துகள் சொல் லப்பட்டிருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

**Beginning:**

கெந்தகம் 3 பலம் பொடிசெய்து ஒரு கொட்டாங்கச் சியில் போட்டுச் செம்பு ஈசலிறகு போலத் தட்டினது 3 பலம் இரதம் 3 பலம் இவை யெல்லாம் எலுமிச்சம் பழச்

சாறு விட்டு மூன்று நாள் வெயிலில் வைக்கப்பறப்பமாம் பின்பு எடுத்துப் பரணியில் அடைத்து ஒருபணவிடை உள்ளித்தயிலத்தில் ஓமச்சாற்றில் சர்க்கரையில் தேனில் கொள்ளலாம்.

கல்லடைப்புக்கு மருந்து:

வெங்காரம் 1 பலம் எலுமிச்சம் பழச்சாறு உழக்கு எண்ணெய் உழக்குக் கூட்டி குடிக்கக் கல்லுவிழும் வில்வ வேர் பாலில் குடிக்கக் கல்லு விழும். வெங்காரம் ஓட்டடையில் சேர்த்து நெய்யில் விழுங்க விழும்.

நாலுவகைப்பிரமியத்துக்கு வாயுவிறலெடுத்ததற்கு:

மஞ்சளை அரைத்துச் சீலை வடி கொண்டு நெல்லிக்காய் துவைத்த சாகமும் வத்தலாகிலும் வத்தலை நாலு குடுக்கைத் தண்ணீரிலவித்து அந்தத் தண்ணீரும் தேன் ஒரு காசிடை யிதுவெல்லாங் கலந்து குடிக்க மாறும்.

எலிகடிக்கு மருந்து:

புண்ணாக்கிலையும் கரும்பூளை.........ச்சமும் கருத்த வெள்ளாட்டுப்பால் வார்த்து மூன்று நாள் கொடுக்கவும். கார்ப்பு புளிப்பில்லாமல் தவிரவும். ஆரா உப்புக் கூட்டிக் கொள்ளவும்.

End :

சிற்றாமணக் கெண்ணெய் நாழி ஈரவெங்காயம் நாழி நட்டி எண்ணெயில் போட்டுக் கிண்டி அதன் பிறகு இருவகைப் பொடியும் போட்டுக் கலக்கி அடுப்பில் வைத்து அவியப்புடம் ஆக இறக்கிவைத்துக் கொண்டு செருப்படி யிலையும் கையாந்தகரையிலையும் கசக்கி எண்ணெயில் பிழிந்து கிண்டி சூரியபுடத்தில் வைத்துக் கொண்டு மூன்று நாள் கொடுக்க வயிறு நாலஞ்சுதரம் கழியும். அதன் பிறகு வெந்நீரில் குளிக்கப் போட்டு கஞ்சி கொள்ளவும் உப்பு புளிப்பா

காது. இந்த எண்ணெய் நாலஞ்சு மாதஞ் சென்றால் சூலிக ளுக்கு மாகும். பின்னை மேல் வியாதி தீரும்.

குறிப்பு:

மகாராஷ்டிர பாஷையில் எழுதிய மூன்று ஏடுகள் கடைசியில் சேர்க்கப்பட்டுள்ளன. பத்து வெற்றேடுகளும் இருக்கின்றன.

---

## 154. No. 108 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 92; Lines 6—7 in a Page.

இதில் நாடிலட்சணம், சுரலட்சணம், அவற்றிற்கு கஷாயம் கஞ்சி முதலிய வைகளும், சரக்கு சுத்தி, கோடா சொடிக் குளிகை, மேகநாதக்குளிகை, ஆனந்த பைரவன், ராமபாணக்குளிகை, சூரணம், தைலம், குடிநீர், நெய், லேகியம், கிருதம், ரசாயனம், முதலியவைகள் அநுபோக முறையாக எழுதப்பட்டிருப்பதோடு பெரும்பாடு கல்லெரிப்பு பிரமியம், குடல்வாதம், மூலங்கள், குட்டங்கள், காமாலை முதலியவைகளுக்கு மருந்துகளும் எழுதப்பட்டுள்ளன. ஆரம்பத்தில் பத்து ஏடுகள் கிரந்த சுலோகமும் தமிழுரையுமாகக் காணப்படுகின்றன. அச்சிடப்படவில்லை.

Beginning

திரிதோஷத்துக்கு கஷாயம்:

வேப்பனுக்கு பேய்ப்புடல் சிந்தில் தண்டு கடுகுரோகணி முத்தக்காசு நெல்லிமுள்ளி கடுக்காய் தான்றிக்காய் ஆக எட்டும் சமனெடுக்கக் கூட்டி எட்டில் ஒன்றாகக் காச்சி தேனும் சர்க்கரையும் கூட்டி ராத்திரி போசனத்துக்கு மேல் குடுக்கவும்.

எலிப்பாஷாண சுத்தம் கெவுரிப்பாஷாணசுத்தம்:

சீரகப்பொடி சீலையிலே முடிந்து வெந்த சுண்ணாம்புக்

கல்லே கலத்திலே எடுத்து நடுவே பாஷாணத்தை வைத்து மேலும் மூடி தண்ணீர் வார்த்து மூடி அந்த உஷ்ணமாறின பின்பு எடுத்து வைத்தால் பாஷாணம் சுத்தமாம்.

வாய்வு சூலேக்கு இங்குதி சூரணம்

சவியம் சிற்றரத்தை பேரரத்தை பெருமரப் பட்டை மஞ்சிட்டி பெருங்காயம் எண்ணெயிலே பொரித்து உள்ளித் தைலமும் சிற்றாமணக் கெண்ணெயும் கூட்டிக் கொள்ள வாத சூலே நிற்கும்.

**End:**

கண்ணுல (கல்யூாண) முருக்கம் பட்டை சுக்கு மிளகு திப்பிலி வெள்ளுள்ளி, சுண்ணும்பு, ஒட்டடையும் கூட்டி அரைத்து உருட்டிக் குடுக்கவும். பிரண்டையை வறுத்துப் பொடி பண்ணி பெருங்காயம் சுக்கு மிளகு திப்பிலி சீரகம் கருஞ்சீரகம் அசமதாகம் பொய்வறை கொண்டு கூட்டி மருந்து எல்லாம் பாதி பிரண்டை பாதியும் மோரிலாதல் வெந்நீரிலாதல் குடுக்கவும்.

வில்லு வாதி லேகியம்:

வில்லுவ வேர் மேல்பட்டை போக்கி முப்பது பலம் செதுக்கிப் போட்டுதூணி நீர் வார்த்து எட்டி லொன்றாய்க் காச்சி கஷாய நீரிலே முப்பது பலம் பழ வெல்லம்

---

## 155 (a) No. 109 நாடிவிதி.

ஏடுகள் 112; Lines 6—7 in a Page.

இதில் நாடிப்பரிட்சிக்கும் விதி சொல்லப்பட்டிருக்கிறது. செய்தவர் பெயர் தெரியவில்லை அச்சிடப்படவில்லை.

விரும்பியே உடல்களெங்கும் மேவியே கலந்து நிற்கும்
நரம்புறு நாடி தன்னை நல்லசாத்திரங்களெல்லாம்

திருந்தவே ஓதி ஓதி தெளிந்தனர் சொல்லா லுண்மை
அருந்தவ அறிஞர்முன்னே அறிவிலேனுரைக்கலுற்றேன்.

சொல்லிய உந்திக்கீழே சுழித்ததோர் எழுத்தைப்பற்றி
எல்லையிலெழுந்த நாடி எழுபத்தீராயிரங்கள்
வல்லதோர் தேவிபாதம் மகிழ்ந்துற ஓடி நிற்கும்
நல்லதோர் வியாதி மூன்று நாடியிற்கண்டு கொள்ளே.

ஊசிபோல் மூக்குநீண்டு உடம்பெல்லாம் நரம்பு தோன்றி
பாசிபோல் கண்சிவந்து பரந்த நீர் போதவாங்கில்
கூசிடவேண்டா மிந்தக் குறிகளுண்டான காலம்
சாவது திண்ணமென்று சடுதியில் விட்டுப்போகாய். 16

நாடிப்பரிட்சை முற்றும்

---

## 156 (b) முகநாடி

Lines 6—7 in a Page.

இது முகத்தையும் மூக்கில் ஓடும் சாத்தையும் பார்த்து வியாதியின் தன்மையை நிதானிப்பது அச்சிலில்லை.

வெள்ளிக்கிழமை உச்சிநேரம் இடதுநாசி ஓடும் சனிக்கிழமை வலது நாசியும் கண்ணுந்துடிக்கும் அதுசாவு. ஞாயிற்றிக்கிழமை விடிவெறு கைப்பிடித்துப் பார்த்தால் வாத நாடியானுல் மரணம். திங்கட்கிழமை இடதுநாசியும் கண்ணும் துடித்தால் நன்மை. செவ்வாய்க்கிழமை மத்தியானத்தில் முகத்தில் ரத்தபசை உண்டானுல் நன்மை முகங்கோணினுல் சாவு.

வியாழக்கிழமை மாடுகன்று சாயுறநேரம் நாடி
லட்சணம்பார்க்க வாதநாடி ஓடினுல் சந்தயப்படவேண்
டாம்.

---

157 (c) நடக்கைவிதி.

Lines 6 in a Page.

இது நோய் அணுகாதிருக்க வேண்டின் இவ்வாறு நடக்கவேண்டுமென விதிப்பது. அச்சிடப்படவில்லை.

Beginning:

கையில் ஏழும் ஒளியின்கணைஞ்சு
நாசியில் மூன்றும் நாவில் ரெண்டும்
தேயும் தேசறும் கூடப்பிரித்தல்
உச்சியிலுயிர்ப்பில்லாத தொன்றும்
உழை வளி வணங்காதிவிரண்டும்

ஈந்தெழு கோபத்தாலும் இளம் வெயில் காய்வதாலும்
தாங்கிய சுமையினாலும் சுறு சை யூறலாலும்
ஓங்கிய பசியினாலும் உண்டிமேல் உண்டியாலும்
தேங்கிய மலக்கட்டாலும் தீர நோய் சிமக்குந்தானே.

End:

விடிந்துடன் வெய்யில் காய்தல் விரைவுடன் பகற்பால் கூட்டல்

படிந்தெழுந்துற்ற மூத்த பைந்தொடி தன்னைச் சேர்தல்
கடந்துறு மிவைகள் வீழ்த்து கட்டுண்ட நீர்குடித்தல்
மடந்தையர் மணமே தோய்தல் வாலிவன் கிழவனுவன.

மாலையில் வெய்யில் காய்தல் வாலிப மடந்தை யாலும்
பாலை யிரவு கூட்டல் பரிமளங்கள் தோய்தல்
சீலமாமணத்தார் நாறும் தெளிந்தநீர் குடித்ததாலும்
மூலமாம் வயது நீங்கி முதுமைபோ யிளமையாமே.

நடக்கை விதி முற்றும்

## 158 (d) சுரநூல்

Lines 6—7 in a Page.

இதில் இன்னின்ன நட்சத்திரத்தில் சுரங்கண்டால் இன்னின்னவாறு முடியும் என்றுரைக்கப் பட்டிருக்கிறது. செய்யுளும் வசனமும் கலந்துள்ளன அச்சிடப்படவில்லை.

Beginning:

சுரநூல்

அசுபதி நாளுற்ற சுரமெட்டா நாளில்
உன்னியே விடுதல் செய்யுமுற்றதோர் பரணிநாளில்
அன்னிய சுரமே சொல்லும் அத்தன்றி விடுதலாகும்
பன்னிய கார்த்திகைநாள் பரிக்கிடுஞ் சுரத்தைச் சொல்
வேன்

End:

உத்திரட்டாதி நாள் பிடித்தசுரம் ஏழுநாள் வேதனை செய்யும் இருபத்தஞ்சாநாள் தீரும். ரேவதிநாள் பிடித்த சு-ரம் எட்டாநாள் கொல்லாவிட்டால் பத்தாநாள் தீரும்

சுரநூல் முற்றும்

---

## 159 (e) சுரங்களுக்கு மருந்து.

Lines 6—7 in a Page.

இதில் சுரங்களுக்கு குடிநீர் பூபதி உண்டை அக்கினி குமாரன் முதலியவைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

Beginning:

தாபசுரத்துக்கு குடிநீர்

சீந்திக்கொடி பற்பாடகம் கோரைக்கிழங்கு நிலவேம்பு செந்தொட்டி இருவேலி விளாமிச்சம்வேர் பொன்முசுட்

டைவேர் கொத்தமல்லி சுக்கு இவை சரிகூட்டி இடித்துக் குடிநீர் வைத்துக்குடுக்கவும்

பித்த அதிசார சுரத்துக்கு குடிநீர்

நெல்லிப்பருப்பு கோரைக்கிழங்கு சுக்கு சரிகூட்டிக் குடிநீர் வைத்துக்குடுக்கவும்.

**End :**

இரதம் பச்சைநாவி அரிதாரம் கெந்தகம் சுக்கு மிளகு திப்பிலி மஞ்ஞெசிலை கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் வெங்காரம் நவச்சாரம் நேர்வாளம் இவை சரிகூட்டிக் கரிப் பான் சாற்றில் ஒருசாமம் அரைத்துப் பருத்திவிதைப் பிர மாணம் உண்டை செய்து வைத்துக்கொண்டு இஞ்சிச்சாற்றி விடவும். கு......ந்தீரும் மற்றச்சகல வாதத்துக்கும் அந்தந்த மருந்து களுடனேகண்டு கூட்டிக் கொள்ளவும். அக்கினிகு மாரன் முற்றும்

---

160 (f) சன்னி பதின்மூன்றுக்கும் வகை

Lines 6—7 in a Page.

இதில் சன்னிகளின் பெயரும் அவற்றின் லட்சணமும் அவைகளுக்கு மருந்தும் சொல்லப்பட்டுள்ளன. அச்சிடப் படவில்லை.- பிழையதிகமாயிருக்கின்றன.

**Beginning**

சந்திகையுஞ் சாந்தகமு மனுத்திராகம்
  தாந்திரிகம் சீதாங்கம் கன்ன குப்பியம்
சிந்திடும் சித்தப்பிரமை ரத்த திருட்டி
  சிருமுகம் பிரலாபம் பக்கநேத்திரம்
கந்திடும் கண்டிகையும் அவிகாயமோடு
  கனக்கவுமோர் பதின்மூன்று சன்னிவாதம்

வந்திடுமே சுரமீதிலென்று தானும்
வையகத் தோர்க்கறிய வசனிப்பீரே.

End:

சுக்கு திப்பிலி கோஷ்டம் சந்தனம் தூதுவளை முருங் கைவேர் நொச்சி பிரமி இவை சரி கூட்டிக் கொள்ளத்தீ ரும் அவிகாய சன்னியே (25) வேறு. சித்தாமுட்டி, பேரா முட்டி, மூக்காவேளை வேர் சுக்கு மிளகு திப்பிலி கோஷ்டம் கருஞ்சீரகம் வெங்காரம் செவ்வள்ளிக் கொடி இவை சரி கூட்டி இரு நாழி நீர் விட்டு உழக்காய்க் காச்சிக் குடிக்க இதுக்குத் தீரும் ரத்த திஷ்டி சன்னியுமே. 26

சன்னி பதின் மூன்று எழுதி முடிந்தது.

---

## 161. (g) காதல்.

Lines 5 in a Page.

இது காக்கை பல்லி தும்மல் இவற்றின் பலாபலனை யுரைப்பது. ஒரே செய்யுள் எழுதப்பட்டிருக்கிறது.

காக்கை பல்லி சிறுதும்மல் கருமங் கருதியிருந்திடத்தே
எற்க வந்து இடஞ் சொன்னால் எல்லாக் கரும நன்றாகும்
ஆக்கங் பேசியிருந்திடத்தே அவரில்ஒன்றுவலஞ்சொன்னால்
நோக்கவேண்டாம் அறக்கருமம்நோய்கள்காட்டுங்கண்டீரே

நீயனுமலைவேதநீ
நீத வேடனுமாயநீ
நீயமாகரிகாலநீ
நீலகாளிகனுயநீ



## 162. (*h*) வைத்திய அட்டவணை

Lines 3—7 in a Page.

இதில் பாம்புக்கு வளையல், விஷத்திற்கு மந்திரம், கிரந்தி சுரம், குன்மம், நேத்திரவியாதி, முதலியவற்றிற்கு மருந்து, இளநீர்க்குழம்பு, செவ்வாக்கிய லேகியம், துளசித்தைலம், மூதண்டத்தைலம், ஏலாதித்தைலம், பூநாகச்சூரணம், சீரகத்தைலம், தூதுவளைக் கிருதம், சிவதை லேகியம் தூதுவளைப்பூத் திரட்டுப்பால் சண்டமாருத லேகியம் முதலிய முறைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. பிழையதிகமாயிருக்கிறது. அச்சிடப்படவில்லை.

Beginning:

பங்கம் பாளை கரிப்பாளை பாரி லவுரி மாதளையும்
பொங்கும் கன்னி மேல் குண்ணில் பொருந்துங் கழச்சித் திரளுடனே
தங்கை சிறியா நங்கை எட்டி சாற்றிற் கோடா சாலையுடன்
கங்கைக் கெருடன் கொடியுடனே கனத்த ஆடா தோடையிதே.

ஆடாதோடை கரு............அமாயும்பீர்க்கு கற்பூரவள்ளி
தாடாவேரு பதினாறும் சமனாய்க் கட்டிக் குளிசமதாய்
வாடாவளையல் தானாக்கி வருந்திக் கையி விடு வீராய்
தேடா நாக மெறி பாம்பு தீண்டா திருக்குந் திடந்தானே.

End

மதிக்கச் சண்ட மாருத லேகியமாகும். தான்றிக்காய் போல உண்டை செய்து கொடுக்கவும். பத்தியம் கைப்பு புளிப்பு புகை நீக்கிப் பத்தியத்துக்குக் கூட்டுகிறது கறி. உப்பு வறுத்துக் கூட்டவும். வாழைக்கச்சல் முருங்கைப் பிஞ்சு அவரைக்காய் வழுதலைக் கத்திரிப்பிஞ்சு நெய் பால் துவரம் பருப்பு. தூதுவளங்கீரை முளைத்தண்டு இலை வெல்

லாம் கூட்டிக் கொள்ளவும் காச நோய் தீரும். நாற்பது நாள் கொள்ளவும்.

---

## 163. No. 110 (a) வைத்திய சிந்தாமணி இரண்டாம் விலாசம்.

ஏடுகள் 170; Lines 5 in a Page.

இது வடமொழியில் சுலோகமாகச் செய்யப்பட்டுள்ள வைத்திய நூல் இதனை இயற்றியவர் வல்லபேந்திரர். இந்நூலின் தொடக்கத்துள்ள சுலோகத்தில் நோய்களாகிய பாம்புக் கூட்டத்துக்கு இது கெருடன் எனக்கூறப்பட்டுள்ளது. இது ஒரு சிறந்த வைத்திய நூலாகும். இந்தப்பிரதியில் உரையும் இருக்கின்றது. உரையாசிரியர் பெயர் தெரியவில்லை இது அச்சிடப்படவில்லை மிகவும் சிதைந்திருக்கிறது இதில் சுரம், சன்னிபாதம், பாரிசுவாய்வு, குட்டம், மூலம், பிரமேகம், நீர்க்கட்டு முதலிய வியாதிகளுக்கு மருந்துகள் எழுதப்பட்டுள்ளன.

Beginning:

சவக்காரம் தேன்கூட்டி எலுமிச்சம்பழச்சாறு கூட்டிக் கொப்பளிக்கவும். வெலந்தவங் திரிகடு ஹிம௦ம௨ டிம௦கணம நல்பரிதி ஒத்த நவரத்னமும் நலமான பஞ்சலோகமும்

End:

நரி எருமை யிருவாடு பரி கழுதை ஆவேணம் நல் காடி பல களிறை

பொர பரவுதாரம...............ஆமையோடு புங்கம் வித்துக லங்கொம்பு துத்தமும்

சங்குநுரை கபாலமும் சிப்பரவு இவை எல்லாந் தனி லொக் கக் கூட்டி

............ச் சாத்திக் மூன்று...............தனில் உலர்த்தி துப்பரவு மார்முலைப்

பால் பனங் கருகி யிதமான சாறு தேன் நெய் இதுகளில்
உரைத்து...............நயங்...........தீரும் ரத்ஞுதியே.

குறிப்பு:

இதன் 15-ம் ஏட்டில் 'இது ஆபஸ்தம்ப குலமாகிய அமுதசாகரத்துக்கு சந்திரனுகிய வல்லபேந்திரரது வைத்திய சிந்தாமணி ரசயோகம் இரண்டாம் விலாசம்' என்னும்சுலோகம் காணப்படுவதால் இதனை இயற்றியவர் வல்ல பேந்திரர் என்றறியக்கிடத்தல் காண்க.

---

## 164. (b) திரட்டுவாகடம்.

Lines 5 in a Page.

இதில் சுரங்களின் லட்சணமும் அவற்றிற்கு மருந்தும் சொல்லப்பட்டுள்ளன. 51. செய்யுட்களிருக்கின்றன. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. பிழையும் சிதைவும் அதிமகாயுள்ளன.

Beginning;

காலுச்சி யாதி யளவாகி நின்று கம்பித்து நிற்கு முடல்தான்
மேலிற் சுவாத முளதாகிய மேனியுங் கருத்து மெலிவாய்க்
கோலிச் சிற நிகள............கூறுடன் சிலேஷ்ம முளவாய்
மாலிற் சிறந்த மருவாயிலொரு கூறுவாதச் சுரத்தின்
வகையே. (க)

End:

முந்திரிகைப்பழம் பேரீஞ் சினீர்ங்கனி முன் சொன்ன பற்படகமுஞ்
சந்தன மிலாமிச்சை யிருவேலி வேரிநெடுதந்த நன்னாறிசுக்கும்
கொந்து மாடாதோடையிலை பூசணித்தண்டு குலவு பன்னிரு கழஞ்சி

லந்த வதை காச்சி மேற்றிப்பிலி மூலேப்பற் கலந்திடச் சன்
னிகெடுமே. (51)

---

165. (c) வைத்திய அட்டவணை.

Lines 5 in a Page.

இதில் கிரந்தமும் தமிழும் கலந்து எழுதப்பட்டிருக்கி
றது.

Beginning ;

திப்பிலாதி ரஸாயநம்:

திப்பிலிப் பொடி இரண்டுபடி இதில் பாதி சர்க்கரை வாய்விளங்கம் நாகசேசம் சிறு தேக்கு சீரகம் மிளகு இவை ஒரொன்று நாலு பலம் திப்பிலி மூலம் செவ்வியம் கொடுவேலி இவை மூன்றும் ஒவ்வொன்று இவ்விரண்டு பலம் லோகதிம ஸ்தம் இரண்டு பலம் கரி சலாங் கண்ணிப் பொடி இரண்டு பலம் இவை யெல்லாம் பொடி பண்ணிக் கொண்டு இதுக்குள்ளே இரண்டுபடி தேன் விட்டு ஒரு குடுவையில் வைத்துக் கொண்டு தினம் இரண்டு விராகனிடை கொள்ள க்ஷயம் காஸம் சிலேஷ்யம் இருமல் குல்மம் வாந்தி எல்லாம் குணமாம்.

சகலமான கதிக்கு ஏகமூலிகை மருந்து
நவநீதம் கடுக்காய் வல்லாரை கையாந்தகரைச்

---

166. (d) வாண முறைகள்.

Lines 5 in a Page.

Beginning :

ஆகச பாணத்துக்கு:

உப்பு 19 கந்தகம் 2 கரி 2.

பொட்டளை பாணத்துக்கு:

உப்பு 8 கெந்தகம் 1 கரி 2.

**End**

நில விரு சுக்கு:

உப்பு 12 கந்தகம் 2 கரி 2.

குறிப்பு:

இவைகளை யல்லாமல் சில வியாதிகளுக்கு மருந்துகளும் ஜால முறைகளும் சுலோகமும் உரையுமாக எழுதப்பட்டிருக்கிற பற்பசெந்தூரம் லேகிய தைல முதலிய முறைகளும் விஷமந்திரமும் எழுதப்பட்டிருக்கின்றன.

---

## 167. (e) கருடோப நிஷத்து.

Lines 5 in a Page.

இது அதர்வண வேதத்திருந்து எழுதப்பட்டிருக்கிறது.

(124-ம் பக்கமுதல் 126-ம் பக்கம் முடிய)

---

## 168. (f) வைத்திய அட்டவணை.

Lines 5 in a Page.

இதில் மணிப்பிரவாள நடையில் குன்மம் பிரமேகம் நீரிழிவு பிளவை சுரம் பெரும்பாடு கல்லெரிப்பு முதலியபல விதமான வியாதிகளுக்கு மருந்துகளும் பலவகை விஷங்களுக்கு முறிவும் நயன்ரோகத்துக்கு மருந்தும் எழுதப்பட்டுள்ளன.

**Beginning:**

இஞ்சிச்சாறு 2 எலுமிச்சம் பழச்சாறு 2 கொம்மட்டிக் காய்ச் சாறு 2 நொச்சிச்சாறு 2 அசமதாகம் வெள்வெங்கா

யம் பெருங்காயம் மிளகு இந்துப்பு வெந்தயம் நாய்க்கடுகு மஞ்சள் ஓ ரொன்று வாரகனிடை கடுகு பதத்தில் பண்ணிக் கொடுக்கவும் ஸகல வாயு குன்மந் தீரும்.

ஏனத்தின் கொம்பும் இரவறிவான் தன்னெலும்பும்
கூனல் முதுகுங் குருடன்றன் முன்னெலும்பும்
மானத்தின் மீனும் மான் கொம்புங் கூட்டிக்
கானக் குறத்தி முலைப் பாலிலுரை யிடவும்.
ஆணிப்பூ அன்றறுமே.

End :

இரதம் க பலம் எலிமருந்து க பலம் துத்தம் க பலம் இவை பொன் மத்தஞ் சாறு வார்த்தரைத்து குன்றிப் பிரமாணம் உண்டைபண்ணி இஞ்சிச் சாற்றி லாதல் சர்க்கரையி லாதல் இடுவது இதுக்கு சீத சுரம் தீரும். கோடா சூளி இரதம் கெந்தகம் வெங்காரம் பச்சை நாபம் சுக்கு மிளகு கடுக்காய் நெல்லிமுள்ளி தான்றிக்காய் சாதிலிங்கம் இவை ஓர் ஒன்று கழஞ்சு நேர்வாளம் பதின் கழஞ்சு இவை சுத்தி.

குறிப்பு:

இதில் மிகவும் சிதைந்து தூளாக முறிந்த அநேக ஏடுகள் இருக்கின்றன.

---

## 169. No. 111 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 120; மிகச்சிதிலமாயிருக்கின்றன
Lines 4—6 in a Page.

இதில் பலவகையான புண் அரையாப்பு கிரந்தி க்ஷேத்திர வியாதி முதலியவைகளுக்கு மருந்தும் வசியம் ஈடு சாலம் முதலியவைகளும் எழுதப்பட்டிருக்கின்றன. அச்சிடப்பட வில்லை.

**Beginning:**

..................க்கும் வேறும். ஆவாரம் கொழுந்து அரைச்சு.........நெய்யில் குழைச்சு இட இது சற்றுக் குளிர்ந்திருக்கும் இது நல்லது.

வெட்டு குத்துக்கு இழை யிடாதே ஆற்ற உபாயம்:

ஜாதி ஆன வெள்ளைக் குங்கிலியத்தை புண்ணுக்குத் தக்கது எலுமிச்சம் பழச்சாறு வார்த்து ஒரு நாழிகை அரைச்சு பின்பு அத்தை காண்டிகையாலே வழிச்சு அதிலே கால் காசளவு..................நல்லெண்ணெய்யைக் குத்திச் சாரிச்சு அத்தை வேறே ஒருவன் உள்ளங் கைகளிலே தடவி வெந்நீரை சற்றே சற்றே உள்ளங்கையிலே தெரிச்சு கை ஒடுகை தேய்க்க இப்படி ஒரு நாழிகை தேய்க்க அந்த தெளிச்சநீரெல்லாம் கையிலே சுவறும் கடுகக்கடுக காண்டி கையாலே கையிலும் வழிக்க வேணும் வெற வெறென்ன கையைப்பிடிச்சுக் கொண்டு விடும். ஆகையாலே கடுகிக் கடுகிக் காண்டிகையால் வழிச்சு * * * *

புண் எட்டு நாளையில் சதையுமிட்டு ஆறிவரும்.

End:

கண்ணோவுக்கு:

பசுவின் பால் பச்சையாய்க் கடைஞ்சு வெண்ணெய் எடுத்து இந்த வெண்ணெயும் சங்குப்பொடியும் கல் புறத்திலப்பி செம்பு கொண்டு தேய்த்திடவும் கண்ணோவு தீரும். கலைக் கொம்பை தேனிலுரைத்திட ஆணிப்பூ பறியும்.

* * * *.

...............வெண்ணெயிட்டுத் தேச்சு............தேன் வார்த்து

நன்றாகத் தேச்சு சிமிழில் அடைத்து கண்ணிலிட கண்ணோவு எல்லாந் தீரும்.

## 170. No. 112 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 103 மிகவும் சிதிலமாயிருக்கின்றன
Lines 5—6 in a Page.

இதில் சுக்கிலத்தம்பன முறைகள், பலவகை ஜாலங்கள், வசியப்போக்குகள், விஷமருந்துகள், ஈடுகள், கற்பங்கள், இரசவாதமுறை, எந்திரங்கள், சிலவியாதிகளுக்கு மருந்துகள் எழுதப்பட்டிருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

Beginning :

நெய்தல் கிழங்கு கொண்டுவந்து அரைத்து நெய்யும் பாலுங்கூட்டி அதில் பொடி போட்டுக் காச்சித்தின்ன சுக்கிலம் வர்த்திக்கும். பொன்னூமத்தம் வேரும் கழஞ்சு ரசமும் கல்வத்திற் போட்டு அரைத்து உண்டை பண்ணி திரிலோகிய சிமிழில் அடைத்து அரையில் இருக்க ஸ்தம்பனம்.

* * * *

செப்பு நெருஞ்சி வேர் வெள்ளைக் கொழிஞ்சி வேர் நிலவாகை வேர் இந்த மூன்றும் வேரு அரைத்து மேலே பூசி வெட்ட வெட்டாது.

* * * *

பேய்ச்சுரை விதையும் புங்கம்விதையும்பிர்க்கன் விதை அதிலுடை வேர் கோமூத்திரம் வார்த்தரைத்து உண்டை பண்ணி அந்த உண்டை கோமூத்திரத்தில் கொடுக்க சகல விஷமும் தீரும்.

**End :**

பிள்ளை யுண்டாம்.





## 171. No. 113 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 32; சிதலம் Lines 6—9 in a Page.

இதில் சோகை காமாலை ஈளை இருமல் எலிகடி மந்தாரகாசம் பிரமியம் நீரிழிவு எலும்புருக்கி பெருவயிறு, வயிற்றுக்கடுப்பு, கிராணி, பல்வலி முதலிய வியாதிகளுக்கு மருந்துகள் எழுதப்பட்டிருக்கின்றன அச்சிடப்படவில்லை.

Beginning:

மண்டூரம். தஞ்சாவூர் கிட்டம் பத்து வாளியில் புடம் போட்டுச் சிவந்த உடனே சட்டியிலே குறுணி கோமூத்திரத்திலே எடுத்துப் போடவும் இப்படி நூறு புடம் போட்டு அந்தக் கிட்டத்தை எடுத்து வைச்சுக் கொண்டு இதுக்குக் கடை சரக்கு சுக்கு மிளகு திப்பிலி..................கருஞ்சீரகம் ஓமம் குரோசாணி ஓமம் கடுக்காய்...........கொத்தமல்லி இவைகள் வகை ஒன்றுக்கு பலம் க. இடிச்சு சூரணம் பண்ணி மூன்று பங்கு கடைச்சரக்குக்கு ஒரு பங்கு கிட்டம் பொடி பண்ணிக் கலந்து மூவிரல் கொண்ட பொடி உழக்கு எருமை மோருடன் கலந்து குடிக்கவும்.

பெரு வயிற்றுக்கு:

நாலு கருணைக்கிழங்கு சிறுக நறுக்கி அரிசி உப்பு கூட்டி புடனே வேகவைத்து இறக்கிச் சோற்றை உண்ணத் தீரும். இது கண்டது.

**End :**

கெர்ப்ப விப்புருதி வலிக்கு:

வீட்டுக்குத்தூரமான நாள் முதல் வயிற்றைத் தூக்கி மேலே நோக்கி வலித்து பக்கம் கடுப்பெடுத்து சந்து வெட்டி விழுந்து போகிறுப்போலிருக்கும் இதுக்கு மருந்து ஒருபடி பசுவின்பால் இரண்டு பொங்கலான வேளை எரித்து வெள்ளை வெங்காயம் ஒருசேரை கூடப் போட்டுத்

துளாவிக்காச்சினால் களிபதம் ஆம் அந்த வேளையிலே யிறக்கிப் பனைவெல்லம் கடித்துக்கொண்டு தின்னவும். இதற்கு பசுவின் பாற்கஞ்சி உப்பில்லாமல் குடிக்கவும். கைப்பு புளிப்பு விடவும் கெர்ப்ப விப்புருதி தீரும் கண்டது.

குறிப்பு:

இதில், 25, 26, 27, 29. முதல் 34, 39. நெ. ஏடுகள் இல்லை.

---

## 172. No. 114 (a) ஈஸ்வரி பூசை.

ஏடுகள் 34; ஆபூர்த்தி Lines 4—6 in a Page.

அச்சிடப்படவில்லை.

Beginning ;

பூசை. வெள்ளை வஸ்த்திரம் உடுத்து பூத சுத்தி பண்ணி ஈஸ்வரிபூசை. பலகையில் சந்தனத்தால் பூசி சக்கரமிட மூலமந்திரத்தில் பதார்த்த சுத்தி பண்ணி சாமானியம்.......... ஸ்தாபித்து யோநி முத்திரை கொடுத்து ஜலம் புரோக்ஷிக்க கரநியாசம் பண்ணி அங்கநியாசம் அந்தரியாகம் பண்ணி சிறு விரலந்தமாக நெமித்து பிற்பாடு சிறு விரல் முதல் பெருவிரலந்தமாக

*　　*　　*　　*

*　　*　　*　　*

End:

இந்த மந்திரங்களினாலே வயிரவரையும் சத்தியையும் கெந்த புட்பங்களினாலே பூசை பண்ணி பின்பு கிழக்கு முதல் இந்திராய நம அக்கினியே நம யமாய நம நிருதி நம வருணாய நம வாயுவே நம குபேராய நம ஈசானாய நம என்றும் ஈசானத்திலே பிரமனே நம என்றும் நிருதியிலே விட்டுணுவே நம என்றும் பூசைபண்ணுவது. பின்பு

கிழக்கு முதல் அட்டபீடம் பூசைபண்ணும் படி காமரூப கிரியே நம மலைய கிரணிய நம கோலகாகிரியே நம குலாந்தக கிரயே நம சவுகாகிரயே நம ஒட்டியாகிரயே நம.

---

## 173. (b) வைத்திய அட்டவணை.

Lines 6—8 in a Page.

இதில் விரோசன மருந்துகளும், சுரம் விஷம், இருமல், குட்டம், நீரிழிவு, கண்ணோய்கள், மூலம், கல்லடைப்பு, கற்றாழை நாற்றம் முதலியவற்றிற்கு மருந்துகளும் தம்பன வேலை பனமுறைகளும் எழுதப்பட்டுள்ளன. அச்சிடப்படவில்லை.

Beginning:

மிளகரை கடுக்காய் ஒன்று மிருத்தவா மணக்கிரண்டு
வளமிகு வாளமேழு வருநீலிச் சாற்றில் கூட்டி
குளமகிழ் பழத்தில் தேனிற் கூடவோருண்டை கொண்டா
லளவறு சீதமேகும் ஆணதொர் குளிர்நீர் யாற்றே

இளநீர்க் குழம்பு

துத்தமிந்துப்பு மஞ்சள் துலங்கு கற்பூரஞ்சங்கு
பித்தரோகணி திப்பிலி பெருகுபல்கறை மிளகும்
பத்திலஞ்சனக்கல்லாழி நுரையொடு பளிங்குக்கல்லு
சத்தவாகாசகருடன் தனைச்சரியாகக்கூட்டே

காட்டியமருந்து தன்னை நறுநொச்சிற் சாறுமிக்க
காட்டிலுப்புலிச் சாறுற்ற கரும்பழம்புளிச்சாறெண்ணை
நீட்டுமிந்துப்பு நெய்யுந் தேன் தயிர் கருப்புக்கட்டி
கூட்டியே குழம்பதாக்கிக் கொடுங்கணிலிட்டுப்பாரே.

வேறு. முசுமுசுக்கை கிராம்பு ஏலம் பாலில் மூன்று நாள் கொள்ளவும் பெரும்பாடு நிற்கும்.

குறிப்பு :

இதில் உச்சிட்ட கணபதி மந்திரமும் 'கருமஞ்சிதையாது' 'வாக்குண்டாம்' என்னும் விநாயகர் தோத்திரப் பாடல்களும் தூதுவளையின் குணம் உரைக்கும் செய்யுளும், நோயணுகாவிதிகூறும் 'பாலுண்போம்' என்னும் பாடலும் இருக்கின்றன.

---

## 174. No. 115 வைத்திய அட்டவணை.

ஏடுகள் 66; சிதிலமாயிருக்கிறது Lines 4—5 in a Page.

இதில் சிற்சில வியாதிகளுக்கும், விஷகடிகளுக்கும் மருந்துகளும் காயகற்பமும் இரசவாதமும் சாலங்களும் எழுதப்பட்டிருக்கின்றன. ஏடுகளில் இலக்கம் போடப்படவில்லை அச்சிடப்படவில்லை.

Beginning:

................பூசிச்செல்ல மாற்றான் தோற்பான் தொ...ண இந்தப்பொடி நல்ல வெல்லத்தில் கொள்ள பஞ்ச குன்மம் நிற்கும். இப்பொடி பாலிற் கொள்ள வீரியமுண்டாம் இப்பொடி வெந்நீரிற் கொள்ள இருமற் போக்கும். உப்பு தவிரவும. முந்தின பொடியைத் தேனிற் கொள்ள உடம்பு இளைக்கும் இப்பொடி துளசிச்சாற்றில் கொள்ள சூலை போக்கும். இந்தவேர் தேனிலுரைத்திடக் கண்ணோவு நிற்கும்.

வெள்ளைச்சாரணை சமூலமும் வெள்ளைத்தூதுவளை சமூலமு: காட்டுப்பசளை சமூலமும் இதுமூன்றும்.........த்தியிடித்துத்தூளாக்கி மூனும் சமனுக நிறுத்து செம்புத்தகடு தட்டி அந்த மருந்தைப் பானையில்......வைத்து மருந்து கீழும் தகடுமேலும்.........யிப்படி அடுக்கு அடுக்காய் வைத்து............எல்லாம் அதின் மேலே போட்டு சட்டி

கவிழ்த்துச் சீலைமண்செய்து புகைபுறப்படாமல்............
புடமிட வெள்ளியாம்.

---

## 175. No. 116 சர்ப்பாரூடம்

ஏடுகள் 35; Lines 5—8 in a Page.

இதில் பாம்புகளின் பிறப்பு அவற்றின் சாதிபேதம் கடிவாயின்குறி விஷம் தீரும் தீராதென்பதை வருந்தூதனைக் கொண்டு அறியும் விதம் விஷங்களுக்கு மருந்துகள் இவைகள் எழுதப்பட்டிருக்கின்றன ஆசிரியர் பெயர் தெரியவில்லை முதலேடில்லை அச்சிடப்படவில்லை.

Beginning:

..............................................................................

...ருநூற்றேழிருபத்தெட்டுநாள் மிழுங்கு மென்ன
பருமிக்க நான்கு...வாம் பதினாறு நல்லமுட்டை
ஒருமிக்க பதினாறுந்தான் ஒத்துடன் பொரித்தே ஏறும் (3)

வாய்ப்புடை மறையோனாகில் மருவிய நாவிநாறும்
காப்புடை மன்னனாகில் கடிமலர்த் தாழைநாறும்
சேப்புடை செட்டியாகில் சிறந்த பாதிரியே நாறும்
கோப்புடை உழவனாகில் குலவிய இலுப்பைப்பூவே. (4)

பாதந்தொடிலோ தேளாகும் பரிவுங் கணைக்கால் நீர்ப்பாம்பு
சோதவயிறு மண்டலிபாந்துடருமங்கையகள் மப்பரிகுள்
எதில்மார்பு கருவழலை எலியேயாகும் வலமார்பு
ஏது மன்றியிருந்ததனைவிடாறும் விஷங்மளில்லை யின்னே. 21

End:

புடையன் மருந்து.

புடையன் கடித்து வீங்கினபின் பொருந்தப் பருத்தியிலை

இவைத்து

அடையப்பிழிந்து மேல்தடவியது தான் புலர்ந்தால் பின் தடவ அடையுங்கண்கள் மிகவாடி ஒதுங்கு விடங்கள் கடிவாயில் சடையதுடையார் திருவாணை சகத்தோராறியச் சொன் னேமே.

---

## 176. No, 117 (a) சித்திராரூடம்

ஏடுகள் 80; Lines 4—8 in a Page.

இது 24-ம் நம்பர் போன்றது. இதில் பாம்புக ளின் பிறப்பும் அவற்றின் வகையும் அவைகளின் கடி விஷத்திற்கு மருந்துகளும் சொல்லப்பட்டுள்ளன. 24-ஆம் நம்பர் பாயிரத்தில் 'திருப்பெயரேதெனின்—சர்ப்பசாஸ்திர மென்றுரை பகர்ந்தனர்—ஒத்த காவிய வியலுணர்ந் தோ ரே' எனவும் இந்த நம்பர் பாயிரத்தில் 'இந்நூலின் பெயர் யாதெனின் சித்திராரூட மென்றுரை செப்பின—ரொத்த காட்சி யுணர்வுடை யோரே' எனவும் பாடபேதம் காணப் படுகின்றது. இதனால் அக்காலத்தில் இந்நூலுக்கு இவ் விரண்டு பெயரும் வழங்கிற்றுப் போலும் என்று ஊகித்தற் கிடமாதல் அறிக. இதில் 150 செய்யுட்கள் இருக்கின்றன. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அச்சிடப்படவில்லை.

---

## 177. (b) சர்ப்பாரூடம்

Lines 8 in a Page.

இதில், பாம்புகளின் ஆதியுற்பத்தி அவற்றின் பெரும் பிரிவு ஒவ்வொன்றின் உட்பிரிவு 72 பாம்புகளின் பெயர், நிறம், ஆகாரம், மணம், வசிக்குமிடம், ஆடும்விதம், படத் திற் காணும்குறி, விஷப்பற்களின் பெயர், கடிவாயின் வடி வம், கடிவாயிற் பொசியும் நீரின் வர்ணம், வயது, கடித் தால் விஷம் மீளும் நாட்கள், மீளாத நாட்கள், விஷத்திற்கு

மந்திரங்கள் முதலியவைகள் எட்டு அத்தியாயங்களாகப் பகுத்து வசன நடையில் எழுதப்பட்டிருக்கின்றன. இது மிகவும் சிறந்த நூலாகக் காணப்படுகிறது. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. அச்சிடப்படவில்லை.

Beginning:

ஆதிபிரமாவின் வேள்வியிலே பிறந்தவர்கள் சர்ப்பராசர்கள் ஒன்பதுபேரும் யோகிகளாய்ச் சத்தியவாச கருமாய் பதினெண் பாஷைகளும் வல்லவர்களுமாய் தங்களை வழிபட்டு வந்த பேர்க்கு வேண்டின கருமம் முடித்துக்கொடுக்க வல்லவர்களுமாய்ப் ப............ண்ட உடலுமாய் ஆயிரந்தலையும் படமுமாயிருப்பார்கள். இவர்கள் பெயர் சேடன், அனந்தன், வாசுகி, தக்கன், கார்கோடன், பத்மன், மகாபத்மன், சங்கபாலன், குளிகன். ஆக இவர்கள் ஒன்பதுபேரும். சேடன் பூமியைத் தாங்கி நின்றான், மற்றுண்டான எட்டுப் பேரும் எட்டுத்திக்குக்கும் கடவுளாய் மாநாகமாக விருப்பார்கள் ஒன்பது பேர்க்கும் அவரவர் பேரினாலே சிரீகளும் உண்டாய் அவரவர்க்குப் பாரியாயிருப்பார்கள்

End:

பரமேசுரி கழுத்திலே பரமேசுரன் திருமங்கிலியம் பூட்டிட்டேனென்று தியானித்து நிற்கை நிற்கை சுவாகா என்று தவணையிடவும் தவணைமந்திரம் சொல்ல கொட்டிய சுண்ணும்பே குவளைக்கட்டிய பட்டுநூலே.................. ...........பட்டுப்போ சுவாமியானை.

---

## 178. No. 119 விஷவைத்தியம்

ஏடுகள் 38; அபூர்த்தி சிதிலம். Lines 4 in a Page.

இது 117-ம் நம்பர் போன்றது. ஆரம்பத்தில் 6 ஏடுகளில்லை அச்சிடப்படவில்லை.

Beginning :

...........,வசிகன் எலியும் ஒந்தியும் சூத்திரன் தவளை யும் இரை எடுக்கும் என்பது. இவர்கள் இருப்பிடம் மறை யோன் கோயிலிலிருக்கும், அரசன் மரத்திலே இருக்கும் வசிகன் மனையிலே இருக்கும். சூத்திரன் புற்றிலே இருக் கும் என்பது இவர்கள் நிறம் மறையோன் சிவப்பு அரசன் பொன்னிறம் வசிகன் பச்சை சூத்திரன் கறுப்பு என்பது.

End

சில விஷங்களெல்லாம் நாட்டெசன்றது கலந்து கண்டி ருந்த தெல்லாம், பாம்பு விஷம் மென்னையைக் கட்டி நின் றால் இலுப்பைக்கட்டியைப் பொடிசெய்து நெய்யில்.

---

## 179. No. 21 (a) சித்திராரூடம்.

ஏடுகள் 194; Lines 5 in a Page.

இது பாம்புகளின் பிறப்பு முதலியவற்றைச் சொல்ல தெனினும் 24, 117-ம் நம்பர்களின் வேறுபட்டது. நொண் டிச்சிந்தினல் பாடப்பட்டுள்ளது அச்சிடப்பட்டிருக்கிறது.

Beginning :

திருமருதூர் வளரும்-நாகலிங்கர்-சீர்பாத கமலமென் சிரத் தில் வைத்து
மருவுஞ் சித்திராரூடப்-பொருளினை.வகுத்துச்சொல் வே ளிந்த மகிதலத்தில்
புண்டரீகத்தி லுறைவோன்-படைத்ததில்-பொல்லாவிட செந் து வெல்லாமுமே
விண்டுரைக்க கேளுமினி- நல்லபாம்பு-விரியன் வழலை கொம் பேறி மூர்க்கன்
சாணகன் மூக்கன் புடையன்-மண்டலி-சவடி மயக்காா மண் ணுணிசாரை

வாணுனை வாட்டுஞ் செய்யா-னிருதலை-மணியன் சிலந்திபுலி
முகப்பூச்சி

End:

மாருக முடனுகப் பலவிஷம் மானிடர் தன்னைப்பற்றி வதை
செய்தால்
மந்திரதந்திரத்தால் தியானத்தால் மணியினுல் மருந்தினு
லெந்த விஷமும்
முந்திடும் விஷங்களெல்லாந்தீர்த்திடு முதியவர் சிறியவரென்
னு மிந்த
தண்டமிழிசை யொருநூறும் பருவமும் சரிவர வேயிருந்
துதான்வளர்ந்து
திருமகன் விளக்கம் பெற்றுப்பதினூறு சிறுவரைப் போனு
முத்திசெல்வர்தாமே.

முற்றும்

---

## 180. (*b*) சர்ப்பசாத்திரம்

Lines 5 in a Page.

இது 117-ம் நம்பர் உட்பிரிவாகிய (*a*) போன்றது
இதில் 218 செய்யுட்கள் இருக்கின்றன.

---

## 181. (*c*) விஷமருந்து அட்டவணை.

Lines 4—6 in a Page.

Beginning:

செய்யான் கடிக்கு மருந்து

கஞ்சாங் கோரை உள்ளிவசம்பு போட்டுச் சிறு நீரில்
அரைத்துச் சாறு கொண்டு உள்ளுக்குக் கொடுத்து அலலே
யிடவும்.

நட்டுவாய்க்காலிக்கு:

*சுணைப்புல்லும் உள்ளி வசம்பும் போட்டுச் சிறு நீரில் துவைத்துச் சாறு கொண்டு உள்ளுக்குக் குடுத்து நசியமிட்டுத் துவலையிடவும்.*

பெருவிரியன் கடிக்கு மருந்து:

*மிதிபாகல் சாறு மிளகு வறுத்துப் பொடி பண்ணி பாவின் நெய் யாழாக்கு விட்டு (க்கலந்து) குடிக்கத் தீரும்.*

விடத்துக் கெல்லாம் நசியம்:

*மிளகு வெள்ளுள்ளி மகிழங் கொட்டைப்பழம் பிசைந்து இலைக்கள்ளி வேப்பெண்ணெய் வெங்காரம் ரசம் இது சமனாய் எழுதாம் அரைத்து ஒரு சீலையிலூட்டி மூக்கில் நசியமிடத் தீரும். வேறு. விட மீறித்தலைக் கொண்டால் எருக்கிலைப்பழுப்பை எழிலை யடுக்கி பருத்தியிலை லவணம் இதுகளெல்லாம் சாறு வாப்பிழிந்து நசியம பண்ணத் தீரும்.*

---

182. (*d*) சித்திராரூடம்.

Lines 4—5 in a Page.

*இது 117-ம் நம்பர் உட்பிரிவாகிய (a) போன்றது. அதைப்போல வசனத்திலுள்ளது முழுவதும் மிருக்கின்றது.*

---

183. (*e*) சர்ப்பாரூடம்.

Lines 5 in a Page.

*இது 117-ம் நம்பர் உட்பிரிவாகிய (b) போன்றது. அதைப்போல வசனத்திலுள்ளது முழுவது மிருக்கின்றது.*

---

## அச்சுப்புத்தகங்கள்.

### No. 1 திருக்குறள் மணக்குடவருரை.

பக்கங்கள் 140; Lines 15—27 in a Page.

இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்று. இதி லுள்ள செய்யுட்கள் 68-ம் நம்பர் பிரதியைப் போன்றவை. ஆனால் பாடபேதம் காணப்படுவதோடு செய்யுட்களும் முன் பின்னாக மாறுபட்டுள்ளன. இவ்வுரை இயற்றியவர் மணக் குடவர் என்பவர். இவர் இந்நூலுக்கு உரையியற்றிய ஆசிரி யர் பதின்மருள் ஒருவராவார். இந்தப்பிரதியில் அறத்துப் பால் முடிய உரையுடனிருக்கிறது. இதனை அச்சிட்டவர் திரு நெல்வேலி வ. உ. சிதம்பரம்பிள்ளையவர்கள்.

**Beginning:**

அகர முதல எழுத்தெல்லாம் ; ஆதி
பகவன் முதற்றே யுலகு.

இதன் பொருள் :— எழுத்தெல்லாம் அகரம் முதல- எழுத்துக்களெல்லாம் அகரமாகிய எழுத்தைத் தமக்கு முத லாக உடையன ; (அவ்வண்ணமே) உலகு ஆதிபகவன் முதற்று-உலகம் ஆதியாகிய பகவனைத் தனக்கு முதலாக உ டைத்து.

உலககாரணன் ஆதி பகவனென்றார் க.

*     *     *     *     *

வேண்டுதல் வேண்டாமை யில்லான் அடிசேர்ந்தார்
யாண்டும் இடும்பை யிலர்.

இ. ள் :— வேண்டுதல் வேண்டாமை இல்லான் அடி- இன்பமும் வெகுளியும் இல்லாதானது திருவடியை, சேர்ந்

தார்—சேர்ந்தவர், யாண்டும் இடும்பை இலர்—எவ்விடத்தும் துன்பம் இல்லாதவர்.

காமமும் கோபமும் ஆகா என்றற்கு 'வேண்டுதல் வேண்டாமையில்லான்' என்று பெயரிட்டார் (இன்பமும் வெகுளியும்—காமமும் கோபமும்)

இது; கையறு கெடுமென்றது. 6

End

நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லல் படுவ தெவன்.

இ-ள:—நன்று ஆம் கால் நல்லவாக காண்பவர்—நன்மைவருங் காலத்து நன்றாகக் கண்டவர்கள், அன்று ஆம் கால் அல்லல் படுவது எவன்—தீமை வரும் காலத்து அல்லல் படுவது யாதினுக்கு?

அறிந்தவர்கள் வருவன வெல்லாம் இயல்பென்று கொள்ள வேண்டுமென்று இது கூறிற்று.

380 அறத்துப்பால் முடிந்தது.

---

## No. 2 இன்னிலை விருத்தியுரை.

பக்கங்கள் 96; Lines 22—27 in a Page.

இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்று. அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பாலையும் சுருங்க உரைப்பது. நாற்பத்தைந்து வெண்பாக்களை உடையது. இதனை இயற்றியவர் பொய்கையார் என்பவர். பொய்கையார் என்னும் பெயருடையவர் பலர் காணப்படுதலின் இவரைக் களவழி நாற்பதும், புற நானூற்றுச் செய்யுட்களும் இயற்றிய பொய்கையார் எனச்சிலரும், நாலாயிரப் பிரபந்தத்திலுள்ள முதற்றிருவந்தாதியை இயற்றிய வரெனச்சிலரும் இவ்

விருவருமல்லாத வேறொருவர் எனச்சிலரும் கூறுவர். இவ்வுண்மை ஆராயற்பாலது. இதற்கு விருத்தியுரை எழுதியச்சிட்டவர் திருநெல்வேலி, வ. உ. சிதம்பரம்பிள்ளை யவர்கள்.

Beginning :

'இன்னிலை' என்பது இனிமையாகிய நிலை எனப்படும். அஃது அன்மொழித் தொகையாய் அந்நிலையை அளிக்கும் இந்நூலுக்குப் பெயராயிற்று.

கடவுள் வாழ்த்து.

வேலற் றரீஇய விரிசடைப் பெம்மான்
வாலிழை பாகத் தமரிய கொழுவேற்
கூற்றங் கதழ்ந்தெறி கொன்றையன்
கூட்டா வுலகம் கெழீஇய மலிந்தே.

அநுவயம்:—வேலனைத் தரீஇய விரிசடைப் பெம்மான், வால்இழை பாகத்து அமரிய கொழு வேலையுடைய கூற்றத்தைக் கதழ்ந்து எறிந்த கொன்றையன் கூட்டாக உலகம் மலிந்து கெழீஇய.

பதவுரை:—வேலன்—வேலாயுதத்தை யுடைய முருகனை, தரீஇய - தந்த, விரிசடை - விரிந்த சடையுடைய பெம்மான் - பெருமானும், வால் இழை - ஒளிபொருந்திய ஆபரணத்தையுடைய உமாதேவியினது, பாகத்து - வலப்பாகத்தில், அமரிய - அமர்ந்த, கொழு - சிறந்த, வேல் - வேலாயுதத்தையுடைய, கூற்றம் - எமனை, கதழ்ந்து - கோபித்து, எறி - எறிந்த கொன்றையன் - கொன்றைமலரைச் சூடியவனுமாகிய சிவபிரான், கூட்டாக - துணையாக, உலகம் - எல்லா வுலகங்களும், மலிந்து - பெருகி, கெழீஇய - விளங்கின.

End:

விசேடவுரை:— மெய்ப்பொருளை யுணர்ந்தோர் பின்னர்ப் பிறப்பினையடையாரென்பது, "ஓர்த் துள்ளம் உள்ளதுணரின் ஒரு தலையாப், பேர்த்துள்ள வேண்டா பிறப்பு" என்னும் திருக்குறளால் விளங்கும். ஏகாரம் தேற்றத்தின் கண் வந்தது. 'உம்' உந்தாகிப் பெயர்க்குந்து என நின்றது. இழிந்த பகுதிகள்—காமம், வெகுளி, மயக்கம். பொன்று வுணர்வா என்றும், வானுய்ந்தார் என்றும் பாடம் 6.

துறவியல் முற்றிற்று.

வீட்டிலக்கப்பால் முற்றிற்று.

இன்னிலை மூலமும் உரையும் முற்றுப்பெற்றன.

---

## No. 3 மெய்யறம் அரும்பத உரையுடன்.

பக்கங்கள் 72 ; Lines 14 in a Page.

'வள்ளுவர் மறையின் வழிநூல் மெய்யறம்' என்று இந்நூலாசிரியர் கூறுவர், இது ஒவ்வொரு அதிகாரமும் பப்பத்து செந்துறையான் அமைக்கப்பட்டுள்ளது. 125-அதிகாரங்களை உடையது. மாணவரியல், இல்வாழ்வியல், அரசியல், அந்தணவியல், மெய்யியல் என்னும் ஐந்து இயல்களால் தற்கால இயல்புக்கேற்றவாறு புருஷார்த்தங்களைக் கூறிச்செல்வது. இயற்றியவர் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள்.

Beginning:

மாணவரியல்.

முதல் அதிகாரம்—மாணவர் கடமை.

மாண்பெற முயல்பவர் மாணவ ராவர். க

ஆணும் பெண்ணு மதுசெய வுரியர். உ

இளமைப் பருவ மியைக்க தகற்கே. ௩
மற்றைய பருவமும் வரைநிலை யிலவே. ௪
அவர்கடன் விதியிய லறிந்துநன் ருற்றல். ௫
அன்னைதந் தையரை யாதியைத் தொழுதல். ௬
தீயினம் விலக்கி நல்லினஞ் சேர்தல். ௭
தக்கவா சிரியராற் றன்னிய லறிதல் ௮
ஒழுக்கமுங் கல்வியு மொருங்குகைக் கொள்ளல் ௯
இறைவ னிலையினை யெய்திட முயறல். ௰

End:

125-ம் அதி - மேந்நிலை அடைதல்.

உயிரியல் விடமெய் யியலுறு முடனே. ௧௨௪௧
விடலே வீடது மெய்யறஞ் செயினும். ௧௨௪௨
மெய்யற மாந்தர் மிகைவிட வுதவல். ௧௨௪௩
ஒழுக்க வுயிர்மெய் யுணர்ந்திட வுதவல் ௧௨௪௪
உலகி லுயிர்க ணிலவுற வுதவல். ௧௨௪௫
இவ்வற மரசர்க் கியற்றுத லெளிது. ௧௨௪௬
அறிவ ரரச ராகுத லரிதோ ? ௧௨௪௭
அரசரை யாள்வ தமைச்சறி வன்றே ? ௧௨௪௮
அறிந்தில் வாழ்ந்துல காண்டறஞ் செய்க. ௧௨௪௯
அருள்கொடு மெய்யற மாற்றி மெய்யடைக. ௧௨௫௰

மெய்யியல் முற்றிற்று.

மெய்யறம் முற்றுப்பெற்றது.

---

## No. 4 மெய்யறிவு உரையுடன்

பக்கங்கள் 103 ; Lines 23—28 in a page.

இது, அறம் பொருள் வீடு என்பவற்றைப்பற்றித் தற்காலத்தார் கொண்டுள்ள பொய்யறிவைப் போக்குதலின் மெய்யறிவெனப் பெயர்பெற்ற தென்பர். தன்னையறிதல்

முதல் மெய்ந்நிலையடைதல் ஈறுகப் பத்து அதிகாரங்களைக் கொண்டது. நூறு வெண்பாக்களை உடையது. இதனை இயற்றியவர் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள். உரைசெய்தவர் பெயர் முதலியவை தெரியவில்லை.

**Beginning**

முதல் அதிகாரம்—தன்னை அறிதல்.

தன்னை யறிதல் தலைப்படுத்துங் கல்வியென
முன்னையவர் நன்கு மொழிந்திருந்து—மென்னை கொல்
தன்னை யறியாது சார்ந்துபல கண்டறியப்
பின்னையவ ருன்னல் பிடித்து. க

அநுவயம்:—தன்னை யறிதலே தலைப்படுத்தும் கல்வியென முன்னையவர் நன்கு மொழிந்திருந்தும் தன்னை யறியாது சார்ந்த வற்றைப் பிடித்துக் கண்டறியப் பின்னையவர் உன்னல் என்னை?

*　*　*　*

கருத்துரை:—உலகத்துப் பொருள்களின் இலக்கணங்களை யெல்லாம் கற்கத் தொடங்கு முன்னர் தனது இலக்கணங்களைக் கற்றுக்கொள்ளவேண்டும்.

கொல் அசை. பிரிநிலை ஏகாரம் தொக்கது.

**End**

நன்றறியு மாந்தரெலா நல்வினையைச் செய்துளத்தை
வென்றுநடு நின்றருளான் மெய்யுணர—வென்றுலக
மேம்படுமோ வன்றே நீ மெய்ந்நிலையை யெய்தினி
மேம்படுவா யஃதேமெய் வீடு.

அ-ம்:—செய்யுள் நடையே அநுவய நடை.

ப-ரை:—நன்று அறியும் - இது நன்மை இது தீமை என்று பகுத்து அறியும், மாந்தர் எலாம் - மனிதர்களெல்லாம், நல்வினையைச் செய்து - அறச்செயல்களைச் செய்து,

உளத்தை வென்று - மனத்தை ஜயித்து, நடுநின்று - நடுவு நிலை தவறாது ஒழுகி, அருளால் - கருணையால், மெய் உணா - கடவுளை உணருமாறு, என்று - எந்நாள், உலகம் மேம்படுமே - உலகமானது மேம்பாடு அடையுமோ, அன்றே நீ - அந்த நாளிலே நீ, மெய்நிலையை - கடவுட்டன்மையை, எய்தி - பூரணமாக அடைந்து, நனிமேம்படுவாய் - மிக மேம்பாடு அடைவாய், அஃதே மெய்வீடு - அம்மேம்பாடே மெய்யான முத்தி.

க-ரை:—பகுத்தறிவுடைய மனிதசமூகம் முழுவதும் நல்ல செயல்களையே செய்து மனத்தை அடக்கி நடுவு நிலைமையில் நின்று கருணையால் கடவுளை யுணருமாறு எந்நாளில் இவ்வுலகம் மேம்படுமோ அந்நாளிலே நீ கடவுட்டன்மையைப் பூரணமாக அடைந்து மேம்படுவாய். அம்மேம்பாடே மெய்வீடு.

மெய்யறிவு முற்றும்.

---

## No. 5 அகமேபுறம்

பக்கங்கள் 80 Lines 12—24 in a Page.

இது ஜேமஸ் ஆலன் இயற்றிய 'அகத்திலிருந்து புறம்' எனப் பொருள்படும் ஆங்கில நூலின் மொழிபெயர்ப்பு. ஜேமஸ் ஆலன் சரித்திரமும் இத்துடன் சேர்க்கப்பட்டுள்ளது. இதனை எழுதியவர் வ. உ. சிதம்பரம்பிள்ளையவர்கள்

Beginning :

அகமும் புறமும்

அகத்தை யொத்தே புறம் (வாழ்வு) அமைகின்றது. அகம் இடைவிடாது புறமாகிக் கொண்டிருக்கிறது. எதுவும் வெளிப்படாமல் இருப்பதில்லை. எதுமறை பட்டிருக்கிறதோ அது சிறிது காலத்திற்கு மட்டுமே மறைபட்டிருக்கிறது. அது முதிர்ந்து கடைசியாக வெளிப்பட்டே விடு

கிறது. வித்து மரம் மலர் கனி இவை ஒன்றின்பின் ஒன்றாகவும் ஒன்றிருந்து ஒன்றாகவும் எந்த முறையில் வெளிப்பட்டு நிலவுகின்றதோ அந்த முறையிலேயே பிரபஞ்சமும் நிலவுகின்றது.

End:

மெய்ப்பொருளை நேசிக்கிறவர்களே, உங்கள் மனத்தை ஒருங்கு செய்யுங்கள். எச்சரிக்கையோடும் ஆலோசனையோடும் உறுதியோடும் இருங்கள். உங்கள் முத்தி உங்கள் அருகில் இருக்கிறது; உங்கள் ஆயத்தமும் முயற்சியும் வேண்டுவன. நீங்கள் பத்துத் தவறினும் அதைரியப் படாதீர்கள்; நீங்கள் நூறுதடவை தவறினாலும் ஊக்கத்துடன் எழுந்து உங்கள் வழியைத் தொடருங்கள்; நீங்கள் ஆயிரம் தடவை தவறினும் தளர்ச்சி அடையாதீர்கள். சரியான மார்க்கத்தில் பிரவேசித்த பின்னர், அந்த மார்க்கத்தில் நின்று சிறிது தவறினும், வெற்றியடைதல் நிச்சயம்.

முதலில் யுத்தம்; முடிவில் வெற்றி. முதலில் வேலை; முடிவில் ஓய்வு. முதலில் எளிமை; முடிவில் வலிமை. தொடக்கத்தில் தாழ்ந்த வாழ்வு. யுத்தத்தின் சந்தடி, யுத்தத்தின் குழப்பம். இறுதியில் உயர்ந்த வாழ்வு. மௌனம், சாந்தி.

முற்று

---

## No. 6. வலிமைக்குமார்க்கம்

பக்கங்கள் 110 Lines 18—27 in a Page.

இது ஜேம்ஸ் ஆலன் என்பவர் எழுதிய 'எளிமையிலிருந்து வலிமைக்கு' என்னும் ஆங்கில நூலின் முதற் பாகத்தின் மொழிபெயர்ப்பு. இதனை மொழிபெயர்த்துத் தமிழில் எழுதியவர் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள்.

துன்பத்தின் கற்பனை.

Beginning ;

கவலையும் துன்பமும் துக்கமும் வாழ்க்கையின் சாயைகள். உலகம் முழுவதிலும் கவலையால் கலங்காத உயிரே இல்லை; துன்பத்தால் அடியாத மனமே யில்லை. துக்கத்தால் துளியாத கண்ணே இல்லை. உலகத்தில் பிணியும் மரணமுமாகிய எமதூதரால் உயிர்க்குயிராகிய உறவினர் பிரிக்கப்பட்டுத் துக்கமாகிய இருட்போர்வையால் மூடப்படாத குடும்பம் இல்லை. வலியதாகவும் எளிதில் அறுக்க முடியாததாகவும் தோன்றுகிற தீமை வலையில் சகல மனிதரும் முன்னர் சிக்கிப் பின்னர்க் கவலையாலும் துன்பத்தாலும் துக்கத்தாலும் வருந்துகின்றனர்.

End :

பாவம் செயல்பின் பரிந்திரங்கல் துன்பநெறி
ஏமநலகும் மெய்ஞ்ஞானம் இன்பநெறி—ஞால
உயிர்க்கெல்லாம் நன்றுற்ற ஓடிவரும் மெய்ஞ்ஞானம்
செயிர்க்கெல்லாம் வேராம் 'யான்' சென்று.

'யான்' உள்ளே யின்றாக இம்மண்ணீர் நீக்காற்று
வான் உள்ளே நிற்கின்ற வாலறிவாம்—தேன் உள்ளே
ஊறிப் பெருகியெங்கும் ஓடி நிறைந்துவெளி
ஏறப் பெருகிநிற்கும் இங்கு.

முற்றும்

---

## No. 7 மனம்போல வாழ்வு

பக்கங்கள் 80 ; Lines 17—33 in a Page.

இது, ஜேம்ஸ் ஆலன் இயற்றிய 'மனிதன் நினைப்பதுபோல வாழ்வு' என்னும் ஆங்கில நூலின் மொழிபெயர்ப்பு. இதனை மொழி பெயர்த்தெழுதியவர் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள்.

Beginning :

நினைப்பும் ஒழுக்கமும்

'மனம்' என்பதும் நினைப்பு என்பதும் ஒரே அர்த்தத்தைக் கொடுக்கும் சொற்கள். 'மனம் போல வாழ்வு' என்பது மனிதனது நினைப்புக்குத் தக்கவாறு அவனுடைய வாழ்வு அமைகின்றது என்பதாம். மனிதன் எவ்வாறு நினைக்கின்றானோ, அவ்வாறே அவனது ஆன்மா ஆகின்றது; மனிதன் எவ்வாறு நினைக்கின்றானோ அவ்வாறே அவனது வாழ்க்கையின் ஒவ்வொரு நிலையும் நிலைமையும் அமைகின்றன. மனிதன் எதனை நினைக்கின்றானோ அதன் வடிவை அடைகின்றான்; அவனது நினைப்புக்களின் தொகுதியே அவனுடைய ஒழுக்கம்.

End:

யான் இது முதல் எனது தந்தைபாற் செல்வதற்குச் சித்தமாகப் போகின்றேன், என்று கூறித் தமது வேலைகளை விட்டு நீங்கித் தமது மனைவியார் முதலியோர் களிப்படையும்படி பல நல்லகாரியங்களைப்பற்றி அவருடன் சம்பாஷித்துக் கொண்டிருந்து அம்மாதம் 24—ம் தேதி பரமபதம் அடைந்தனர். அவரது சரீரம் மேல் நாட்டு வழக்கப்படிக் கன்றி நமது நாட்டு வழக்கப்படி காஷ்டத்தில் வைத்துக் எரிக்கப்பட்டது. அவரது ஆவி அறிவு வடிவாக இன்றும் எங்கும் நிறைந்து விளங்குகின்றது.

முற்றிற்று.

---

## No. 8 பாடற்றிரட்டு.

பக்கங்கள் 112 ;Lines 19—37 in a Page.

இதில், வ. உ. சிதம்பரம்பிள்ளையவர்கள் சிறைச்சாலைக்குச் செல்வதற்கு முன்னும் சென்ற பிறகும் பாடிய செய்யுட்கள் திரட்டப்பட்டுள்ளன. முதற்பாகம் இரண்டாம்

பாகம் என்று இரண்டு பாகங்கள் இருக்கின்றன. அரும்பத வுரையும் கடைசியில் சேர்க்கப்பட்டுள்ளது.

Beginning:

சிவன்றன் குமரன் றிருமான் மருகன்
தவந்திகழ் நான்முகன் றன்னோ—டுவந்துவிளை
யாடும் பெருமா னறுமுகற்கு முன்வந்தோன்
பாடும் படியருள்க பா.

இல்லார்க் கிரங்கியுட னீவதுதா னீகையல்லா
தல்லார்க் களிப்பதகோ தன்றுரு—மல்லாம
னீவதனு னற்புகழு மீயாமை யாலிழிவு
மாவதுன்னி யீவதுமகோ தன்று.

End:

சைவசித் தாந்த சபைவாழ்க நம்மருமைச்
சைவசித் தாந்தத்தின் றாய்வாழ்க—வையத்
துயிரெல்லாம் வாழ்க உயர்ந்தசிவம் வாழ்க
பயிரெல்லாம் வாழ்க பணைத்து.

---

## No. 9 வள்ளியம்மை சரித்திரம் அரும்பதவுரையுடன்

பக்கங்கள் 80, Lines 20—38 in a Page.

இது, வ. உ. சிதம்பரம்பிள்ளையவர்கள் முதன் மனைவியார் வள்ளியம்மையின் சரித்திரத்தைக் கூறுவது. இதனை இயற்றியவர் எட்டயபுரம் சமஸ்தானம் கிழமுடிமன் சி. முத்துசுவாமிபிள்ளை.

Beginning:

செம்பொன் மகள்சேர் சிதம்பரவேள் முன்மனைவி
அன்புவடி வானவள்ளி யம்மைதான்—இம்பர்

மகராசி யென்பவள்தன் மாண்புரைக்கத் தந்தி
முகநாதன் தாள்பணிவேன் முன்பு

* * * *

சந்தஞ் செறியுந் தமிழ்மலையில் தண்முகில்பெய்
துந்துந் திரையோ டுறும்பொருநை—கந்தம்
கமழ்பூந் தடமுங் கழனியுமற் றெங்கும்
அமிழ்தாம் எனப்பரவும் ஆங்கு.

End :

நல்லறமும் வாழ்க நவையறவே ஞானிலத்தோர்
இல்லறமும் வாழ்க இனிதாகச்—சொல்லரிய
மேலவரும் வாழ்க அவர் மெய்ந்நெறியும் வாழ்க இவண்
சீலமதும் வாழ்க சிறந்து.

குறிப்பு:

இத்துடன் இவ்வம்மையின் மரணத்திற் கிரங்கி பலரும் விடுத்த அனுதாபக்கடிதங்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

---

## NO. 10 கன்றுங்கனியுதவும்.

பக்கங்கள் 72 Lines 16—29 in a Page.

இது, வள்ளியோர் மரபிற் பிறந்தவரும் வள்ளற்றன்மையுடையவராக இருப்பர் என்பதைப் பாரிமகளிர் சரித முகத்தால் உணர்த்தும் சிறந்த வசனநூல். இதில் பண்டைக்கால ஒழுக்க வழக்கங்களும், சிற்சில கிளைக்கதைகளும் நீதிகளும் காணப்படும். இதனை எழுதியவர் தஞ்சைக் கலியாணசுந்தரம் ஹைஸ்கூல் தமிழ்த் தலைமைப் பண்டிதர் எஸ். உலகநாதபிள்ளை என்பவர்.

Beginning :

புரிசைப் புறத்தினிற் சேரனுஞ் சோழனும் போர்புரிய
விரியச் சயங்கொண்ட போழ்தினில் யாபினி பீங்கிவனைப்

பரிசுக்கு நல்ல கவிபாடி ஞல்வரும் பாக்ய மென்றே
வரிசைத் தமிழ்புனை பாரியும் பாண்டியன் மண்டலமே.

தமிழ் மணங் கமழும் யாறும், தாமரை மலரும் பொய்கையும், கழுநீர் மணக்கும் ஓடையும், கயல் விளையாடும் ஏரியும் செறிதர, நீர்வள மிக்கு விதைத்த ஒன்று ஆயிரமாக விளைதலால், குடிகள்; பசியும், பிணியும் பகையுமின்றிக், கல்வியும் செல்வமும் மிக்குடையாராய் இன்புற்று வாழுதற்கிடமாய்ச் சிறந்து விளங்கும் பாண்டிவள நாட்டில்; உலக முழுதும் வரினும் வழங்கக் குறைபடா வளப்பம் வாய்ந்த பரம்பு நாட்டில், முடியுடைவேந்தர்க்கு மகட் கொடுத்தற்கு உரியராகிய உழுவித்துண்ணும் வேளாளர் மரபில் வேள்பாரி என்றொரு வள்ளல் இருந்தான்.

* * * *

வேளிர் தலைவனுக்கு வேட்கை மீதூர அறிவழிந்திட நினைக்கின்றான்.—கண்ணைப்பறிக்கின்ற இவ்வுரு விண்ணினின்றும் இறங்கிய மின் கொடியோ! மின்னலெனின், விண்ணில் இயங்கு வதல்லது, மண்ணிடை இயங்காதே! வானிலும் கண்டபொழுதே மறைவதன்றோ: அதற்கு மாறாக இந்நேரமளவும் விளங்கித் தோன்றலின் மின்னென்பது கூடாது; பிறிதொன்றாயிருத்தல்வேண்டும்; உற்று நோக்குவம் எனத் தன்கண்ணைத் துடைத்துக்கொண்டு பன்முறையும் நோக்கினான். மின்னலன்று; தாமரையும், ஆம்பலும், நீலமும், காந்தளும், முல்லையு மென்ற இன்னமலர்கள் காணப்படுகின்றன; இவை காணப்படுதலின், இவற்றான் இயன்ற தொரு மாலை என்பனேல், மலர்மாலை மணங்கமழ மல்லது, தண்ணிய அமுதென இன்னிசைபாடுமோ? பாடாதன்றோ? பாடுகின்றமையின், என்கண்ணை விட்டகலாத இவ்வுரு விண்ணுறை அணங்கோ? விஞ்சையர் மகளோ! வரைவளர் தெய்வமோ! தெரியவில்லை எனப், பலவாறு நினைந்து மயங்கு

